உ

சிவமயம்.

கூர்ம புராணத் துள்ள

# ஈசுவர கீதை.



திருப் பூ வணம், வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகா நந்த ஞா நாச்சார்ய ஸ்வாமிகள்

இயற்றிய

ரஹஸ்யார்த்த விளக்க உரை.

விலை ரூபாய் 2-50.

இராமநாதபுரம் ஜில்லா, திருப்பூவணம், வேதாந்த மடம்,
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றியன.

அச்சிட்டன.

1. வேதாந்த சாஸ்திர ரத்நாவலி 9 சேர்ந்தது 8 நூல்கள் கவி 1132 — 3—00
2. திரித் திரயம். ஈசுவர கீதை கவி 338. பகவத் கீதை கவி 545 பிரஹ்ம கீதை கவி 547 (ஆக கவி 1430) — 3—00
3. வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் 3 சேர்ந்தது விவேக சூடாமணி கவி 571, அஞ்ஞவதைப் பரணி கவி 494, பஞ்ச தசி கவி 796, மூன்று சேர்ந்து [கவி 1961 — 3—00
4. வாசிட்டம் கவி 2055. — 2—50
5. வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா [ஹிந்தி மொழி பெயர்ப்பு வசநம். — 2—50
6. விசார சாகரம் ஹிந்தி மொழி பெயர்ப்பு வசநம் — 2—50
7. கதா சரித் சாகரம் [சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு கதை வசநம் — 2—25

உரை நூல்.

8. நாநா ஜீவ வாதக் கட்டளை [சத்யார்த்தப் பிரகாசிகை உரை. — 2—00
9. கீதா சாரத் தாலாட்டு லகு சந்திரிகை உரை — 2—00
10. மேற்படி நக்ஷத்திர விளக்க உரை. — 0—25
11. மேற்படி, குறிப் புரை. — 0—25
12. சசி வந்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை. — 2—00
13. மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை. — 2—00
14. பக்தி (வைராக்ய) சதக பத உரை பொழிப் புரை — 1—50
15. மேற்படி உரை உதாரணக் கவி 103க்கு [பக்தி ரச உரை. — 1—00
16. வைராக்ய தீபம்; பத உரை, பொழிப் புரை — 0—50
17. மேற்படி உரை உதாரணக் கவி 73க்கு சுடர் உரை — 1—00
18. கைவல்ய நவநீத உரை உதாரணக்கவி 233க்கு [ஆதித்தன் உரை. — 2—50
19. ஞாநசாரம். பால போதிநி உரை. — 0—50
20. ஈசுவர கீதை ரஹஸ்யார்த்த விளக்க உரை. — 2—50
21. வேதாந்த சூடாமணி சந்தோஷ தாயிநி உரை — 4—00

மொழி பெயர்ப்பு நூல்.

22. ஹரிமீடே, ஹரி தத்துவ முக்தாவலி பத உரை [சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. — 0—75



ஸ்ரீ கிருஷ்ணாய பரப்பிரஹ்மணே நம:

கூர்ம புராணத் துள்ள

# ஈசுவர கீதை.

(சிவப் பிரகாசம்)



இது

இறும்பூதூரில்
சமாதியுற் றிலங்கும்
ஸ்ரீ தத்துவ ராய ஸ்வாமிகளால்
தமிழில் 338 கவி யாக
மொழி பெயர்க்கப்பட்டு

திருப்பூவணம், வேதாந்த மடாதிபதி
அஷ்ட வித விருதுகளோடு கூடிய,
சத சாஸ்திர கர்த்தா
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்
இயற்றிய,
ரஹஸ்யார்த்த விளக்க உரையுடன்

மதுரை
V. சுப்புராயலு நாயுடு பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

 1966 [விலை ரூ. 2-50.

# முகவுரை.

---

வியாச பகவான் இயற்றிய பதின் எண் புராணங்களுள், 2வது ஆக எண்ணப்படும் கூர்ம புராணமும் ஒன்றாம். அது, பிராஹ்மீ, பகவதீ. கௌரீ வைஷ்ணவீ என நான்கு சம்ஹிதை உடையதாம். அவற்றில், பிராஹ்மீ சம்ஹிதை மாத்திரம், பூர்வார்த்தம் 53 அத்தியாயமும், உத்தரார்த்தம் 46 அத்தியாயமும், ஆக 99 அத்தியாயத்தில், 5567 சுலோகம் உடையதாக விளங்குகின்றது. அதன் உத்தரார்த்தத்தில், ஈசுவர கீதை என்பது 11 அத்தியாயத்தில், 495 சுலோகம் உடையதாக விளங்குகின்றது. அது ஈசுவரன் நாராயண மூர்த்திக்கு திரு வாய் மலர்ந்தருளியது.

இவ் வளவு அருமை வாய்ந்த சமஸ்கிருதத்தில் உள்ள இதனை, இறும் பூதூரில் சமாதி கொண்டிலங்கும், ஸ்ரீ தத்துவராய ஸ்வாமிகள 338 செய்யுளில் தமிழில், மொழிபெயர்த்திருக்கின்றார்கள். இதனை இயற்றி முன்னூறு ஆண்டுகட்கு மேலாக இருக்கலாம். இத் தமிழ்க் கவிக்கு நாம், ரஹஸ்யார்த்த விளக்க உரை என்று ஓர் உரை இயற்றியிருக்கின்றோம்.

இரண்டும் சேர்த்து அச்சாகியிருக்கின்றது. இந்த உரை எழுதி நாற்பது வருஷம் ஆகியும், இப்போது தான் அச்சு வாஹநம் ஏறி வெளிவருகின்றது. இதற்கு வேறு ஒருவரும் உரை செய்யவில்லை. கோவிலூர் மடத்தில், 13வது நூலாக பாடம் நடக்கும் நூலாகும். பத உரை மட்டும் இருந்தால் போதும் என்னும் கருத்தால், பத உரை மட்டும் எழுதி யிருக்கின்றோம்.

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,
வேதாந்த மடம், திருப்பூவணம்.



## வியாச பகவான் செய்த பதின் எண் புராணம்.

1. அக்கினி புராணம் 383 அத்தியாயம் 8000 சுலோகம்.
2. கூர்ம புராணம் 6000 சுலோகம்.
3. கருட புராணம் 6000 சுலோகம்.
4. நாரத புராணம் 24000 சுலோகம்.
5. பத்ம புராணம் 626 அத்தியாயம் 48452 சுலோகம்.
6. பிரஹ்ம புராணம் 215 அத்தியாயம் 13783 சுலோகம்
7. பிரஹ்ம வைவர்த்த புராணம் 4 காண்டம் 12000 சுலோகம்.
8. பிரஹ்மாண்ட புராணம் 112 அத்தியாயம் 11000 சுலோகம்
9. பவிஷ்யத் புராணம் 4 பர்வம் 31000 சுலோகம்.
10. ஸ்ரீமத் பாகவத புராணம் 18000 சுலோகம்.
11. மத்ஸ்ய புராணம் 298 அத்தியாயம் 14062 சுலோகம்
12. மார்க்கண்டேய புராணம் 32000 சுலோகம்.
13. லிங்க புராணம் 11000 சுலோகம்.
14. வாமந புராணம் 14000 சுலோகம்.
15. வராஹ புராணம் 24000 சுலோகம்.
16. விஷ்ணு புராணம் 17000 சுலோகம்
17. சிவ மகா புராணம் (7)சம்ஹிதை 724000 சுலோகம்.
18. ஸ்காந்த மகா புராணம் 7 காண்டம் 81100 சுலோகம்.

ஆக பதின் எண் புராணமும் நால் நூற்று எட்டாயிரம் கிரந்தம் என்று சொல்லப்படுகிறது. சுலோகம் வேறு கிரந்தம் வேறு. எட்டு உயிர் எழுத்தாகச் சேர்த்தால் ஒரு கிரந்தம் ஆகும். முப்பத்து இரண்டு லக்ஷத்து அறுபத்து நாலாயிரம் உயிர் எழுத்து கொண்டது பதின் எண் புராணம் ஆகும், இந்தப் பதின் எண் புராணங்களையும் வியாசர் ஒருவரே செய்தார்.

## உப புராணம் 18.

1. ஸ்காந்த புராணம் 6 சம்ஹிதை 100000 சுலோகம்.
2. நர சிஹ்ம புராணம்.
3. பிருஹத் ஸ்வாயம்பு புராணம்.
4. சிவ புராணம்.
5. துர்வாச புராணம்.
6 நாரதீய புராணம்.
7. காபில புராணம்.
8. மாநவ புராணம்.
9. ஔசந புராணம்—உசநாவால் செய்யப்பட்டது.
10. ஆதி பிரஹ்ம புராணம்.
11. கல்கி புராணம்—வியாசர் செய்தது.
12. ஜைமிநீய புராணம்.
13. சாம்ப புராணம்.
14. வாயு புராணம்-வியாச தேவர் செய்தது.
15. சௌர புராணம்—த்வைபாயநர் செய்தது.
16.
17. பார்க்கவ புராணம் (கணேச புராணம்)
18. ஸ்ரீமத் தேவி பாகவதம்.

## உப புராணம் 18 பலர் செய்தனர்.

1. ஸ்காந்த புராணம் 6 சம்ஹிதை 100000 சுலோகம் 1
2. சிவ புராணம் 4
3. பார்க்கவ புராணம் (கணேச புராணம்) 17
4. நரசிஹ்ம புராணம் 2
5. ஆதி புராணம் 20 அத்தியாயம்-வியாசர் செய்தது 9
6. ஆதி பிரஹ்ம புராணம் 10



7. கல்கி புராணம்-வியாசர் செய்தது 11
8. ஜைமிநீய புராணம் 12
9. ஸ்ரீமத் தேவி பாகவத புராணம் 18
10. வாயு புராணம்-வியாசர் தேவர் செய்தது 14
11. சாம்ப புராணம் 13
12. சௌர புராணம்-த்வைபாயநர் செய்தது 15
13. சநத் குமார புராணம்—சநத் குமாரர் செய்தது 13
14. துர்வாச புராணம் 5
15. நாரதீய புராணம் 6
16 காபில புராணம் 7
17. மாநவ புராணம் 8
18. ஔசந புராணம் 9-உசநாவால் செய்யப்பட்டது.
19. வாசிட்ட லிங்க புராணம் 10
20. வாருண புராணம் 11
21. காளிகா புராணம் 12
22. சௌமிய புராணம் 14
23. பராசர புராணம்-பராசரர் செய்தது 16
24. நந்தி புராணம் 3

## உப புராண உப புராணம் பலர் இயற்றினர்.

1. சுதர்சந புராணம்
2. சூர்ய புராணம்
3. பிருஹத் ஸ்வயம்பு புராணம்.
4. மகா பாகவத தேவி புராணம்.
5. ஹரி வம்ச புராணம். 6. பிருஹத் தர்ம புராணம்.
7. ஆதி புராணம். 8. கல்கி புராணம்.

---

உப புராணம் 18.

1. ஸ்காந்த புராணம் 6 சம்ஹிதை 100000 சுலோகம்.
2. நர சிஹ்ம புராணம்.
3. பிருஹத் ஸ்வாயம்பு புராணம்.
4. சிவ புராணம்.
5. துர்வாச புராணம்.
6 நாரதீய புராணம்.
7. காபில புராணம்.
8. மானவ புராணம்.
9. ஔசந புராணம்—உசநாவால் செய்யப்பட்டது.
10. ஆதி பிரஹ்ம புராணம்.
11. கல்கி புராணம்—வியாசர் செய்தது.
12. ஜைமிநீய புராணம்.
13. சாம்ப புராணம்.
14. வாயு புராணம்-வியாச தேவர் செய்தது.
15. சௌர புராணம்—த்வைபாயநர் செய்தது.
16.
17. பார்க்கவ புராணம் (கணேச புராணம்)
18. ஸ்ரீமத் தேவி பாகவதம்.

உப புராணம் 18 பலர் செய்தனர்.

1. ஸ்காந்த புராணம் 6 சம்ஹிதை 100000 சுலோகம் 1
2. சிவ புராணம் 4
3. பார்க்கவ புராணம் (கணேச புராணம்) 17
4. நரசிஹ்ம புராணம் 2
5. ஆதி புராணம் 20 அத்தியாயம்-வியாசர் செய்தது 9
6. ஆதி பிரஹ்ம புராணம் 10



7. கல்கி புராணம்-வியாசர் செய்தது 11
8. ஜைமிநீய புராணம் 12
9. ஸ்ரீமத் தேவி பாகவத புராணம் 18
10. வாயு புராணம்-வியாசர் தேவர் செய்தது 14
11. சாம்ப புராணம் 13
12. சௌர புராணம்-த்வைபாயநர் செய்தது 15
13. சநத் குமார புராணம்—சநத் குமாரர் செய்தது 13
14. துர்வாச புராணம் 5
15. நாரதீய புராணம் 6
16 காபில புராணம் 7
17. மானவ புராணம் 8
18. ஔசந புராணம் 9–உசநாவால் செய்யப்பட்டது.
19. வாசிட்ட லிங்க புராணம் 10
20. வாருண புராணம் 11
21. காளிகா புராணம் 12
22. சௌமிய புராணம் 14
23. பராசர புராணம்-பராசரர் செய்தது 16
24. நந்தி புராணம் 3

உப புராண உப புராணம் பலர் இயற்றினர்.

1. சுதர்சந புராணம்
2. சூர்ய புராணம்
3. பிருஹத் ஸ்வயம்பு புராணம்.
4. மகா பாகவத தேவி புராணம்.
5. ஹரி வம்ச புராணம். 6. பிருஹத் தர்ம புராணம்.
7. ஆதி புராணம். 8. கல்கி புராணம்.

---

உப புராணம் 18.

1. ஸ்காந்த புராணம் 6 சம்ஹிதை 100000 சுலோகம்.
2. நர சிஹ்ம புராணம்.
3. பிருஹத் ஸ்வாயம்பு புராணம்.
4. சிவ புராணம்.
5. துர்வாச புராணம்.
6 நாரதிய புராணம்.
7. காபில புராணம்.
8. மாநவ புராணம்.
9. ஔசந புராணம்—உசநாவால் செய்யப்பட்டது.
10. ஆதி பிரஹ்ம புராணம்.
11. கல்கி புராணம்—வியாசர் செய்தது.
12. ஜைமிநீய புராணம்.
13. சாம்ப புராணம்.
14. வாயு புராணம்-வியாச தேவர் செய்தது.
15. சௌர புராணம்—த்வைபாயநர் செய்தது.
16.
17. பார்க்கவ புராணம் (கணேச புராணம்)
18. ஸ்ரீமத் தேவி பாகவதம்.

உப புராணம் 18 பலர் செய்தனர்.

1. ஸ்காந்த புராணம் 6 சம்ஹிதை 100000 சுலோகம் 1
2. சிவ புராணம் 4
3. பார்க்கவ புராணம் (கணேச புராணம்) 17
4. நரசிஹ்ம புராணம் 2
5. ஆதி புராணம் 20 அத்தியாயம்-வியாசர் செய்தது 9
6. ஆதி பிரஹ்ம புராணம் 10



7. கல்கி புராணம்-வியாசர் செய்தது 11
8. ஜைமிநீய புராணம் 12
9. ஸ்ரீமத் தேவி பாகவத புராணம் 18
10. வாயு புராணம்-வியாசர் தேவர் செய்தது 14
11. சாம்ப புராணம் 13
12. சௌர புராணம்-த்வைபாயநர் செய்தது 15
13. சநத் குமார புராணம்—சநத் குமாரர் செய்தது 13
14. துர்வாச புராணம் 5
15. நாரதிய புராணம் 6
16 காபில புராணம் 7
17. மாநவ புராணம் 8
18. ஔசந புராணம் 9-உசநாவால் செய்யப்பட்டது.
19. வாசிட்ட லிங்க புராணம் 10
20. வாருண புராணம் 11
21. காளிகா புராணம் 12
22. சௌமிய புராணம் 14
23. பராசர புராணம்-பராசரர் செய்தது 16
24. நந்தி புராணம் 3

உப புராண உப புராணம் பலர் இயற்றினர்.

1. சுதர்சந புராணம்
2. சூர்ய புராணம்
3. பிருஹத் ஸ்வயம்பு புராணம்.
4. மகா பாகவத தேவி புராணம்.
5. ஹரி வம்ச புராணம். 6. பிருஹத் தர்ம புராணம்.
7. ஆதி புராணம். 8. கல்கி புராணம்.

———

உ
சிவமயம்.

ஈசுவர கீதை கவி 338-க்குத் தலைப்புக் கவி 6.

## பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்.

1. இரு - பூதம் இல - முன்ம சிவ - பிரமநாதனுய் சூதமா கார் - அருந்த, இத்தபோ சொன்னவா தலை - பரம நார - ஏதுகா-அந்த திங்கள் சுட்ட, வரு - அரியு செய - கந்த வெல்க - துதி அந்த மால் உன்னைநீ கேச யாதொன், வானே-ஓ வா-அளவி பாயிரமுன் முப்பது சாங். கியயோ கம் மறை - அறைவ. உரு - இந்த மறைவு - அறி வென - யாதொர் ஆங்கவன் பந்த - உயிர் அயில் - இ ருளுடன்: உலகினில் அறிவினே முத்தியா னே - அறிவின் இன்பம் - எப் பொழு - இத் தன்மை, நரு - தான லா - கருமம் அழி யாதெங் ஆதலான் முனி - யாதொர் படி-அடுத்த, நல்லறிவு யாதொருபொர் படிகந்த ஆதலால் யாதொரு பொழுதி யோகம்.

2. யோக - பூ தங்களைவை யும் - யாதொ பொழு தியோ கந்தன்னை யாவன் யாதொர், யூ பூதங் கள் யாவ னெரு - பிற-ஆ றுப-ஆதல் அவ்வண்ணம் ஓங்கி யோகம், யாகயா தொன் - யோகம் அறையுமவ் எல்லாரு கண் ணின்-எல்லாரை பார்த்து. யாதொன்றை நானேமா எங் கும் ஆங் கவர் - சுத்தன் என்று - அன் றெண்பதைந்தே, சூக மூன்ருவதுசம பிரதாயம் முன்ன - நன் ருய் - இரண் டைப்பதும் நிகில - இந்திய - சகத். சாக - பர ஏக - பதி னைந்துநான்-காவதாம் பத்திமை-விரிந்த திங்கே, சகத் -



ஈங்கு சந்ததம் ஏகனு பத்தி - மறை பழு - கலை - ப டைத்- ஓ தும்-ஈ.

3, ஈது - வஞ் சமாயையொர் ஆலம்ப ஓதியா மூன் ருவ நித்த அறிவால், எல்லாவ காலமா கியபரம் படைப்ப பவன் யானும் இருப தொன்றே, சேதைந்தா வது - விஸ்வ ரூப-இவ் வள - எண்ண ஏவன்மா நித்தி கணமா, சிரபுண்ட தனதான ஞால - உற் பவநோயு ஆகாத துறவி மாதா, போது - உரு வோகண்டு மா-குரம் பை-பழுதில் ஆகமுறு கரண பரமா, போதனு இப்பிரம எந்தைநீ உன் னுரை தொழுத - ஒரு மறைய னந்த, ஆதிதே படை- யோகி அகிலவுல கரணம்யா ஓது மொலி எந்த கூடு, அம்- பவன் காமனீ உருப்ப- எங் தை-அளவி மேலதா நாற்ப தாறே.

4. ஆளுவ தாகுசிவ சத்திசெயல் காத அகி செய்- மேவி ஈங்கு கரிய, அமர் - எந்த கடை -தெய்வ வருண. மிக பொல்லா அருத்திசெய் தக்க மதியின், பாறு -வே மெரி- படவ பொருவில் - நிகழ் உற்பவ அந்நியமி பூதம் ஆதம், பல-தொல்-இருபத்தைந்து ஏழாவ தாம்தத்வ நிசபூதி அனிய சிர-சங், ஏறிந்த்ர ஞானமதி எண்-சித்தர் கற்பங்கள் ஏவலார் தக்க ஒன்ன, எந்தப்பி ஊற-மனம் ஆகவிவை ஒத்தமுக் தரும-அறி யாமை பின்னி, போறு - அவன் இரு பதாம் எட்டாம்ப்ர பஞ்ச-வருபகர்-சென்ம எந்த பாங்கா, பொன்று-சங் கை-இறைவ நுண்ணி-ஆ ர ண - மோக பாகம்-என்னை- பன் மூன்றேன்.

5. ஒன்பதாம் மாயாவி கா - நின் மல - என்னு யாதொன்று சோதி அன்றி, ஓது சின்மய எனந் தம்-சத்தி

மத்தியம் உடு - ஈனஞ் செய்யும் ஒப்ப, பன்-உலகம் புன்மய அப்பரம் எங்கு—முகம் மாசுபதி னெட்ட தாகும், பத்தாந் தத் துவதரிச னங்-துக்க ஒப்பரும் அறிவினில் நின்ம யோகி, என் – பேறு பங்கமில் மெத்த-ஆ தியு-தபன உதி யாமல் நித்த தாரா, எல்லாவே பதினுன்கு பதினெரா வது-யோகம் இடர்யோக ஒருகா - தானி, அன் - மயலி சுத்தமா அயர்வறு - தருக்கி - மனத் தால் - உள வாறு மறைவின், அரந்தை - படர் பல வாசி கூடி-தோ யமு-கந்த புரா-மந்த மந்த உகவே.

6. உக - அகற ஏச - இந் திய - ஓது தார் - விவத் இருது-தடி நீர் - வருத்தம், உன்னரும் தனி பங்க சக - மிக்க யாவர் - அந் நிய - அவம அப்ப சொன்ன, துக - நலம் ஆசிரம பிறி - பரியு எண் - ஏசில் எப்படி - பொய் பத்தி பன்னி, துயரு - துதி எத்தொழில் அடங்கு - துற் றுவ - என்னே என் பதத் சாம எந்த, இக பங்கம் ஈதெல் - கரு நீங்காத காமர - பொல் அரி - சிவண முனிவர் இந்த, எதம் - ஆதலி - நான்ம மரு - தன்ப ரா-ஈச யோகிகள் சனற்கு எந்தை, அக - ஏம வேருக ஒழி - ஓதம் தீதின் - மா மறை - மூவர் எண்ப தேழாம், ஆகமுந் நூற்றுமுப் பானெட்டு இவைபரமன் அடியவர்க் கருள முதமே.

முற்றும்.





# ஈசுவர கீதை.

## பாயிரம்.

### ரஹஸ்யார்த்த விளக்க உரை.

பூத மைந்தோ டிரவிமதி
　　புருட ஞகிப் புணர்ந்தென்றும்,
பேத மில்லா வறிவுருவாய்ப்
　　பிறங்கு கின்ற பேரோளியோன்,
ஆதி மூவர்க் கறிவரியோன்
　　அரிவை பாகன் ஆமமலன்,
பாத பங்க யங்கடலே
　　வைத்தே பணியும் பரிசினஞல். (1)

(இதன் பொருள்) பூதம் ஐந்தோடு (பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னப்பட்ட) பஞ்ச பூதங்களோடு, இரவி - (சகஸ்திர கிரணங்களை யுடைய) சூரியனும், மதி - சோடச (கலைகளை யுடைய) சந்திரனும், புருடன் ஆகி - சித்தும் ஆகிய (அஷ்ட மங்கள மூர்த்த மாக), புணர்ந்து - பொருந்தியும், என்றும் - காலத் திரயத்திலும். பேதம் இல்லா - பேதிக்கப்படாத, அறிவு - ஆத்ம, (ஜீவ) உருவு ஆய் - ஸ்வருப மாகியும், பிறங்குகின்ற - விளங்காநின்ற பேர் ஒளியோன் - (பூரணப்) பிரகாச சொரூபத்தை யுடையவனும், ஆதி மூவர்க்கு-முதன்மையாகிய (பிரம்மா விஷ்ணு ருத்திரன் ஆகிய) மும் மூர்த்திகளாலும், அறிவு அரியோன் - அறியப்படாதவனும், அரிவை - உமா மகேசு வரியை, பாகன் ஆம் - இடப் பாகத்தில் உள்ளவனும், அமலன் - நிர்மல ஸ்வரூபனும் (ஆகிய பரமேசுரன்). பாத பங்கயங்கள் – (தமது) திரு வடி யாகிய தாமரை மலர்களை,

தலை வைத்து - சிரசின் மீது வைத்து, பணியும் - வணங்கும், பரிசினன் - தன்மையை யுடையவரு மாவர் (இப்படிப்பட்ட பரம் பொருளை திரி கரணங்களாலும் வணங்குவாம்.) எ—று. (ஏ - ஆல் அசை) (1)

இலங்கிய மறைகளு நான்கு
　　மியம்புதற்கியலா தென்ன,
மலங்கிய சிந்தை யோடு
　　வானவர் மூவர் நிற்க,
விலங்கியல் அனைய வென்னை
　　வேதகஞ் செய்தென் னுள்ளே.
துலங்கிய சொரூபா நந்தன்
　　றுணையடி தொழுதல் செய்வாம். (2)

(இ—ள்) இலங்கிய - விளங்காநின்ற, மறைகள் - வேதங்கள், நான்கும் - (இருக் யசுர் சாமம் அதர்வணம் ஆகிய) நான்கும், இயம்புதற்கு-கோசரித்திற்கு, இயலாது - முடியாது, என்ன - எனவும், வானவர் - தேவர்களும். மூவர் - (பிரம்மா விஷ்ணு ருத்திரன் ஆகிய) மும் மூர்த்திகளும், மலங்கிய - கலக்கத்தினை யுடைய, சிந்தையோடும் - மநதோடும். நிற்க - இருக்கவும், விலங்கு - மிருகத்துக்கு இயல் அனைய —சமமான புத்தியினை யுடைய, என்னை - (நாயினும் கடையே னாகிய அடியேனை ஒரு பொருளாகக் கருதி), வேதகம் செய்து - மாற்றி (உபதேசஞ்) செய்து, என் உள்ளே - எனது இருதயத்தின் கண்ணே, துலங்கிய - விளங்காநின்ற, *சொரூபாநந்தன் - சொரூபாநந்த ஸ்வாமிகளது, துணை அடி - உபய திருவடியை, தொழுதல் செய்வாம் - (முக் கரணங்களாலும்) வணங்கு வாம். எ—று (2)



முன்மதி யணிந்த செக்கர்நன் மவுலி
　　முதல்வனே யென்னமுன் னின்று,
நன்மதி முநிவர் கேட்பவன் போடு
　　நல்கிய நான்மறைப் பொருளைப்,
புன்மதிச் சொலவும் பொருளுமொன் றுணரேன்
　　போதகஞ் செயப்புகு மிதுகண்,
டென்மதி யெனக்கே நகைசெயு மானு
　　லேதிலார்க் கென்செயா திதுவே. (3)

(இ—ள்) முன் மதி - மூன்றும் பிறையினை, அணிந்த - தரித்த, செக்கர் - செவ் வானம் (போன்ற), நல் மவுலி - பிரகாசம் பொருந்திய ஜடா பாரத்தினை யுடைய, முதல்வனே - ப ரம சிவனே, என்ன - என்று, முன் நின்று - சந்நிதாநத்தி லிருந்து, நன் மதி - மேன்மை பொருந்திய புத்தியினை யுடைய, முநிவர் - ரிஷிகள், கேட்ப - வினவ, அன்போடும் - பிரியத்தோடும், நல்கிய - உபதேசித்த, நால் மறை பொருளை - நான்கு வேதங்களின் அர்த்தத்தினை, புன் மதி - இழிவு பொருந்திய புத்தியினுல் (அடியேன்), சொல - சொல்லுதற்கு, பொருளும் - அர்த்தத்தினையும். ஒன்று உம் - ஒன்றினையும், உணரேன் - அறியாதவ னாகிய யான், போதகம் - உபதேசம், செய புகும் - செய்யப் போகும், இது கண்டு - இதைப் பார்த்து என் மதி - எனது புத்தி, எனக்கே - எனக்கே, நகை செயுமானுல்—சிரிப்பினை உண்டாக்கு மாயின், ஏதிலார்க்கு - மற்றையோர்களுக்கு, இது என் செயாது—இது ஏன் நகைத்ததற்கு இடமாகாது. அவையடக்கம் கூறப் புகுந்தமையின் இங்ஙனம் கூறிய தாம். (எ—று)

உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது ஏ-அசை (3)

சிவன்றிரு வுருவு கொண்டுமுன் பருளிச்
செய்ததோர் புராணமா தலினூற்,
சிவன்றனை யளித்த பரன்றிரு நாமஞ்
சிவப்பிர காசமா மதனூற்,
சிவந்தசெந் தமிழா லியார்க்குமின் னிலத்தே
சிவந்தனைத் திகழ்த்திடுந் தெளிவாற்,
சிவன்றனக் குரிய தாதலா னுமஞ்
சிவப்பிர காசமென் றுரைப்பாம். (4)

(இ—ள்) சிவன் - (பரம)சிவன், திரு உருவு கொண்டு - திவ்ய மங்கள மூர்த்த மாக எழுந்தருளி வந்து, முன்பு - பூர்வம் (கூர்ம நாராயணருக்கு), அருளிச் செய்தது - உபதேசித்த, ஓர் - ஒப்பற்ற, புராணம் ஆதலினால் - புராண மாதலினாலும், சிவன்தனை யளித்த - சிவனையே கொடுத்த, பரன் திரு நாமம் - ஆசிரியருடைய அழகிய பெயர், சிவப் பிரகாசம் ஆம் - சிவப்பிரகாசம் ஆகும், அதனால் - ஆனதினாலும், யார்க்கும் - (உத்தமன் மத்திமன் அதமன் ஆகிய, அதிகாரிகளுக்கு, சிவந்த - சிறப்புப் பொருந்திய, செம் தமிழால் - செவ்வை யான தமிழில், இன் னிலத்து - இப் பூமியின்கண், சிவந்தனை - சிவனை, திகழ்த்திடும் - விளக்கும். தெளிவால் - தன்மையினாலேயும், சிவன் தனக்கு - சிவனுக்கே, உரியது - உரித்தாயது, ஆதலால் - ஆனதாலும், நாமம்—(இந் நூலின்)பெயர், சிவப் பிரகாசம்- சிவப் பிரகாசம், என்று உரைப் பாம்—என்று கூறு வாம். (எ—று) ‘சிவன்தனை’ ‘சிவந்தனை’ ‘சிவன் தனக்கு’ என்பவற்றில், தன் - தன் - தன் - மூன்றும் அசை (4)

பாயிரம் முற்றிற்று.



ஈசுவர கீதை.

## 1. இருடிகள் வினவும் அத்தியாயம்.

பிரமரண் டங்கள் படைத்தவப் பரிசும்
பெருமையு மநுக்களெல் லைகளும்,
வரமுற வுரைத்தாய் வளம்பெற வதிலே
வாய்மையால் வருணநான் கினினுங்,
தருமதற் பரராய் ஞான யோகத்தே
சாலவா தரிப்பவர் தம்மாற்,
றிறமுறப் பரவுந் தேவதே வர்க்குந்
தேவனுண் டென்றுசெப் பினையால். (1)

(இ—ள்) பிரமர் அண்டங்கள் - பிரமாண்டங்களை, படைத்த - சிருட்டித்த, அப் பரிசும் - அந்தத் தன்மையினையும், பெருமையும் - (அதனது) விஸ்தாரத்தினையும், மநுக்கள் - (அந் தந்த) மநுக்களினது, எல்லைகளும் - வரம்புகளையும், வரம் உற - சிரேஷ்ட மாக, உரைத்தாய் - கூறினீர், வளம் பெற - வளப்பம் பொருந்திய, அதில் - அதில், வாய்மையால்-பரிசுத்த மான தன்மையினால், வருண நான்கினினும் - நான்கு வருணத்தவரும், தரும தற்பரர் ஆய்-தருமங்களை அநுஷ்டிப்பவர்களாய், ஞான யோகத்து— ஞான யோகத்தினை, சால ஆதரிப்பவர்தம்மால்—மிகுதி யாக அநுஷ்டிப்பவர்களால், திறம் உற-திட மாகப் பொருந்தி, பரவும்—தோத்தரிக்கும், தேவ தேவர்க்கும்—தேவாதி தேவர்களுக்கும், தேவன் உண்டு என்று - தேவ னாகிய வஸ்த்து ஒன்று இருக்கின்ற தென்று, செப்பினை - கூறினீர். (எ-று.)
தம் - ஏ - ஆல் - அசை. (1)

நாதனு யரிய நான்மறை தெரிந்து
நன்னெறி யளிக்குநா ரணனும்,

ஆதவ முநிபா லறிவெலா மறிந்தா
யாதலா லரும்பரந் திகழ்த்தி,
யேதமார் பிறவி யறுப்பதா ஞாந
மேதது வியம்புவா யென்று,
சூதமா முநியைச் சௌநகன் முதலாந்
தொல்லைமா முநிவர்கள் சொன்னுர். (2)

(இ—ள்) நாதன் ஆய் - தலைவ னுகி, அரிய -(அநதி காரிகளால் அறிதற்கு) அரிய, நால் மறை தெரிந்து-நான்கு வேதங்களையும் உணர்ந்து, நல் நெறி - நல்ல மார்க்கத்தை, அளிக்கும் - உபதேசிக்கும், நாரணன் ஆம் - விஷ்ணு அம்ச மாகிய, ஆ தவ முநிபால்-மிகுந்த தவத்தினை யுடைய வியாச பகவானிடத்து, அறிவு எலாம்-அறியத் தக்கவை அனைத்தினையும், அறிந்தாய் - அறிந்து இருக்கின்றீர், ஆதலால் - ஆனபடியினுல், அரும் பரம் - அருமை யான பிரமத்தினை, திகழ்த்தி - விளக்குவீர், ஏதம் ஆர் - குற்றம் பொருந்திய, பிறவி - ஜந்மத்தினை, அறுப்பது ஆம்-நிவிர்த்திப்ப தாகிய, ஞாநம் ஏது - ஞாநம் யாதோ, அது—அதனை, இயம்புவாய் - உபதேசிப்பீர், என்று - என, சூத மா முநியை - சூத மஹா ரிஷியைப் (பார்த்து), சௌநகன் முதல் ஆம் - சௌநகன் முத லாகிய, தொல்லை மா முநிவர் கள் - பழமை யான பெரிய ரிஷிகள், சொன்னுர் - விண்ணப்பம் செய்தார்கள், எ—று (2)

சூத மாமுநி முநிவர்கள்
சொன்னவா கேட்டுப்,
போத மாநெறி யளித்த நற்
புராணனை நினைவுற்,



றோது வானொருப் படவவன்
றனக்குணர் வளித்த,
நாத னுகிய வியாதனு
முறைவிட நடந்தான். (3)

(இ—ள்) சூத மா முநி - சூத மஹா ரிஷியும், முநிவர்கள் - (சௌநகாதி) ரிஷிகள், சொன்ன ஆ (று) - கூறியவற்றை, கேட்டு - சிரவணித்து, போதம் ஆம் நெறி - ஞாந மார்க்கத்தை, அளித்த - உபதேசித்த, நல் புராணனை - நல்ல பழமை யான குரு மூர்த்தி யாகிய வியாச பகவானை, நினைவுற்று - ஸ்மரித்து, ஓதுவான் - சொல்லுதற்கு, ஒருப்பட - (ஏகாக்கிரத்தோடு) சம்மதிக்க, அவன் தனக்கு - அந்த சூத மஹாரிஷிக்கு, உணர்வு அளித்த - ஞாந மார்க்கங்களை உபதேசஞ் செய்த, நாதன் ஆகிய - தலைவ னுகிய, வியாதனும்—வியாச பகவானும், உறை விடம் (சூத சௌநகாதி ரிஷிகள் இருந்த விடத்திற்கு, நடந்தான் - வந்து சேர்ந்தனன். (எ—று) (3)

'அவன் தனக்கு' என் பதில், தன் அசை.

கார்முகில் போலு மேனிக்
கமலமா மலர்போ லுங்கண்,
ணேர்மிகு முநியை யெல்லா
முநிவரு மிறைஞ்சச் சூதன்,
பார்மிசைத் தெண்டம் பண்ணிப்
பன்முறை வலமாய் வந்து,
சூர்மிகு மன்பிற் சென்னி
குவித்தகை யோடு நின்றுன் (4)

(இ—ள்) கார் முகில் போலும் மேனி—சூல் கொண்ட மேகம் போன்ற சரீரமும், மா கமல மலர் போலும் கண்—

சிவந்த தாமரை மலர் போன்ற கண்களும் உடைய, ஏர் மிகும் முநியை—அழகு மிகுந்த வியாச பகவானை, எல்லா முநிவரும் —(சௌநகாதி) ரிஷிகளனைவரும், இறைஞ்ச—நமஸ்காரஞ் செய்ய. சூதன்—சூக (மஹா முநிவர்), பார்மிசை—பூமியின் மீது, தெண்டம் பண்ணி—தண்டம் (போல்) விழுந்து அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தெழுந்து, பல முறை—பல தரம், வலம் ஆய் வந்து—(அவரைப்) பிரதக்ஷணஞ் செய்து, கூர் மிகும் அன்பில்—மிகுந்த அன்போடு, சென்னி—சிரசின் மீது, குவித்த கையோடும்—கூப்பிய கையோடும், நின்றுன்—நின்றனர் (எ—று) (4)

அருந்தவத் தோர்களெல்லா
மநாமய முரைத்த வர்க்குப்,
பொருந்துமா தநங்கற் பிக்கப்
பூசுரர் முகங்க ணேக்கி,
யிருந்தவங் கல்வி கேள்விக்
கில்லேயே யிடையூ றென்று,
பெருந்தகை யுரைத்தான் சூதன்
பின்னரும் வணங்கிச் சொல்வான். (5)

(இ—ள்) அருந் தவத்தோர்கள் எல்லாம்—அருமையான தவத்தினை யுடைய (சௌநகாதி ரிஷிகள்) அனைவரும். அநாமயம் உரைத்து—(வியாச பகவானைத் பார்த்து வியாதியின்றிய குசலப் பிரசிந மாகிய யோக க்ஷேமங்களை விசாரித்து, அவர்க்கு—வியாச பகவானுக்கு, பொருந்தும்—அவரிருத்தற்கு யோக்கிய மான, ஆதநம் கற்பிக்க—(உயர்ந்த) ஆசநம் ஒன்றமைக்க அதி லிருந்து கொண்டு, பூசுரர்—சௌநகாதி ரிஷிகளது, முகங்கள்—முகங்களை— பெரும் தகை நோக்கி—பெருமை பொருந்திய வியாச பகவான் பார்த்து, இரும்—பெருமை பொருந்திய, தவம்—தவத்திற்கும், கல்வி—கல்விக்கும், கேள்வி—சிரவணத்திற்கும், இடையூறு—விக்கிநம், இல்லேயே என்று - இல்லேயே என, உரைத்தான்—விசாரித்தனன், பின்னரும்—மீண்டும், சூதன்—சூத முநிவர், வணங்கி—நமஸ்கரித்து, சொல்வான்—விண்ணப்பம் செய்வா ராயினர். (எ—று) ஆமயம்—வியாதி, அநாமயம்—சுகம். (5)



இத்தபோ தநர்கள் சாந்தியால் அறத்தா
லிறந்தவ ரிறையியல் பறிவான,
பத்தரா னவர்க ளேவலே செய்யும்
பாவகம் பிறந்தன வெவர்க்கு,
மத்தனு மரிபண் டாமையாய் முநிகட்
கருளிய தேதெனக் களித்த,
சுத்தஞா நத்தை யிவர்களுக் கருளாற்
சொல்லெனத் துணையடி தொழுதான். (6)

(இ—ள்) இத் தபோ தநர்கள்—இந்த தபத்தினையே தநமாகக் கொண்ட (சௌநகாதி) ரிஷிகள், சாந்தியால்—உபசாந்தியினுலும், அறத்தால்—தருமத்தினுலும், இறந்தவர்—மூழ்கிக்கிடப்பவர்கள், இறை— பரமேசுரனது, இயல்பு—நித்தியத்துவத்தை, அறிவான்—உணரும் பொருட்டு, பத்தர் ஆனவர்கள்—பத்தி யுடையவர்கள், எவர்க்கும்—யாவர்க்கும், ஏவலே செய்யும்—பணிவிடையே செய்யும், பாவகம் பிறந்தன—தூய தன்மை உண்டாகி யிருக்கின்றன. அத்தன் ஆம்—(ஆகையால்) கடவுளாகிய, அரி—மஹா விஷ்ணு, பண்டு—பூர்வம், ஆமை ஆய்—கூர்ம (நாராயண)

அவதார மாக இருந்து, முநிகட்கு-(இந்திரத்துய்ம்நர் முதலிய) ரிஷிகளுக்கு, அருளியது-உபதேசித்தது, ஏது-எதுவோ, எனக்கு-(தேவரீர்) எனக்கு, அளித்த உபதேசித்த; சுத்த ஞாநத்தை-(அந்தப்) பிரஹ்ம ஞாநத்தினை, இவர்களுக்கு-(சௌநகாதி) ரிஷிகளுக்கு, அருளால்-கிருபையினால், சொல் என-உபதேசஞ் செய்வீ ரென்று, துணை அடி-உபய திரு வடிகளிலும் (விழுந்து), தொழுதான்-(சூதர்)நமஸ்க்காரஞ் செய்தனர், (எ—று) (6)

சொன்ன வாசகமு ளங்கொ ளாவிறைது
ணைப்ப தங்களைநி னைந்துதன்,
சென்னி யாலுறவ ணங்கி விண்ணவர்க
டேவனும் பரவு தேவனே,
முன்னோர் நாண்மிகுச நற்கு மாரன்முதன்
முநிவர் கட்குலகின் மூலமாந்,
தன்னை யாரருளி னோதி னானினிது
கேண்மி னென்றுமுநி சாற்றினான். (7)

(இ—ள்) சொன்ன வாசகம்-(சூத மஹா முநிவர்) விண்ணப்பஞ் செய்த வாக்கியத்தை, உளம் கொளா-மநத்துட் கொண்டு, இறை-பரமேசுரனது, துணை பதங்களை-உபய திரு வடிகளையும், நினைந்து-தியாநித்து, தன் சென்னியால் உற-தனது சிரசினால் அழுந்த, வணங்கி-நமஸ்க்கரித்து, விண்ணவர்கள் தேவனும்-தேவேந்திரனும், பரவு தேவனே-தோத்திரம் செய்யும் கடவுளே, முன் ஓர் நாள்-முன் ஓர் காலத்து, மிகு-மிகுந்த பத்தியினை யுடைய, சநற்குமாரன் முதல்-சநற் குமாரன் (சநந்தநன் சநகன் சநத்சுசாதன்) முதலிய, முநிவர்கட்கு-ரிஷிகளுக்கு, உலகின் மூலம் ஆம்-ஜகத் காரண மாகிய, தன்னை-தன்னை,



ஆர் அருளின்-மிகுந்த கிருபையினால், இனிது ஓதினான்-பிரியத்தோடு உபதேசித்தானே, இது-(அந்த) இதனை, கேண்மின்-(ஏகாக்ர சித்தத்தோடு) கேளுங்கள், என்று-என, முநி-வியாச பகவான், சாற்றினான் – சொல்லினன்: (எ—று) (7)

தலைமைசேர் சநற்கு மாரன்
சநந்தநன் சநகன் வெள்ளி,
யலைவிலா வுருத்தி ரன்றான்
அங்கிரா வாமதேவன்,
கலைதெரி பிருகு யோகி
கபிலனத் திரிக ணாதன்,
மலைவறு வசிட்ட னோடு
மரீசியா மதியின் மிக்கோர், (8)

(இ—ள்) தலைமை சேர்-(பிரம ஞாநத்தினை யடைதற்கு) முதன்மை யான, சநற்குமாரன்-சநற்குமாரரும், சநந்தநன்-சநந்தநரும், சநகன்-சநகரும் (சநத்சுசாதரும்) வெள்ளி-சுக்கிர பகவானும், அலைவு இலா-சலந மின்றிய உருத்திரன்-உருத்திரரும், அங்கிரா-அங்கிரா முநியும், வாம தேவன்-வாமதேவரும், கலை தெரி-எல்லாக் கலைகளையும் அறிந் துள்ள, பிருகு யோகி-பிருகு முநியும், யோகியும், கபிலன்-கபில ரிஷியும், அத்திரி-அத்திரி முநியும், கணாதன்-கணாதரும், மலைவு அறு-மயக்க மின்றிய, வசிட்டன்-வசிட்ட பகவானும், மரீசி ஆம்-மரீசி (ஒளி) ஆகிய, மதியின் மிக்கோர்-புத்தியிற் சிறந்தவர்களு மாகிய மேதாவிகள், (எ—று) தான் அசை (8)

## குளகம்.

பரமன தருளா லன்றியே பரத்தைப்
பரப்புறப் பார்த்ததம் மதியால்,
ஒருவரோ டொருவர் பன்னெடுங் கால
முசாவியொன் றுணர்வறப் பெருமல்,
வரமிகு பதரி வநமடைந் தரிய
மாதவம் வருந்தினுர் வருந்த,
நரனெடு நாரா யணனெரு முநியாய்
நறறவர்க் கருள்செய நடந்தான். (9)

(இ—ள்) பரமனது—பரமேசுரனது, அருளால் அன்றி—கிருபையினு லல்லாமல், பரத்தை - பிரமத்தினை, பரப்பு உற - விரி வாக, பார்த்த - விசாரித்த, தம் மதியால்—தமது புத்தியினுல், ஒருவரோடு ஒருவர் — ஒருவரோடு ஒருவர், பல் நெடும் காலம்—பல நீண்ட காலம், உசாவி — விசாரித்து. உணர்வு - (ஆத்ம) ஞாநத்தினை, ஒன்று உற பெருமல் - அடையா மல், வரம் மிகு - சிரேஷ்ட மிக்க, பதரி வநம் அடைந்து- பத்ரி வநத்திற்குச் சென்று, அரிய மா தவம் - அருமை யான பெரிய தபத்தினை, வருந்த - வருத்தத்துடன், வருந்தி னுர் - செய்தார்கள் (அவர்கள் தபத்திற்கு இரங்கி), நர னெடு நாராயணன் - நர நாராயணர், ஒரு முநி ஆய் - ஒரு ரிஷி யாக, நல் தவர்க்கு - நல்ல தவத்தை யுடைய அவர்கட்கு, அருள் செய - அநுக்கிரகஞ் செய்ய, நடந் தான் - அவ் விடத்துத் தோன்றினன். (எ—று) (9)

நாரணன் அருளிற் பணிந்துமா முநிவர்
நான்மறை மொழியினுல் வழுத்தக்,



காரணந் தன்னை யறிந்துநீர் தபித்த
காரண மென்னெனக் கண்ணன்,
ஏரணி மறையின் பொருடெரிந் திடுதற்
கெங்களா லியன்றில திறைவா,
ஆரணப் பொருளை யறிகுவாய் நீயே
யாதலால் உன்னையே யடைந்தோம். (10)

(இ—ள்) நாரணன் - விஷ்ணுவி னுடைய, அருளில், கிருபையினுல், மா முநிவர் - சநத் குமாராதி மக (சௌந காதி) ரிஷிகள், பணிந்து - (அவ் விஷ்ணுவை) நமஸ்க் கரித்து, நால் மறை - நான்கு வேதங்களின், மொழியினுல் வாக்கியங்களால், வழுத்த - தோத்திரஞ் செய்ய, கண் ணன் - மஹா விஷ்ணு வானவர், காரணம் தன்னை - (அவர்கள் வருந்தும்) காரணத்தை, அறிந்தும் - தெரிந்து இருந்தும், நீர் தபித்த - நீர் தபஞ் செய்த, காரணம் என்னை - காரணம் யாது என்று (வினவ), ஏர் அணி- அழகு பொருந்திய, மறையின் பொருள் - வேதங்களின் கருத்தினை, தெரிந்திடுதற்கு - உணர்தற்கு, எங்களால் இயன்றிலது-எம்மால் முடிய வில்லை, இறைவா-கடவுளே, நீயே - தேவரீரே, ஆரணப் பொருளை - வேதத்தின் தாத் பரியத்தினை, அறிகுவாய் - உணர்ந்திருக்கின்றீர், ஆதலால்- ஆகையினுல், உன்னையே - தேவரீரையே, அடைந்தோம் - (சரணுகப்) புகுந்தோம். (எ—று)

'காரணம் தன்னை' என்பதில், தன் அசை. (10)

ஏதுகா ரணமிவ் வுலகினுக் கெல்லாம்
என்றுநின் றளிப்பவ னெவன்ரு,
னேதுதா னுன்மா வேதுவீ டேவன்
பிறப்பவ னெவன்பிறப் பிப்பா,

னேதுமா ராலே கண்டிடப் படுவ
திணையறு பிரமமே தெல்லா,
மோதுவா யெங்க ளையநீ யல்லா
லொழிப்பவ ரில்லையென் றுரைத்தார். (11)

(இ—ள்) இவ் உலகினுக்கு - இந்த சகத்திற்கு, ஏது காரணம் - காரணம் யாது, எல்லாம் - (இப் பிரபஞ்சத்தி லுள்ள) அனைத்தும், என்றும் நின்று - முக் காலத்தும் இருந்து, அளிப்பவன் எவன் - இரக்ஷிப்பவன் யாவன். ஆன்மா ஏது - ஆன்மா வாவது யாது, வீடு ஏது - மோக்ஷம் யாது, ஏவன் பிறப்பவன் - ஜநிப்பவன் யாவன், ஏவன் பிறப்பிப்பான் - எவன் ஜநிப்பிப்பவன், ஏதும் - யாவும், ஆராலே - எவராலே, கண்டிடப்படுவது - அறியப்படு வது, இணை அறு - சமாந மின்றிய, பிரமம் ஏது - பிரமம் யாது, எல்லாம் - (யாங்கள் விண்ணப்பித்துக் கொண்ட அசலமான சம்சய மனைத்தும், ஓதுவாய் - (தெளியும்படி) உபதேப்பீராக, நீ அல்லால் - தேவரீரே யல்லது, எங்கள் - எங்களுக் குள்ள, ஐயம் - சந்தேகத்தினை, ஒழிப்பவர் - நிவிர்த்திப்பவர், இல்லை - (வேறு ஒருவரும்)இல்லை, என்று உரைத்தார் - என்று விண்ணப்பித்துக் கொண்டார்கள், (எ—று) (தான்—தான்—அசை) (11)

அந்த வெல்லையி லம்புயை கேள்வனும்,
வந்த தன்றவ வேடத்தை மாறியே,
சிந்தை யாலிமை யோர்க்குந்தெ ரிக்கொணு,
வெந்தை தன்னெளி யாலேயி லங்கினுன். (12)

(இ—ள்) அந்த எல்லையில் - அந்தச் சமயத்தில், அம்புயை - (தாமரை மலரில் ஜநித்த) இலக்ஷுமியின்,



கேள்வனும் - கணவனும், வந்த - (தான் முன்னே வியாச பகவா னுக) வந்த, தன் தவ வேடத்தை - தனது தவக் கோலத்தை, மாறி - நீங்கி, எந்தை - மஹா விஷ்ணு வான வர், இமையோர்க்கும் - தேவர்கட்கும், சிந்தையால் - மந திஞல், தெரிக்க ஒணு - உணரமுடியாத, தன் ஒளியாலே - தனது ஜோதி ஸ்வருபத்தினுலே, இலங்கினுன் - பிரகாசித் துக்கொண்டிருந்தனன். (எ—று) ஏ அசை, (12)

திங்க ளுயிறு போலத்தி கழந்த வெண்,
சங்கு மாழியுந் தண்டஞ்சா ரங்கமுஞ்,
செங்கை நான்குந்தி ருமறு மார்பமும்,
பங்க யாலயப் பாவையுங் கூடவே. (13)

(இ—ள்) செம் கை நான்கும் - சிவப்புப் பொருந் திய நான்கு கைகளிலும், திங்கள் போல - சந்திரனைப் போன்று, திகழ்ந்த - விளங்காநின்ற, வெண் சங்கும் - வெண்மையான சங்கும், ஞாயிறு - சூரியனைப் போன்று (சிவந்த பிரகாசம் பொருந் திய) ஆழியும் - சக்கரமும், தண்டம் - தண்டாயுதமும், சாரங்கமும் - வில்லும், திரு மறு - இலக்ஷுமியை அடை யாள மாக உள்ள, மார்பமும் - மார்பும், பங்கய ஆலய- தாமரைப் புஷ்பத்தினை இட மாக வுள்ள, பாவை- இலக்ஷுமி, கூட - சமேத ராக, (எ—று) (13)

உம்: ஏ—அசை

சுட்ட பொன்னினுந் தூயொளி யாயொளி,
விட்டி லங்கினன் விட்டுவி ளங்கொளி,
மட்ட மன்றிய மண்டலத் தால்வெளிப்,
பட்ட னன்னர ருய்வந்த பான்மையான். (14)

(இ—ள்) சுட்ட பொன்னினும்-காய்ச்சிய ஸ்வர்ணத்தினும், தூ ஒளிஆய் - மிக்க பிரகாச மாய், ஒளி விட்டு - ஜோதி ஸ்வரூபமாக, இலங்கினன் - பிரகாசித்துக் கொண்டிருந்தனன், நரன் ஆய் வந்த-(முன்னே வியாசரைப் போன்று) ஒரு முநியாய் எழுந்தருளி வந்த, பான்மையான் - தன்மையை உடையவன், விளங்கு ஒளிவிட்டு - விளங்காநின்ற ஜோதி ஸ்வரூப மாக, மட்டம் அன்றிய - தாழ் வுயர்வு இன்றிய. மண்டலத்தால் - பரிபூரணமாக, வெளிப்பட்டனன் - தோன்றினுன். (எ—று) (14)

அரியுருவு கண்டகம கிழ்ந்தவள விற்கே,
பெரியபரி வோடுபிறை சூடியபி ரான்முன்,
சுருதிமுடி வோதுபொருள் சொல்லுத றுணிந்தே,
கருதவரி யான்முநிவர் கண்ணில்வெளி நின்றான்.
(15)

(இ—ள்) அரி உருவு கண்டு - மகா விஷ்ணுவினுடைய உருவத்தைப் பார்த்து, அகம் மகிழ்ந்த - மநத்தில் சந்தோஷித் திருந்த, அளவிற்கே - அப் பொழுதே, கருத அரியான் - (மநதால்) நினைக்க முடியாதவனும், பிறை சூடிய பிரான் - (மூன்றும்) பிறையை (ஜடா பாரத்திலணிந்தவனு மாகிய பரம சிவன், பெரிய பரிவோடும் - மிகுந்த கிருபையோடும், முன் - முதன்மை யான. சுருதி முடிவு - வேதத்தின் முடிவில், ஓது பொருள் - சொல்லியுள்ள வஸ்துவை, சொல்லுதல் துணிந்து - சொல்ல நிச்சயித்து, முநிவர் கண்ணில் - (சௌநகாதி) முநிவர் கண்களுக்கு, வெளி நின்றான்—தோன்றும்படி யாக நின்றனன். (எ—று) ஏ—அசை (15)



செயசெய தேவர் போற்றும்
தேவமா தேவ போற்றி,
யயமற முநிவர் போற்று
மம்பிகா பதியே போற்றி,
நயமுறு மன்பா லன்றி
நணுகுதற் கரியாய் போற்றி,
செயலற விருந்த யோகிற்
றிகழ்ந்திடுஞ் சிவனே போற்றி. (16)

(இ—ள்) தேவர் போற்றும் தேவ - தேவர்கள் துதிக்கும் பரம சிவனே, செய செய-(உமக்கு) ஜெய முண்டாகுக ஜெய முண்டாகுக, மா தேவ போற்றி - மஹா தேவ (உமக்கு) நமஸ்க்காரம், அயம் அற - சம்சயம் நீங்க, முநிவர் போற்றும் - ரிஷிகள் துதிக்கும், அம்பிகா பதியே- உமா மகேசுவரனே, போற்றி - (உமக்கு) நமஸ்க்காரம், நயம் உறும் - விரும்பத் தகுந்த, அன்பால் அன்றி - பக்தியினுல் அல்லாமல், நணுகுதற்கு - அடைதற்கு, அரியாய் போற்றி - முடியாதவனே (உமக்கு) நமஸ்காரம், செயல் அற இருந்த - நிஷ்கிரியமா யிருக்கப்பட்ட, யோகில் - யோக நிலேயில், திகழ்ந்திடும் - விளங்காநின்ற, சிவனே போற்றி - பரமசிவனே (உமக்கு) நமஸ்க்காரம். (எ—று)

'அய்யம்; என்பது 'அயம் என நின்றது. (16)

கந்தரை கநல்கா னீராற்
கலந்திங்ஙன் கட்டப் பட்ட,
வெந்திரம் வல்லாய் போற்றி
யியங்கிட வளிப்பாய் போற்றி,

யந்தமும் செய்வாய் போற்றி
யாநந்த வுருவே போற்றி,
பந்தனை யறுப்பாய் போற்றி
பரமகா ரணனே போற்றி. (17)

(இ—ள்) கம் - ஆகாயம், தரை - பூமி, கனல்-அக்நி, கால் - வாயு, நீர் - ஜலம் (ஆகிய பஞ்ச பூதங்களையும்) கலந்து - பஞ்சீகரணஞ் செய்து, இங்ஙன் - இவ் விடத்து, கட்டப்பட்ட - கட்டியிருக்கின்ற (பிரபஞ்ச மாகிய). எந்திரம் - எந்திரத்தைச் (செய்ய), வல்லாய் - சாமர்த்திய முடையவனே, போற்றி - (உமக்கு) நமஸ்காரம், இயங்கிட - அவ் (வெந்திரத்தை)நடக்கும்படி யாக, அளிப்பாய்- இரக்ஷிப்பவனே, போற்றி - (உமக்கு) நமஸ்க்காரம், அந்தமும் - (அதை) நாசமும். செய்வாய் - செய்பவனே, போற்றி - (உமக்கு நமஸ்காரம், ஆநந்த வுருவே ஆநந்த சொருபனே, போற்றி - நமஸ்க்காரம், பந்தனை - (சம்சார) பந்தத்தினை, அறுப்பாய் - (அடியோடு) நாசஞ் செய்பவனே, போற்றி -(உமக்கு) நமஸ்க்காரம், பரம காரணனே - ( எல்லாவற்றிற்கும்) மேலான காரணமா யுள்ளவனே, போற்றி - (உமக்கு) நமஸ்காரம் (எ—று) (17)

ஆல்—அசை.

வெல்க பூதபதி வெல்க சீவபதி
வெலக யோகபதி வெலகவே,
பல்கு பேருருவு கண் கை கான்முடிப
கர்ந்தி டற்கரிய பான்மையாய்,
தொல்லை நான்மறையி னு லு முன்னியல்பு
சொலல லாகுமள வலலவால்,
வல்ல வாறுசில சொல்லி யாமுனைவ
ழுத்து கோமெனவ ணங்கினர். (18)



(இ—ள்) பூத பதி - பூதங்கட்குத் தலைவனே, வெல்க - (உமக்கு) ஜெய முண்டாகுக, சீவ பதி வெல்க - சீவர்கட்கு தலைவனே உமக்கு ஜெய முண்டாகுக. யோக பதி - யோகிகட்குத் தலைவனே, வெல்க வெல்க - (உமக்கு) ஜெய முண்டாகுக ஜெய முண்டாகுக, பல்கு-நாநா வாக, பேர் உருவு - விராட் சொருபத்தில், கண் - (அநேக) கண்களும், கை - (அநேக) கைகளும், கால் - (அநேக) கால்களும், முடி - (அநேக) சிரசுக்களும், பகர்ந்திடற்கு - (இத்தன்மைத் தென்று) கூறுதற்கு, அரிய - முடியாத, பான்மை யாய் - தன்மை யுடையவனே. தொல்லை - அநாதியா யுள்ள, நான் மறையினு லும் - நான்கு வேதங்களினு லும், உன் இயல்பு - தேவரீருடைய தன்மையை, சொல்லல் ஆகும் அளவு அல்ல - கூறமுடியாதவனே, (ஆகையினுல்) யாம் - நாங்கள், உனை வல்ல ஆறு-தேவரீரை (எங்கள்) புத்திக்கு எட்டிய அளவு, சில சொல்லி - சிலவற்றைச் சொல்லி, வழுத்துகோம் - தோத்தரிக்கின்ருேம், என வணங்கினர் - என்று கூறி நமஸ்க்கரித்தார்கள். (எ—று) ஏ ஆல்—அசை (18)

துதித்தமா முநிவர் தலைகளால் வணங்கித்
தொழுதகை யினாகளாய் நிற்பக்,
கொதித்தவான புலத்துக் கொண்டலவந் துதவிற்
ருெப்பவே கொடியவெங் கூற்றை,
யுதைத்ததா ளுடையா னுலகமுண் டுமிழ்ந்த
வொருவனைத் தழுவியிங் கிவர்கள்,
பதைத்தகா ரணமென் செய்யவேண் டுவதென்
பகரெனப் பவளவாய் மலர்ந்தான். (19)

(இ—ள்) துதித்த - தோத்திரம் செய்த, மா முநிவர்- (சௌநகாதி) சநத்குமா மக ரிஷிகள், தலைகள் - சிரசின் மீது, தொழுத கையினர்கள் ஆய் - கூப்பிய கையை யுடையவர்களாய், வணங்கி - நமஸ்கரித்து, நிற்ப - நிற்கின்ற (அந்த சமயத்து), கொதித்த - வெப்பம் பொருந்திய, வான்புலத்து - (செவ்) வானத்தின்கண், கொண்டல்- (சூல் கொண்ட) மேக மானது, வந்து உதவிற்று - வந்து சேர்ந்தது, ஒப்ப - போல, கொடிய - கொடுமை யான, வெம் - வெவ்விய, கூற்றை - இயமனை (மார்கண்டேயருக்காக) உதைத்த - உதைத்துத் தள்ளிய, தாள் உடையான்- பாதத்தினை யுடைய பரம சிவன், உலகம் உண்டு - இப் பிரபஞ்சத்தைத் தன் னுள்ளே அடக்கி, உமிழ்ந்த- வெளிக் காட்டிய, ஒருவனை-ஒப் பற்ற மஹா விஷ்ணுவை, தழுவி- (காட) ஆலிங்கனம் செய்து, இங்கு - இவ் விடத்துக்கு, இவர்கள் - இந்த (சௌநகாதி) ஜநத்குமார மக ரிஷிகள் (வந்து), பதைத்த - தாபத்தை யடைந்த, காரணம் என் - காரணம் யாது, செய்ய வேண்டுவது - (யான்) செய்யத்தக்கது, என் - யரது, பகர் என - கூறுவீராக என்று, பவள வாய் - பவளம் போன்ற அதரத்தை யுடைய பரம சிவன், மலர்ந்தான் (திரு வாய்) மலர்ந்தருளினன். (எ—று) (19)

ஆல்—ஏ—அசை.

அந்தமா லிறைவ னருள்செய்வா சகத்தைக்
கேட்டவ ருருந்தவ வெரியால்,
வெந்தபா வத்தால் விமலபா வத்தான்
மெய்ப்பொருள் விளங்குவான் வேண்டி,
யெந்தையே யெனையே யடைந்தன ரிவர்கட்
கிரங்கியான் கேட்டுட னிருப்பப்,



பந்தவே ரறுக்கும் பரமஞா நத்தைப்
பகர்ந்தருள் செய்கெனப் பகர்ந்தான். (20)

(இ—ள்) அந்த மால் - அந்த மகாவிஷ்ணு வானவர், இறைவன் - பரம சிவன், அருள் செய் - திரு வாய் மலர்ந்தருளிய, வாசகத்தை கேட்டு - வாக்கியத்தைக் கேட்டு, எந்தையே - எமது பிதாவே, அவர் -(சௌநகாதி)ரிஷிகள், அரும் - அருமை யான, தவ எரியால் - தவ அக்கியினல், வெந்த பாவத்தால் - நீத்த பாவத்தினை யுடைமையால், விமல பாவத்தால் - நிமலத் தன்மையினுல், மெய் பொருள் - சத்திய வஸ்த்துவை, விளங்குவான் - அறிவான், வேண்டி - விரும்பி, எனை - என்னை, அடைந்தனர்- (சரணுகதி யாக) அடைந்தார்கள், இவர்கட்கு - இந்த (சௌநகாதி) ரிஷிகளுக்கு, இரங்கி - கிருபை கூர்ந்து, யான் உடன் - யான் கூடவே, கேட்டு இருப்ப-சிரவணித்துக் கொண்டு இருக்க, பந்த வேர் அறுக்கும் - பந்த மூலத்தினை நிவிர்த்திப்பிக்கும், பரம ஞாநத்தை - மேலான (பிரஹ்ம) ஞாநத்தினை, பகர்ந்து அருள் செய்க - கூறுவீராக, என பகர்ந்தான் - என்று கேட்டுக்கொண்டார். (20)

(எ—று) ஏ—அசை.

உன்னைநீ யுணர்தி யல்லது வேரு
ருணருவா ருனதுபே ரருளாற்,
றன்னையே தன்னுற் றுனறி யறிவு
சங்கரர விவர்க்கரு ளென்று,
பின்னர்மா முநிவர் தங்களை நோககிப்
பிஞ்ஞகன் பெருகிய வருளால்,
என்னைநீர் வினவு மரும்பொருள் வினவி
யெய்துவீ ரெனவர்க் கிசைத்தான். (21)

(இ—ள்) சங்கரா - பரம சிவனே, உன்னை - உனது சொருபத்தை, நீ உணர்தி - நீயே அறிந்திருக்கின்றாய், அல்லது, அல்லாமல், வேறு ஆர் - வேறே யார், உணருவார் - அறிவார்கள், உனது பேர் அருளால் - தேவரீருடைய பெரிய கிருபையினால், தன்னை - கூடஸ்தனை, தன்னால் - ஆத்மாவால், அறியும் அறிவு - உணரும் ஞானத்தினை, இவர்க்கு - இந்த (சௌநகாதி) ரிஷிகளுக்கு, அருள் என்று - அநுக்கிரகஞ் செய்வீரென்று (நாராயணர்) விண்ணப்பஞ் செய்து, பின்னர் மா முநிவர் தங்களை நோக்கி - பின் மஹா முநிவர்களை பார்த்து, பிஞ்ஞகன் - பரம சிவன், பெருகிய - மிகுந்த, அருளால் - கிருபையினால், என்னை - என்னை, நீர் வினவும் - நீங்கள் கேட்கும், அரும் பொருள் - அரிய வஸ்துவை, வினவி - (அந்தப் பரமசிவத்தினிடம்) கேட்டு, எய்துவீர் - அடைவீர்களாக, என - என்று, அவர்க்கு - (அந்தச்) சௌநகாதி ரிஷிகளுக்கு, இசைத்தான் - (ரிஷிகேசன்) கூறினான். (எ—று) (21)

தம் தான்—அசை

கேசவ னுரைத்த மாற்றங்
கேட்டவர் பணிந்து பின்னும்,
ஈசனை வினவு மெல்லை
யிருவிசும் மிடையே தெய்வ,
வாசநம் வந்த தாங்கே
யரியொடு மளவி றந்த,
தேசினா லகில மெல்லாந்
திகழ்வீற் றிருந்தான் றேவன் (22)

(இ—ள்) கேசவன் - மஹா விஷ்ணு, உரைத்த - கூறிய, மாற்றம் - (பிரதி) வசநத்தை, அவர் - (அந்த சௌநகாதி) ரிஷிகள், சநத் குமாரர் முதலியவர், கேட்டு - கேட்டு, பின்னும் - மீண்டும், ஈசனை - பரமேசுவரனை பணிந்து - நமஸ்க்கரித்து, வினவும் - பிரார்த்திக்கும், எல்லை - சமயத்தில், இரு விசும்பிடை - பெரிய ஆகாயத்தினின்றும், தெய்வ ஆசநம் - தேவாசநம், ஆங்கே வந்தது - அவ் விடத்துக்கு வந்து இரங்கியது, தேவன் - பரம சிவன் (அவ் வாசநத்தின்மீது), அரியோடும் - மஹா விஷ்ணுவோடும், அளவு இறந்த - அளவிடக் கூடாத, தேசினால் - பிரகாசத்தோடு, அகிலம் எல்லாம் - பிரபஞ்சம் அனைத்தும், திகழ - விளங்கும்படி யாக, வீற்றிருந்தான் - அமர்ந்து இருந்தனன். (எ—று) ஏ—அசை. 22



யாதொன் றிலடங் கவினைந் தவெலா,
மியாதொன் றிடைநின் றதொடுங் குவதப்,
பூதங் களினா தனொர்பொன் னணைமே,
லேதங் கெடவே றியிருந் தனனால். (23)

(இ—ள்) அடங்க யாது ஒன்றில் - சகல பூதங்களும் எதனிடத்து, விளைந்த - உண்டாயினவோ, எலாம் யாது ஒன்றிடை - சகல பூதங்களும் எதனிடத்து, நின்று - (நிலை பெற்று) இருந்து, அது ஒடுங்குவது - அவை லயத்தை அடைகின்றனவோ, அப் பூதங்களின் - அந்தப் பூதங்களினது, நாதன் - தலைவன், ஓர் - ஒப் பற்ற, பொன் அணை மேல் - ஸ்வர்ண ஆசநத்தின்மீது, ஏதம் கெட - குற்ற மற, ஏறி இருந்தனன் - அமர்ந்து இருந்தனன். (எ—று) ஆல் அசை (23)

வானே முதலியா வையுமன் னிடமாய்த்,
தானே முழுதா கியதத் துவமாங்,

கோனே யிவர்கண் டுகொளும் படியா,
ஞனே யரியோ டுமொரா தநமேல். (24)

(இ—ள்) வானே முதல் - ஆகாயம் முதலிய, யாவையும், எல்லாவற்றையும், மன் இடம் ஆய் - பொருந்துதற்கு இட மாய், தானே முழுது ஆகிய - தானே பூரணமாய், தத்துவம் ஆம் - தத்துவங்களா யுள்ள, கோனே - தலைவனே, இவர் - இந்த (சௌநகாதி) ரிஷிகள், கண்டு கொளும்படி - அறியும்படி, அரி ஓடும் - மஹா விஷ்ணுவோடும், ஒரு ஆதந மேல் - (ஒப் பற்ற) ஒரு ஆசநத்தின் மீது, ஏய் - பொருந்தியிருந்தனன். (எ—று) (24)

ஆன் ஆன் – அசை நிலைகள்.

ஓவா மையுளத் திடையோ குசெய்வார்,
பாவா லையமே வுபரம் பொருளைத்,
தேவா திபர்தே டுசிவன் றனையே,
யாவா வவர்கண் டனரா தநமேல். (25)

(இ—ள்) உளத்திடை - மநதின்கண், ஓவாமை - இடையறுது, யோகு செய்வார் - தியாநிப்பவர்கள், பா - பாக்கள் (உண்டாகின்ற), ஆலயம் மேவு - இருதயத்தின் கண் பொருந்தியிருக்கின்ற, பரம் பொருளை - மே லான வஸ்துவை, தேவ அதிபர் - தேவர்களுக் கெல்லாம் தேவ ருல், தேடு - காணமுடியாத, சிவன்தனையே - ஈசுசனையே, அவர் - (சௌநகாதி) ரிஷிகள், ஆ-ஆ- ஆச்சரியம் ஆச்சரியம், ஆதநம் மேல் - (ஒரு) ஆசநத்தின் மீது, கண்டனர் - தெரிசநம் செய்தார்கள், (எ—று) (25)

'சிவன் தனே' என்பதில், தன் அசை.



அளவி றந்தவன் பாகிய
வருந்தவர்க் கமலன்,
முளரி யங்கண்வண் டுழாய்முடி
முகுந்தனை நோக்கி,
வளமி குந்தமெய்ஞ் ஞாநநான்
மற்றுமக் குரைப்ப,
உளமொ ருங்கியன் போடுகேட்
டுணர்மினென் றுரைத்தான். (26)

(இ—ள்) அமலன் - நிர்மல ஸ்வரூப ஞகிய பரம சிவன், அளவு இறந்த - அளவிட முடியாத, அன்பு ஆகிய - பக்தியா யுள்ள, அரும் தவர்க்கு - அரிய தவத்தினை யடைய (சௌநகாதி) ரிஷிகளுக்கு, முளரி அம் கண் - (செந்) தாமரைப் புஷ்பம் போன்ற அழகிய கண்களையும், வண் துழாய் முடி - வளமை பொருந்திய துளப மாலையைத் தரித்த கிரீடத்தினையும் (உடைய), முகுந்தனை - மஹா விஷ்ணுவை, நோக்கி-(முன் னிலை யாக வைத்து) பார்த்து, வளம் மிகுந்த - சிரேஷ்ட மிக்க, மெய் ஞாநம் - ஆத்ம ஞாநத்தினை, நான் உமக்கு - யான் உங்களுக்கு, உரைப்ப - சொல்லுகிறேன், அன்போடும் - (நீங்கள்) பக்தியோடும், உளம் ஒருங்கி - ஏகாக்கிர சித்தத்தோடு, கேட்டு உணர்மின் - சிரவணித்து அறியுங்கள், என்று உரைத்தான் என்று திரு வாய்மலர்ந்தருளினுன். (எ—று) (26)

மற்று - அசை

1-இருடிகள் விநவும் அத்தியாயம் முற்றிற்று.

பாயிர முள்படச் செய்யுள்-30

## 2. சாங்கிய யோக அத்தியாயம்.

மறைபயின் முனிவர் கேட்ப மாமறை முடிவி னுலு,
மறிவரு மறிவா நந்த வருளுரு வமலன் றன் பாற,
பிறிதரு பேத நீத்துப் பெயர்விலா
தொன்ருயெங்குஞ்,
செறிதருந் தன்னை யீசன்
றெறிதர வியம்ப லுற்ருன், (1)

(இ—ள்) மறை பயில் - வேதங்களை அப்பியாசித்துள்ள, முனிவர்-(சௌநகாதி) ரிஷிகள், கேட்ப - சிரவணிக்க, மா மறை - பெருமை (பொருந்திய) வேதங்கள், முடிவினுலும் - முடி வாக வுள்ள உபநிஷத்துக்களாலும், அறிவு அரும் - அறிதற்கு அருமையான, அறிவு ஆநந்த - ஆத்ம ஆநந்தமே, அருள் உரு - சொருப மாக உடைய, அமலன் தன் பால் - பரம சிவனிடத்து, பிறி தரும் - வேறுபாட்டினைத் தருகின்ற பேதம் நீத்து - (பேத மின்றி) அபேத மாய், பெயர்வு இலாது-நித்திய மாய், ஒன்று ஆம்- ஏக மாய், எங்கும் செறி தரும் - சர்வ வியாபக மா யுள்ள, தன்னை - தன்னை, தெரிதர - (சௌநகாதி ரிஷிகள்) உணரும்படி, ஈசன் - பரம சிவன், இயம்ப லுற்ருன் - சொல்ல ஆரம்பித்தார். (எ—று), (1)

'அமலன் தன்' என்பதில், தன் அசை.

அறைவதன் றிந்த ஞாந மியாவரு மறியா ராஞல்.
மறைவுறச் செய்வ தொன்ருய்
மன்னியே யுளள தென்றுந்,
திறலுடை யியம மாதி செய்தசீர் மறையோ ராலு,



மறிவரும் பொருளை நீங்க
ளறிமினென் றருளிச் செய்தான், (2)

(இ—ள்) இந்த ஞாநம் - இந்த பிரம ஞாநத்தை, அறைவது அன்று - (பிறருக்கு) சொல்லத் தக்க தன்று, யாவரும் அறியார் - (இந்த பிரம ஞாநத்தை) எல்லாரும் அறியார்கள், ஆஞல் - ஆதலால், மறைவுறச் செய்வது - அதி ரகசிய மாக வைக்கத் தக்கது, ஒன் ருய் மன்னி உள்ளது, - ஏகம் ஆய் பொருந்தி உள்ளது, என்றும் - எப்பொழுதும், திறல் உடை - திட மாகப் பொருந்தி யுள்ள, இயமம் ஆதி - இயம முதலிய (அஷ்டாங்க யோகங்களையும்), செய்த - அப்யாசித் துள்ள, சீர் மறையோராலும் - சிறப்புப் பொருந்திய தேவர்களாலும், அறிவு அரும் - அறிதற்கு அருமை யான, பொருளை - பிரமத்தை, நீங்கள் அறிமின் - நீங்கள் சிரவணித்துத் தெரிந்து கொள்ளுங்கள், என்று - என, அருளிச் செய்தான் - திரு வாய் மலர்ந்தருளினுன், (எ—று) (2)

ஏ—அசை.

இந்த ஞாநத்தை யெய்திய வின்பத்தா,
ரந்த மிலபிர மத்துரு வாயினேர்,
பந்த மேவிடாா பண்டுமின் றுமென்றே,
யெந்தை யீறிலி யீசனி யம்பினுன். (3)

(இ-) இந்த ஞாநத்தை - இந்த பிரம ஞாநத்தை, எய்திய - அடைந்த, இன்பத்தார் - ஆநந்தத்தினை உடையவர்கள், அந்தம் இல் - நாசம் இல்லாத, பிரமத்து உருவு - பிரம சொருபம், ஆயினேர் - ஆனவர்கள் (ஆனதால்), பண்டும் - முன்னும், இன்றும்-இப் பொழுதும், பந்தம் -

மேவிடார்-பந்தத்தினை அடையார்கள், என்று - என, ஈறு இலி - நாச மில்லாத, ஈசன் - ஈசுர னுகிய, எந்தை - எமது தந்தை, இயம்பினுன் - கூறினுன்- (எ—று) (3)

ஏ—அசை

மறைவுறும் பொருள்களினும்
மமைவுறும் பொருண்மிகவு,
மமைவுறும் படிசெயலை யறவிருந் திடவுளது,
செறியுமன் புடைமையொடு திகழ்தரும் தவமுநிக,
ளறிவுறும் படியிதனை யறைவனென் றருளுமிறை. (4)

(இ—ள்) மறைவு உறும் - ரகசியமா யுள்ள, பொருள்களினும் - வஸ்த்துக்களினும், மிகவும்—அதிக, மறைவுறும் பொருள் - ரகசிய மா யுள்ள வஸ்து, அறைவுறும்படி - சொல்லும்படி யான, செயல் அற - கிரியை இன்றி, இருந்திடவு ளது-இருந்திடத் தக்கது, செறியும் - நெருங்கிய, அன்புடைமையொடு-பத்தியோடு, திகழ்தரும்-விளங்குகின்ற, தவ முநிகள் - தவ சிரேஷ்டர்கள், அறிவுறும்படி - உணரும்படி, இதனை - இந்த (ரகசிய மான வஸ்துவை). அறைவன் என்று - சொல்லுவேன் என, இறை - ஈசுரன், அருளும்-உபதேசித்தனன், (எ—று) (4)

'செயலை' என்பதில், ஐ, சாரியை,

அறிவென வுரைக்கப் பட்ட
தவனுடை யுருவு தன்னே,
ருறைவிலா நிமலன் சாந்த
னுண்ணிய னென்று முள்ளோன்,



செறியுமெப் பொருட்கு முள்ளாய்ச்
சிந்மய மாயே சான்ருய்ப்,
பிறிதரு மவித்தைக் கெட்டாப்
பெற்றிய னென்ரு னீசன், (5)

(இ—ள்) அறிவு என - ஆத்மா என்று, உரைக்கப்பட்டது - சொல்லப்படுவது, நேர் - சாக்ஷாத், அவனுடை உருவு - அவனுடைய சொருபம், உறைவு இலா - சம்பந்த மற்ற, நிமலன் - மலமற்றவன், சாந்தன் - சாந்த சொருபி, நுண்ணியன் - சூக்ஷ்மமா யுள்ளவன், என்றும் - முக் காலத்தும், உள்ளோன் - இருப்பவன், செறியும் - நெருங்கி உள்ள, எப்பொருட்கும் - எல்லா வஸ்த்துக்களிலும், உள் ஆய் - ஆந்தர மாய், சின் மயம் ஆய்-சித் ருப மாய். சான்று ஆய்-சாக்ஷி யாய் (இருப்பவன்), பிறி தரும் - நாநா கூறுபாடா யுள்ள, அவித்தைக்கு - மாயைக்கு, எட்டா - அகப்படாத, பெற்றியன் — தன்மை வாய்ந்தவன். என்ருன் - என்று கூறினுன். ஈசன் - ஈச்வரன். எ—று (5)

ஏ-தன்,அசை.

யாதொரு பொருட்கு முள்ளா
யிருந்துள வறிவு தன்னை,
மேதகு புருடனென்று முயிரென்று மீசனென்றும்,
பேதமில் காலமென்று
மநமொட்வ் வியத்த மென்று,
மோதிடு மறைக ளென்றே
யுரைத்தன னெழிவி லீசன். (6)

(இ—ள்) யாது ஒரு பொருட்கும் - எல்லா பதார்த்தங்கட்கும், உள் ஆய் - ஆந்தர மாய். இருந் துள - இருக்கப்பட்ட, அறிவு தன்னை-ஆத்மாவை, மே தகு புருடன் என்றும் - மேன்மை பொருந்திய புருஷன் என்றும், உயிர் என்றும் - பிராணன் என்றும், ஈசன் என்றும் - ஈசுரனென்றும், பேதமில் காலம் என்றும் - பேதிக்கப்படாத காலம் என்றும், மநம் - மநம் என்றும், அவ்வியத்தம் என்றும் - (வெளிப்படாத தன்மையை யுடைய) அவ்வியத்தம் என்றும், மறைகள் - வேதங்கள், ஓதிடும் என்று - கூறும் என, ஒழிவு இல் - நித்திய மா யுள்ள. ஈசன் - பரம சிவன், உரைத்தனன் - (சௌநகாதி ரிஷிகளுக்கு) உபதேசித்தனன். எ—று. ஒடு - எண் இடைச் சொல். (6)

'அறிவு தன்னை' என்பதில், தன்-ஏ-அசை.

ஆங்கவன்பா லாவவெலா மவனிடையே யோவதுவு,
மோ்ங்கியமா மாயையினை
யுடையநானதி லார்ப்புண்ணுன்,
பாங்குறநா நாவுடலம் பண்ணியிடு மாயிடினு,
மீங்கிவைதன் னிடைத்தோயா
திவைநடத்து மியல்புமிலான். (7)

(இ—ள்) அவன்பால் - அவனிடத்து எலாம் ஆவ- எல்லாம் உண்டாவதும், அவனிடையே - அவனிடத்து, ஓவதுவும் - லயத்தை யடைவதும், ஓங்கிய - பெரிய. மாமாயையினை உடைய நான் - மகா மாயாவி யாகிய நான், அதில் ஆர்ப்புண்ணுன் - அதில் சம்பந்தப்படான், பாங்கு உற - வளப்பம் பொருந்திய, நாநா உடலம் - பல சரீரங்களை, பண்ணியிடும் ஆயிடினும் – செய்யினும், ஈங்கு - இவ் விடத்து, இவை தன் இடை - இச் சரீரங்க ளிடத்து,



தோயாது - சம்பந்தப்படாமல், இவை நடத்தும் - இவைகளை நடப்பிக்கும், இயல்பு, மிலான்-தன்மையனு மல்லன், எ—று ஆங்கு—தன்—அசை நிலை. (7)

பந்தமதி லொருக்காலும் பற்றுண னப்பந்தஞ்,
சிந்தைசெய் துஞ் தான்செய்யான்
செய்வானு யேநிற்கு,
முந்தியவான் காற்றநனீர் மண்ணல்லன் முழுதுமா,
யந்தமிலா வாநந்த வறிவுருவே யவன்வடிவம், (8)

(இ—ள்) பந்தமதில் - பந்தத்தில். ஒருக்காலும் - ஓர் பொழுதும்; பற்றுணன் -பற்று இன்றியவன், அப் பந்தம்- அப் பந்தத்தை, சிந்தை செய்தும் - சிந்தித்தும், தான் செய்யான் - தான் செய்பவ னல்லன், செய்வானுயே நிற்கும் - செய்பவனைப் (போல) விருக்கும், முந்திய வான்-முதன்மை யான ஆகாயம். காற்று - வாயு, அநல் - அக்நி. நீர் - ஜலம், மண் அல்லன் - பிருதிவியு மாகிய பஞ்ச பூதங்களு மல்லன், முழுதும் ஆய் - எல்லா மாய், அந்த மிலா - முடிவு இல்லாத, அறிவு ஆநந்த வுருவே - சிதாநந்த சொரூபமே, அவன் வடிவம் - அவனது சொரூபம். எ—று (8)

'பந்த மதில்', என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

உயிரி னேடுமந மவ்வி யத்தமுறு
கந்த மாதிபுல னைந்தலா,
னயர்வி னுகியக மென்று நின்றறியு
மந்த நற்கரண மும்மிலான்,
பெயர்வி லாதுசொலும வாக்கி னேடுமுத
லைந்து மாய்விடய மும்மலா,

னுயர்வ தாயவறி வேத னக்குருவ
மென்று ரைக்குமொளி மேனியோன். (9)

(இ—ள்) உயிரின் ஒடு - பிராணனேடு, மநம் - மந
மும், அவ்வியத்தம் - அவித்தையும், உறு கந்தம் ஆதி -
பொருந்திய கந்தம் ரசம் ரூபம் பரிசம் சத்தம் ஆகிய, புலன்
ஐந்து - (ஞாநேந்திரியங்கட்கு ஏது வாகிய) பஞ்ச விஷயங்
களும், அலான் - (தான்) அல்லாதவன், அயர்வின் ஆகி -
அஞ்ஞாநத்தினுல், அகம் என்று - (நான்) நா னென்று,
நின்று அறியும் - இருந்து அறிகின்ற, அந்த நல் கரணமும்-
அந்த நல்ல (கர்த்தா வாகிய) அகங்காரமும், இலான் - இல்
லாதவன், பெயர்வு அலாது - ஒய்வு இன்றி, சொலும் -
வசநிக்கின்ற, வாக்கினேடு - வாக்குடன், முதல் ஐந்தும்
ஆய் - (பாணி பாதம் பாயுரு உபஸ்த்தம்) ஆகிய கர்மேந்தி
ரியங்க ளாய, விடயமும் - (வசந கமந தாந விசர்ச்சந
ஆநந்த மாகிய) விஷயங்களும், இலான் - இல்லாதவன்,
உயர்வது ஆய் - மேன்மை பொருந்திய, அறிவே - சேத
நமே, தனக்கு உருவம் - தனக்கு சொருபம், என்று - என,
ஒளி மேனியோன் - பிரகாச சொருப னுகிய பரமசிவன்,
உரைக்கும் - கூறினன். (எ—று). (9)

'உயிரின் ஒடு'' 'வாக்கின் ஒடு'' என்பதில், ஒடு எண்
இடைச் சொல்.

அயில்கின்ற வவைமுதலாம் போகநுகர் பவனல்ல
னுயிரல்ல னுயிர்க்குயிராம் புருடனெனு மவனல்லன்,
மயலொன்றி யுளமாயை யதுவல்லன் மற்றெல்லா,
மயர்வின்றி யறிகின்ற வறிவுருவென் றேயறிக. (10)



(இ—ள்) அயில்கின்ற - புசிக்கின்ற, அவை முதலாம்-
முற் கூறிய கருமாதீந மாக வரப்பட்ட ஞாநேந்திரிய கரு
மேந்திரிய சம்பந்த சுக துக்கரூப, போகம் - நுகர்பவன்-
போகங்களை அநுபவிப்பவ னுகிய கர்த்தா போக்தா,
அல்லன் - அல்லன், உயிர் - அல்லன், பிராண னும்
அல்லன், உயிர்க்கு உயிர் ஆம் - பிராணுக்குப்
பிராண னுகிய, புருடன் எனு மவன் அல்லன்-
புருஷனு மல்லன் (பிரகிருதியும் அவ னல்லன்), மயல் -
மயக்கத்தினை, ஒன்றி யுள - பொருந்தி யுள்ள, மாயையது
அல்லன் - மாயையும் அல்லன், எல்லாம் - யாவற்றையும்,
அயர்வு இன்றி - மறைப்பு இன்றி, அறிகின்ற - உணரு
கின்ற, அறிவு உருவு- ஆத்ம சொருபம் (எனது வடிவம்),
என்று அறிக - என்று தெளிவீராக. (எ—று) (10)
மற்று—ஏ—அசை.

'மாயை யது' என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

இருளுட னேரொளி யாவதெவ் வண்ண,
மருவவி லாவவை மற்றது போல,
விரிவுள தாயச கந்தனி னேடு,
பொருவலி லாதப ரன்புணர் வெய்தான். (11)

(இ—ள்) இருளுடன் - அந்தகாரத்துடன், ஏர் ஒளி-
அழகிய பிரகாசம், ஆவது—ஆனது, எவ் வண்ணம் - எப்
படி, மருவல் இலா - சம்பந்தப்படமாட்டாதோ, அவை
போல - அவை போல, பொருவல் - சமாநம், இலாத -
இன்றிய, பரன் - பரமேசுவரன், விரிவு உளது ஆய - விரி

வாகப் பொருந்தி யுள்ள, சகந்தனின் ஓடும் - பிரபஞ்சத்தி னேடும், புணர்வு எய்தான் - சம்பந்தப்படான். (எ—று)

மற்று—அது—அசை நிலைகள் (11)

''சகந் தனின்'' என்பதில், தன் அசை.

உலகினி லெவ்வண மொண்ணிழ றன்னே.
டிலகுவெ யிற்கல வாதது போல,
நிலையில தாயச கத்தொடு நில்லா,
னுலவலி லாதொளிர் கின்றப ரனருன். (12)

(இ—ள்) உலகினில் - பூமியினிடத்து, எவ் வண்ணம் - எப்படி, ஒண் நிழல்ஒடு - பொருந்திய தேகச் சாயையோடு, இலகு - பிரகாசம் பொருந்திய, வெயில் - சூரிய கிரணம், கலவாது - சம்பந்தப்படமாட்டாதோ, அது போல - அது போல, உலவல் இலாது - நாச மில்லாது, ஒளிர்கின்ற - பிரகாசிக்கின்ற, பரன் - பரமேசுவர ளுகிய புருஷன். நிலையிலது ஆய - நாசத்தினை அடைகின்ற, சகத் தொடும் - பிரபஞ்சத்தினேடும், நில்லான் - சம்பந்தப் படான், (எ—று) தன்—தான்—அசை. (12)

அறிவினே டொன்றி நிற்குந்
தமத்தொடு விகார மாங்கே,
அறிவினிற் கலக்கு மென்று
மணைந்துட னிற்கு மாகி,
லறிவினுக் கநந்த கோடி
கற்பம்வந் திறந்திட் டாலும்,
பிறிவதற் காகு முத்தி
யில்லையே பேசி லென்றும். (13)



(இ—ள்) அறிவினேடு - ஆத்மாவினேடு, ஒன்றி நிற்கும் - பொருந்தி யிருக்கும், தமத்தொடு - தமசோடு, (மறப்பு), விகாரம் - விகார மானது, அறிவினில் - ஆத்மாவுடன், கலக்கும் என்றும் - சம்பந்திக்கும் எனவும், அணைந்து - சம்பந்தித்து, உடன் நிற்கும் ஆகில் - கூடவே யிருக்கு மாயின், அநந்த கோடி - அநந்த கோடி, கர்பம் - கர்ப்பங்கள், வந்து இறந்திட்டாலும் - உண்டாய் நாச மாயினும், அறிவினுக்கு-ஆத்மாவிற்கு, பிறிவதற்கு ஆகும் முத்தி-வேறுபடுவதற் காகச் செய்கின்றமோக்ஷம், பேசில்-சொல்லில், என்றும் இல்லை - எக் காலத்தும் இல்லை. (எ—று) ஆங்கு ஏ அசை. (13)

முத்தியை யடைந்து யர்ந்த
நித்தநன் முனிவ ரென்று.
மொத்தபே ரறிவே தன்பா
லுளதவி கார மென்றுஞ்,
சுத்தமுற் சுகதுக் கங்க
டோடர்பில ரநந்த ரூப,
நித்தமென் றிடவுங் காணப
ரென்றனன் நிகரி லீசன். (14)

(இ—ள்) நிகர் இல் - சமாநரகித மாகிய, ஈசன்-பரமசிவன், முத்தியை - மோக்ஷத்தினை, அடைந்து - அடைந்து, உயர்ந்த - உயர்வு பொருந்திய, நித்தம் - நித்தியமா யுள்ள, நல் முனிவர் - நல்ல முனிவர்கள், என்றும் -எப்பொழுதும், ஒத்த - சமமா யுள்ள, பேர் அறிவே - பூரணப் பிரகாசமே, தன்பால் - ஆத்மாவிடத்து, உளது - இருக்கின்றது (ஆகையால்), அவிகாரம் என்றும் - விகாரம் அற்றது எனவும்,

சுத்தம் - சுத்தம் (எனவும்), முன் - பூர்வம் (பொருந்திய), சுக துக்கங்கள் - சுக துக்கங்களை, தொடர்பு இல் -சம்பந்தி யாதது (எனவும்), ஆநந்த ரூபம் -ஆநந்த ரூபம் (எனவும்). நித்தம் என்றிடவும் - நாச மற்றது எனவும், காண்பர் - அறிவார்கள், என்றனன்-என்று கூறினுன். (எ—று) (14)

யானே செய்கின் றனனெவையுஞ்
சுகதுக் கங்க ளென்செயலே,
யூனே வாடி யிடறடித்த
லுடையோ னுனென் றுரைத்திடுவோ,
ரானு வறிவின் றன்மேலே
யாங்கா ரத்தை யிடுதலினு,
னுனே யெல்லா மென்றிருப்பர்
ஞான மில்லா ரெனவறிக (15)

(இ—ள்) எவையும் - சகல (கரும)ங்களையும், யானே செய்கின்றனன் - நான் கர்த்தா வாக யிருந்து இயற்றுகின் றேன், சுக துக்கங்கள் - விருப்பு வெருப்புகள், என் செயலே - என் னுடையதே, நான் - அகம், ஊன் வாடி யிடல் - மாம்சமய மான சரீரம் சுருங்குதலும், தடித்தல்- பருத்தலும், உடையோன் - உடையவன், என்று உரைத் திடுவோர் - என்று கூறுபவர்கள், ஆனு - சமான ரகித மான, அறிவின் மேலே - ஆத்மாவின்மீது, ஆங்காரத்தை- அகங்காரத்தினை - இடுதலினுல் - ஏற்றிச் சொல்லுவதால், எல்லாம் - யாவும், நானே என்று இருப்பர் -நானே என்று இருப்பார்கள், ஞானம் இல்லார் - விசாரம் இல்லாதவர், என அறிக - என்று (நீங்கள்) அறிவீர்க ளாக- (எ—று)
ஏ—தன்—அசை. (15)



அறிவினை யுடைய ராகி
யருமறை முடிவு கண்டோர்,
செறிமெய் பொருட்குஞ் சான்ருய்ச்
சின்மய மாயே தன்னிற்,
பிறிதரு மவித்தைக் கெட்டாப்
பெற்றியோ டெங்கு நிற்கு,
மறிவென வுரைப்ப ரல்ல
தயலொன்று மின்மை கண்டே. (16)

(இ—ள்) அறிவினை உடையர் ஆகி - விவேகம் உடை யவர்க ளாய், அரும் மறை - அருமை யான வேதங்களின், முடிவு கண்டோர் - முடிவை உணர்ந்தவர்கள், செறியும்- நெருங்கி உள்ள, எப் பொருட்கும் - எல்லாப் பதார்த்தங் களிலும், சான்று ஆய் - சித்ரூப மாய், தன்னில் பிறி தரும்- ஆத்மாவிற்கு வேருய் உள்ள, அவித்தைக்கு - மாயைக்கு, எட்டா - அறிய முடியாத, பெற்றியோடு - தன்மையுடன், எங்கும் - சர்வ வியாபக மாய், அறிவு நிற்கும் - ஆத்மா இருக்கும், என - என்று, அல்லது - (ஆத்மாவை) யன்றி, அயல் ஒன்றும் - அந்நிய மாக ஒன்றும், இன்மை கண்டு- இல்லாமையைப் பார்த்து, உரைப்பர் - சொல்லுவார்கள்.
ஏ—ஏ—அசை. (16)

இன்பமொடு துன்பமது வின்றியொர்வி காரந்,
தன்கணதி லாவறிவு சார்வதிலே பந்தம்.
பின்பதுள னுவதறி யாமைமுத லாலென்
றென்பதுள தாகுமுட லோடியைய வென்றும். (17)

(இ—ள்) தன்கணது - தன்னிடத்து, இன்பமொடு, சுகத்தோடு, துன்பமது - துக்கமும், இன்றி - இல்லாமல்,

ஓர் விகாரம் - ஒரு விகாரமும், இலா அறிவு - இல்லாத ஆந்மா, பந்தம் சார்வது இலை - பந்தத்தினை அடைவது இல்லை, என்றும் - எப் பொழுதும், உடலோடு இயைய - சரீரத்தோடு சம்பந்தித்த, பின்பு அது உளன் ஆவது - பின்னர் - அந்தச் சுக துக்க சம்சாரங்கள் உண்டாவது, அறியாமை முதலால் என்பது உளது - அஞ்ஞாநம் அந்யதா ஞாநம் முதலியவற்றால் உண்டாகின்றது, என்று ஆகும் - என்று கூறப்படும் (எ—று) (17)

'துன்பமது' என்பதில், அது, 'தண்கணது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி.

எப்பொழுது நின்றுதய மானவொளி தானே,
மெய்ப்படவி ருந்தறிவ தாகியெவ்வி டத்து,
மொப்பில்பர னுகுபுரு டன்னகம ணைந்தே,
செப்பரிய வேறுபல செய்வனெனு நின்றே. (18)

(இ—ள்) எப் பொழுதும் நின்று உதயம் ஆன - சதோதய மாய் இருக்கின்ற. ஒளி தானே - சித்தே, மெய்ப்பட இருந்து - சத்திய மா யிருந்து, எவ்விடத்து - சகலபூதங்களிடத்தும், அறிவது ஆகி-உணர்வதாய், ஒப்பு இல் - சமாந ரகித மான, பரன் ஆகு - பிரம்மாம், புருடன் அகம் அணைந்து - ஜீவன் நான் என்று அகங்கார அவிவேகத்தினை பொருந்தி, நின்று - இருந்து, செப்பு அரிய - சொல்லுதற்கு அரிய, பல வேறு - நாநா கிருத்தியங்களையும், செய்வன் - எனும் - (நான்) செய்வன் என்று கூறும் (எ—று). (18)

தான்—ஏ—ஏ—ஏ. அசை.



இத்தன்மைய தாகுமவ்வி யத்தமொடு கூடுமறி,
வெத்தனையு முட்புறமி ருந்தறியு மேனுஞ்,
சுத்தமது வாய்தன துண்மையறி யாதே,
யத்தன்மைய தாயவுரு வாயழியு மன்றே. (19)

(இ—ள்) இத்தன்மையது ஆகும் - இப்படிப்பட்ட தன்மையினை உடைய தாகிய, அவ்வியத்த மொடு - அவித்தையோடு, கூடும் அறிவு - கூடிய ஆந்மா, எத்தனையும் - எவ்வளவும், உள் புறம் இருந்து-பாகிய- அந்தரத்தில் இருந்து, அறியுமேனும் - அறியுமாயினும், சுத்தமது ஆய - சைதந்யம் ஆகிய, தனது - தன்னுடைய, உண்மை அறியாது - உண்மையை உணரமாட்டாது, அத் தன்மையது ஆய-அவித்தையின், உருவு ஆய் - சொருப மாகவே, அழியும் - நாசத்தை அடையும். (எ—று) (19)

ஏ—அன்று—ஏ—அசை.

'இத் தன்மையது' 'அத் தன்மையது' 'சுத்தமது' என்பவற்றில், அது பகுதிப் பொருள் விகுதி.

தானலா தொன்றைத் தானு
யறிந்திடு மதனு லென்று,
மானதாஞ் சுகதுக்கங்க
ளியாரையும் வெறுப்புண் டாக்கு,
மீனமா மயலோ டொன்றி
யிருந்திடு முடலங் கொண்டே,
யானதா யழியு மென்று
மறியாமை முதலாய்க் கொண்டே. (20)

(இ—ள்) தான் அலாது - தனது சொருப மல்லாத, ஒன்றை - (அநாத்மா வாகிய) ஒரு பொருளை, தான் ஆய்

அறிந்திடும் - தனது சொரூப மாக உணரும், அதனுல் - அந்தத் தன்மையினுல், என்றும்-எப் பொழுதும், சுக துக்கங்கள் - சுக துக்கங்கள், ஆனது ஆம் - உண்டாகின்றன வாம், யாரையும் - எப்படிப் பட்ட வர்களையும், வெறுப்பு உண்டாக்கும்- (இன்ப) துன்ப முண்டாகப் பண்ணும், என்றும் - எனவும், அறியாமை - அஞ்ஞானத்தினை, முதல் ஆய்க் கொண்டு-முதன்மை யாகக் கொண்டு, இருந்திடும் உடலம் கொண்டு - இருக்கின்ற சரீரத்தைப் பொருந்தி, ஈனம் ஆம் - இழி வாகிய, மயலோடு ஒன்றி - மயக்கத்தி (பிராந்தியி)னை அடைந்து, ஆனது ஆய் அழியும் - (தா ளுகி) நாசத்தை அடையும். (எ—று) (20)

ஏ-ஏ—அசை.

கருமஞ்செய விடர்வந்துறு மதுபுண்ணிய பாவந்,
தருமென்றுரை செயுமாமறை யவையாகிய வசமே,
யுருவந்தரு முழுதும்முள தாகும்மென வொழியா,
வருடந்திடு மொளிமேனிய தறிகென்றருள் செயுமால்.
(21)

(இ—ள்) கருமம் செய - கருமங்களைச் செய்ய, இடர் வந்து உறும் - (பெரிய தோஷ மாகிய) துன்பங்கள் உண்டாம், அது - அந்த (சுப அசுப கன்மங்கள்), புண்ணிய பாவந் தரும்-புண்ணிய பாவங்களைக் கொடுக்கும். என்று- என, மா மறை - பெருமை பொருந்திய வேதங்கள், உரை செயும் - பிரதிபாதிக்கும், அவை ஆகிய வசமே - அந்த புண்ணிய பாவங்கட்கு ஈடாகவே, உருவந் தரும் - சரீர முண்டாம், ஒளி மேனியது - சேதந ஸ்வருபமே, முழுதும் உளது ஆகும் - சர்வ வியாபகமாம், என - என்று, ஒழியா - நித்தியமா யுள்ள,



அருள் தந்திடும் - அருளைக் கொடுக்கும் என, அறிக - (நீங்கள்) அறி வீர்க ளாக, என்று அருள் செயும் - என்று கூறினர். (எ—று) ஆல்— அசை. 'ஒளி மேனியது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. (21)

அழியா தெங்கு முளதாகி
யனைத்துட் புறம்புந் தானிரம்பி,
யொழியா வறிவா யொருகுற்ற
முரைத்தற் கரிய தொருபொருளே,
கழியா மாயை யதனுலே
காணப் பலவாய்த் தோன்றியிடு,
மழிவா யினதென் றென்றுமிலா
திருக்கு மதுவே யியல்பென்றுன். (22)

(இ—ள்) அழியாது - நித்திய மாய், எங்கும் உளது ஆகி - எங்கும் இருப்ப தாய், அனைத்து உள் புறம்பும் நிரம்பி - சர்வத்தினும் அநுஸ்யூதமாய் இருந்து, ஒழியா - நீங்காத, அறிவு ஆய் - சைதந்ய மாய், ஒரு குற்றம் - ஒரு வித தோஷமும், உரைத்தற்கு அரியது - கூற முடியாத; ஒரு பொருளே - ஒப் பற்ற (அந்த) சைதந்யமே. கழியா- (பிரம ஞானத்தா லன்றி) நிவிர்த்தியாகாத, மாயையதனுலே- மாயையினுல், காண - பார்க்க, பல ஆய்த் தோன்றியிடும்- நாநா வாகத் தோன்றும், என்றும் - எக்காலத்தும் (அம் மாயை), அழிவு ஆயினது - நாசத்தை அடையத் தக்கது, ஒன்றும் - யா தொரு கிரியையும், இலாது இருக்குமதுவே- அற்று இருக்கும் தன்மையே, இயல்பு என்றுன் - (சைதந்யத்தின்) சுபாவம் என்று கூறினன். (எ—று)

தான்—அசை.

'மாயை யதனுல்' ''ஆயினது'' 'இருக்குமதுவே' என்பவற்றில், 'அது' பகுதிப் பொருள் விகுதி. (22)

ஆதலான் முநிக ளுண்மை
யொன்றென வுரைப்பர் வேறும்,
பேதமவ் வியத்தத் தாலா
மென்றன ரதுவு மென்று,
மோதிய மாயை தன்னே
யாசரித் திருந்தே செய்யு,
நீதிய தென்று கொண்டே
நிகழ்த்தினன் நிகரி லீசன். (23)

(இ—ள்) ஆதலால் - (ஆன்மா நித்தியத் தன்மையுடைய சுபாவம்) ஆகையால், முநிகள்-ரிஷிகள், உண்மை-சத்தியம், ஒன்று என உரைப்பர் - ஏக மாகிய (பிரமமே) என்று கூறுவார்கள், வேறு ஆம் பேதம் - நாநா கூறுபாடாகிய விலக்ஷணத் தன்மை, அவ்வியத்தத்தால் ஆம் - அவித்தையினுல் உண்டாம், என்றனர் - என்று கூறுவர், அதுவும் - அந்த பிரமமும், என்றும் - எப்போதும், ஓதிய - (முன்னர்க்) கூறிய, மாயை தன்னே - மாயையினே, ஆசரித்திருந்து - அநுசரித் திருந்த, நீதியது கொண்டு - தன்மையைக் கொண்டு, செய்யும் என்று - (நாநா கிரியைகளேச்) செய்யும் என்று, நிகர் இல் ஈசன் - சமாந மின்றிய ஈசுரன், நிகழ்த்தினன் - (சௌநகாதி ரிஷிகளுக்கு) கூறினுன். (எ—று) ஏ—ஏ—அசை.

'மாயை தன்னே' என்பதில், தன் அசை. (23)



யாதொர்படி தூமமொடு தூளியொளி யாய,
நீதியுடை வானேமறை யாதவண மேபோ,
லோதுபுல னேடுகர ணம்முறுப வெல்லாம்,
போதமுட னேன்றியவை நின்றுபுண ராவால். (24)

(இ—ள்) யாது ஓர் படி-எப்படி, தூமம் - புகையும், தூளி - தூசும், ஒளி ஆய - பிரகாசம் பொருந்திய, நீதி உடை வானே - தன்மையை உடைய ஆகாசத்தை, மறையாத வணம் - மறைக்காத தன்மை, போல் - போல, ஓது புலனேடு - சொல்லாநின்ற இந்திரியங்களோடு, கரணம் - அந்தக் கரணம், உருப எல்லாம் அவை - பொருந்துவன யாவும், போத முடன் ஒன்றி-சைதந்யத்துடன் பொருந்தி, நின்று புணரா - இருந்து சம்பந்திக்கமாட்டாது. (எ—று) ஏ—ஒடு—ஆல்—அசை. (24)

அடுத்தநிற மெத்தனேய தாயபடி கமவே,
றடுத்திடவி லாதுதன தாயவொளி யேபோ.
லடுத்தகம தாகியணே யாதவறி வென்றும்,
விடுத்திருளே மிக்கொளிய தாய்விரியு மன்றே. (25)

(இ—ள்) அடுத்த நிறம்-(தன்னே) கிட்டிய வர்ணங்கள்; எத்தனே அது ஆய-எவ்வளவு அவ்வளவும் ஆகிய. படிகம்-ஸ்படிகக் கல், வேறு அடுத்திட - வேறு வர்ணங்களேப் பொருந்திட, இலாது - இல்லாமல் இருக்கும் போது, தனது ஆய ஒளியே போல் - தன்னுடை ஸ்வபாவ மாகிய வெண்மை நிறமே போல, அடுத்து-(ஆன்மாவைக்) கிட்டி, அகமது ஆகி- அகங்காரத்தினே யுடையனவாய், அணேயாத அறிவு - பொருந்தாத ஆன்மா. என்றும் - எக் காலத்தும், இருளே விடுத்து — அஞ்ஞானத்தை ஒழித்து, மிக்கு -மிகுந்த,

ஒளியது ஆய் - பிரகாச மாகவே, விரியும் - (இருந்து கொண்டு) இருக்கும். (எ—று)

அன்று—ஏ-அசைகள் (25)

நல்லறிவு ளோருலகை ஞானவடி வென்றே,
சொல்லுவர்க ளவ்வறிவி லார்தொழிலில் வேரும்,
பல்வகைய தேபொருள தென்றறிதல் கொண்டே,
நில்லதில தாமுலகு கண்டிடுவர் நின்றே.

(இ—ள்) நல்ல அறிவு உளோர் -நல்ல ஞான முடையவர்கள். உலகை - (இந்தப்) பிரபஞ்சத்தை, ஞான வடிவு-சேதந ஸ்வரூபம், என்று சொல்லுவர்கள் - என்று கூறுவார்கள், அவ் அறிவு இலார் - அஞ்ஞாநிகள், தொழிலில் - கிரியையினால், வேறு ஆம் - நாநாவா யுள்ள, பல் வகையது - பல படித்தா யிருக்கின்றது. என்று அறிதல் கொண்டு - எனப் பார்த்தலைக் கொண்டு, நின்று-இருந்து, நில்லது இலது ஆம் உலகு - நாச மடைகின்ற பிரபஞ்சத்தை, பொருளது - அர்த்த ரூபம் என்று, கண்டிடுவர் அறிவார்கள். (எ—று)

ஏ—ஏ—ஏ-ஏ—அசை. (26)

யாதொரு பொருட்கு முள்ளாய்ச்
குணமின்றி யெங்குந் தானாய்ச்,
சேதந ரூயே யென்றுந்
திகழ்ந்திடும் பரிசு காணா,
ரேதமா மயக்கந் தன்னா
லியாவையு மிருந்த வண்ணம்,
பேதமாய்க காணா நிற்ப
ரென்றனன் பிறவி நாசன். (27)



(இ—ள்) யாது ஒரு பொருட்கும் - எவ் வகைப் பதார்த்தங்கட்கும், உள் ஆய்-ஆந்தர மாய், குண மின்றி-நிர்க்குண மாய், எங்குந் தான் ஆய் - சர்வ வியாபி யாய், சேதநன் ஆய் - சைதந்ய ஸ்வரூப மாய், என்றும் – எப்பொழுதும், திகழ்ந்திடும் - விளங்கிக் கொண்டிருக்கின்ற, பரிசு - தன்மையை, காணார் - (அஞ்ஞானிகள்) அறியார்கள், ஏதம் ஆம் - அஞ்ஞாந மாகிய, மயக்கந் தன்னால் - மயக்கத்தினால். யாவையும் - சகல பதார்த்தங்களையும், இருந்த வண்ணம் - இருந்தபடியே, பேதம் ஆய் - அந்தந்த பதார்த்த ரூப மாகவே, காணாநிற்பர் - பார்ப்பார்கள், என்றனன் - என்று திரு வாய் மலர்ந்தருளினான், பிறவி நாசன் - பிறவியை நாசஞ் செய்பவனான பரமசிவன். (எ—று) தன் தான்-ஏ—அசை (27)

படிகந்தனி னிடையேபல நிறம்வைகவவ் வுருவாய்,
வடிவந்தன தெனநின்றிடு மதுபோலறி வுருவாய்
முடிவொன்றுமில் பொருளெங்கணும்
முழுதும்மொளி யாயே.
வடிவந்தொறும் வடிவந்தொறும்
வேறாய்வரும் வகையே. (28)

(இ—ள்) படிகந்தனின் இடை - படிகத்தினிடத்து, பல நிறம் வைக - பல நிறங்கள் பொருந்த, அவ் வுருவு ஆய் - அந் தந்த ரூப மாய் இருப்பினும், வடிவம் - சொரூபம், தனது என நின்றிடும்-தன் னுடைய தாகவே இருக்கும், அது போல் - அதைப் போல. ஒன்றும் - ஒரு, முடிவு இல் - நாசமு மில்லாத, அறிவு உருவு - ஆந்ம சொரூபம், பொருள் எங்கணும் - பூதங்கள் தோறும், முழுதும் ஒளி ஆய் - பூரணப் பிரகாச மாய், வடிவந்

தொறும் - அந் தந்த பூதங்களிடத்தும். வகை வேருய் வரும் - அப் படியே நாநா வாகத் தோன்றும் (எ-று)
தன் ஏ-ஏ-ஏ-அசை. (28)

ஆதலா லழியா நித்த சுத்தமா யெங்கும் தாஞய்,
பேதமி லறிவு தன்னைப் பெரியவர் பேசக் கேட்டு,
மோதியு நினைந்து நாளு மருச்சனை செய்ய வேண்டு,
மேதமில் வீடே யெய்தற் கிச்சையே யுடையோர்
தம்மால். (29)

(இ-ள்) ஆதலால் - ஆகையினுல், ஏதம் இல் -குற்ற மற்ற, வீடு - மோக்ஷத்தினை, எய்தற்கு - அடைதற்கு, இச்சை யுடையோர் தம்மால்-விருப்ப முடைய முமுக்ஷுக்களால், அழியா - கெடாத, நித்த - நித்திய மாய். சுத்தம் ஆய் - சுத்த மாய், எங்கும் தான் ஆய் - சர்வ வியாபியாய் உள்ள. பேதம் இல் - பேதிக்கப்படாத, அறிவு தன்னை - பிரமத்தை. பெரியவர் - மகான்கள், பேசக் கேட்டும் - சொல்லக் கேட்டும், ஓதியும் - சிரவணித்தும், நினைந்தும் - சிந்தித்தும், நாளும் - சதா காலமும், அருச்சனை செய்ய வேண்டும்-பூசை செய்ய வேண்டும். (எ-று)
ஏ-ஏ-தான்-தன்-தம் அசை. (29)

யாதொரு பொழுதி யோக
மாத்திடை யெங்கு நின்ற,
சோதியா யிலங்கு போதஞ்
சோகத்தா லிடைவி டாத,
நீதியா நிகழ்ந்தெப் போது
நின்றிடிற் ருனே தன்னி,
ஞேதிய பரிசு நின்ரு
னென்றன னுமையோர் கூறன். (30)

(இ-ள்) யாது ஒரு பொழுது - எப் போது. யோக மாத்திடை - யோக முடைய இருதயத்தின்கண், எங்கும் நின்ற - சர்வாந்தர்யாமியா யிருந்து. சோதி யாய் இலங்கு- பிரகாச ரூப மாய் விளங்குகின்ற, போதம் - சைதந்யம், நீதியா - கிரம மாக, நிகழ்ந்து - விளங்கி, எப் போதும் - எப் பொழுதும், சோகத்தால் - துன்பத்தினுல், இடை விடாத - இடையீடின்றி. தான் - ஜீவனே, தன்னின்- கூடஸ்த்த ஞகிய தன்னிடத்து, நின்றிடில் - இருக்கின், ஓதிய - (முன்னர்க்)கூறிய, பரிசு - சைதந்ய ரூப மாகவே, நின்ருன் - இருக்கின்றனன், என்றனன் - என்று கூறிஞன், உமை ஓர் கூறன் - உமா தேவியை (வாம) பாகத்தி லுடைய பரம சிவன். (எ-று) ஏ-அசை. (30)

பூதங்க ளெவையுந் தன்பாற்
புணர்ந்திட நிற்றல் கண்டே,
பூதங்க ளெவற்றி னுள்ளும்
புறம்புந்தா னிற்றல் கண்டோன்,
பேதங்க ளனைத்து மில்லாப்
பிரமமே யடைந்து வேரு,
மேதங்க ளனைத்தும் விட்டோ
னென்றிட லாகு மன்றே. (31)

(இ-ள்) பூதங்கள் எவையும் - சர்வ பூதங்களும், தன்பால் புணர்ந்திட - தன்னிடத்து பொருந்தியிருக்கும். நிற்றல் கண்டு - தன்மையை உணர்ந்து, பூதங்கள் எவற்றின் - சர்வ பூதங்களின், உள்ளும் புறம்பும் - உள்ளிலும் வெளியிலும், நிற்றல் கண்டோன்-(தான்) பொருந்தி யிருத்தலைப் பார்த்தவனை. பேதங்கள் அனைத்தும் - பேத பாவனை யாவும், இல்லா - இன்றி, பிரம்மே அடைந்து - பிரமத்

தினையே பொருந்தி, வேறும் - அந்நிய மாகிய, ஏதங்கள் அனைத்தும் - குற்றங்க ளனைத்தும், விட்டோன் - நீங்கின வன், என்றிடல் ஆகும் - என்று சொலலப்படும். (எ-று)

தான அன்று-ஏ-ஏ-அசைகள். (32)

யாதொரு பெரழுதி யோகந்
தன்னையே யியற்றி யின்ப,
மேதகு சமாதி தன்னை
யடைந்துவே றுகி நின்ற
பூதம்யா தொன்றுங் காணு
திருந்தவ னெங்கு நின்ற.
சோதியாந் தன்னிற் றன்னைச்
சோர்வின்றிச் கண்டே நின்றுன். (32)

(இ—ள்) யாது ஒரு பொழுது-எப்பொழுது, யோகந் தன்னை-யோகத்தினை, இயற்றி-அப்யாசித்து, இன்பம் - ஆநந் தம், மே தகு- மிகுதி யாக உண்டாகின்ற, சமாதி தன்னை-சமாதியினை, அடைந்து - பொருந்தி, வேறு ஆகி நின்ற-அந்நியமா யிருக்கின்ற, பூதம் யாது ஒன்றும் - ஒரு பூதங் களையும், காணுது இருந்தவன் - (பேத பாவனை யாகப்) பாராது இருந்தனனே (அப் பொழுது), எங்கும் நின்ற - சர்வத்ர வியாபகமா யுள்ள, சோதி யாம் தன்னை - பிரகாச மான சைதந்யத்தை, தன்னில் - கூடஸ்த்தனிடத்து, சோர்வு இன்றி - துன்பம் இன்றி, கண்டு நின்றுன் - (இருந்து) அறிந்தன்ன். (எ—று)

தன்-ஏ—தன்—ஏ—அசை. (32)

யாவனி யாதொரு போதித யத்தே,
மேவிய வாசையெ லாமற விட்டா,



னேவரு மின்னமிர் தாயவ னப்போ,
தோவலி லாதொளிர் வீடடை வுற்றுன். (33)

(இ—ள்) யாவன் - எவன், யாது ஒரு பொழுது, எப் பொழுது, இதயத்து - இருதயத்தின்கண், மேவிய - பொருந்திய, எலாம் ஆசை - சகல ஆசைகளையும், அற விட்டான் - அத்தியந்தம் விட்டானே, ஏவு அரும் - குற்ற மற்ற, இன் அமிர்து ஆய - இனிய அமிர்தம் போன்ற, அவன் - அப் புருஷன், அப் போது - அப் பொழுதே, ஓவல் இலாது- இடையருது, ஒளிர் வீடு - பிரகாசம் பொருந்திய மோக்ஷத்தினை, அடைவுற்றுன் — அடைந்தவ னுகின்றுன். (எ—று) ஏ- அசை. (33)

பூதங்க ளுடைத்தா யுள்ள
வேறெலா மொன்றின் கண்ணே,
யேதங்க ளின்றிக் கண்டு
மதினின்று மெல்லா மாய,
பேதங்க ளனைத்துங் காணு
தன்றிவன் பிரம மென்று.
வேதங்க ளனைத்து மோது
மெய்யறி வடைந்து நின்றுன். (34)

(இ—ள்) பூதங்கள் உடைத் தாய் உள்ள - பூதங் களைப் பொருந்தி உள்ள, வேறு எலாம் - அந்நிய மான யாவற்றையும், ஒன்றின்கண்ணே - ஏக ரூப மான பிர மத்தினிடத்து, ஏதங்கள் இன்றிக் கண்டும் - குற்ற மறப் பார்த்தும், அதினின்றும் -அப் பிரமத்தினின்றும், எல்லாம் ஆய - யாவும் ஆகிய, பேதங்கள் அனைத்தும் - பேதங்கள்

எல்லாவற்றினையும், காணுது. அன்று - பார்க்காத அப்பொழுதே, இவன் - இந்தப் புருடன், பிரம்மம் என்று - பிரம சொருபம் என்று, வேதங்கள் அனைத்தும் - வேதங்கள் யாவும், ஓதும் - பிரதிபாதிக்கின்ற, மெய் அறிவு - உண்மை ஞானத்தினை, அடைந்து நின்ருன் - அடைந்தவனுகின்ருன். (எ—று) (34)

யாவ ஞெருவ னறிவுருவாந்
தனையே கண்டு மற்ருென்ருய்,
மேவ லின்றி வேறுபடக்
காணுன் விளங்க வப்பொழுது,
நீவி னிலையா யுலகனைத்து
மாயை தானே யெனக்கண்டு,
மேவ லரிதாம் வீடடைந்தா
னென்றே விளம்பி யிடலாகும், (35)

(இ—ள்) யாவன் ஒருவன் - எந்தப் புருஷன், அறிவு உருவு ஆம் - ஆந்ம சொருப மாகிய, தனையே - தன்னையே, கண்டும் - பார்த்தும், மற்ருென்ருய் - அந்நியமாக, மேவல் இன்றி - பொருந்துதல் இன்றி, விளங்க - விளங்கும்படி யாக, வேறுபடக்காணுன் - பேத மாகப் பார்ப்பதில்லையோ. அப் பொழுது - அப்போது, நீவு இல் - பொருந்தாத, நிலையா - நாசத்தை அடைகின்ற, அனைத்து - உலகு உம் - சகல உலகங்களையும், மா யை தா னே - மாயையே, எனக் கண்டும் - என்று பார்த்தும், மேவல் அரி தாய் - அடைதற்கு அரி தாகிய, வீடு - மோக்ஷத்தினை, அடைந்தான் என்று - அடைந்தா னென்று, விளம்பியிடல் ஆகும் - சொல்லப்படும். (எ—று) (35)

தான் ஏ—ஏ—அசை-



பிறப்பினெடி றப்புமிடை துன்பமடை வென்னு
தறப்பரிவு செய்வதொர்ம ருந்துளத தாய்வ,
திறப்பில்பர மாயபிர மம்மதனை யெய்துஞ்,
சிறப்புடைய ரானபொழு தேசிவம தாவார். (36)

(இ—ள்) பிறப்பின் ஒடு இறப்பும் - ஜநநம் மரணம், இடை - மத்தியில் வரப்பட்ட, துன்பம் அடைவு - துன்பம் உண்டாம், என்னுது - என்று கருதாது. அறப் பரிவு செய்வது - அத்தியந்தம் இன்பம் செய்வ தாக. ஒரு மருந்து உளது-ஒரு ஔடதம் இருக்கின்றது, அது ஆய்வது - அதை விசாரித்து (அறிந்து), இறப்பு இல்- நாச மில்லாத, பரம் ஆய - மே லான, பிரமம் அதனை - பிரமத்தினை, எய்தும்-அடையும், சிறப்பு உடையர் ஆன- சிறப் புடையவர்களான, பொழுதே-அப் பொழுதே, சிவமது ஆவார் - சிவ சொருப மர்வார்கள், (எ—று)

பிரமமது, சிவமது, என்பவற்றில் — அது பகுதிப் பொருள் விகுதி, (36)

ஆறுபல கூடியுல கத்தலைக டற்கே,
வேறறவுண் மேவியுட ஞகும்வினை வேபோ.
லீறில்பர மாயருவ தாயபிர மத்தோ.
டாறுமறி வானவைய டங்கியிடு மன்றே. (37)

(இ—ள்) பல ஆறு கூடி - அநேக நதி நதங்கள் சேர்ந்து, உலகத்து - பூமியின்கண், அலை கடற்கு - அலைகளோடு கூடிய சமுத்திரத்திற்கு, உள் வேறு அற மேவி- உள்ளே அபதே மாகப் பொருந்தி, உடன் ஆகும் வினைவு போல் - சமுத்திர சொருபமே ஆவது போல. ஈறு இல் —

நாச மில்லாத, பரம் ஆய்-மே லாய் உள்ள, அருவது ஆய-சூக்ஷ்ம மான, பிரமத்தோடு - பிரமத்துடன், ஆறும் - சாந்த மான, அறிவு ஆனவை - ஜீவர்கள், அடங்கியிடும்-லயத்தினை அடையும். (எ—று)

ஏ-ஏ-அன்று-ஏ-அசை நிலைகள்- (37)

ஆதலா லெல்லா மாகி
நின்றது மறிவே வேறொன்,
றோதிடக் கண்ட தில்லை
யுள்ளபே ரறிவை நீக்கி,
யேதமாம் பந்த மோடிவ்
வுலகமு மிலையே பார்க்கி,
லாதியா மறிவை மூடி
யறியாமை மயக்கு மன்றே. (38)

(இ—ள்) ஆதலால் - ஆகையினால். எல்லாம் ஆகி நின்றதும் - சர்வ பதார்த்த மாய் இருப்பதுவும், அறிவே - ஆன்மாவே, வேறு ஒன்று-அந்நிய மாக, ஓதிட கண்டது இல்லை - சொல்லப் பார்த்த தில்லை, உள்ள - (எதார்த்த மா) யுள்ள, பேர் அறிவை - பூரணப் பிரகாசத்தை, நீக்கி பார்க்கில் - விட்டு விசாரிக்கில், ஏதம் ஆம் - குற்றம் பொருந்திய. பந்தமோடு - பந்தத்தோடு, இவ் வுலகமும் இலை - இந்தப் பிரபஞ்சமும் இல்லை, ஆதி ஆம் - (ஆதலின்) முதன்மை யான, அறிவை மூடி - ஆன்மாவை மறைத்து, அறியாமை - அஞ்ஞானம், மயக்கும் - மயக்கத்தினைச் செய்யும். (எ—று)ஏ—அன்று—ஏ—அசை, (38)

அவ்வண்ண முரைத்த ஞான
மமலமாய் நுண்ணி தாகி,



மெய்வண்ண விகார மின்றி
வேறொன்றோ டணைத லின்றி,
மைவண்ண விருத்தி யின்றி
வளரொளி யாயே நிற்கு,
மிவ்வண்ண மல்லா தெல்லா
மிருளுடை யறிவா மன்றே. (39)

(இ—ள்) அவ் வண்ணம் - அவ் வாறு, உரைத்த ஞானம்-கூறிய ஞான மானது, அமலம் ஆய் - நின்மல மாய், நுண்ணிது ஆகி - சூக்ஷ்ம மாய், மெய் வண்ணம் – உண்மையினை யுடைய, விகாரம் இன்றி - நிர் விகார மாய், வேறு ஒன்றோடு – மற்றொன்றுடன். அணைதல் இன்றி - சம்பந்தம் இல்லாமல், மை வண்ண விருத்தி இன்றி - மயக்கத்தோடு கூடிய விருத்தி யில்லாமல். வளர் ஒளி யாய் நிற்கும் - மிகுந்த பிரகாசம் பொருந்திய தாய் இருக்கும், இவ் வண்ணம் - இந்தப் பிரகாரம் (ஆன்ம ஞானம்), அல்லாத எல்லாம் - அல்லாத யாவும். இரு ளுடை அறிவு ஆம் - அஞ்ஞான மாம். (எ—று) அன்று-ஏ-ஏ-அசைகள். (39)

ஓங்கிய முனிகா ளுங்கட் குரைத்தவே தாந்த சாரஞ்,
சாங்கிய ஞான மென்றே சாற்றிடுந் தன்மை யாகு,
மீங்கினி யோக மாவ திறையின்றி விடய மெல்லா,
நீங்கியே யென்ற னோடு நிலைபெற நிற்றல் சித்தம்.(40)

(இ—ள்) ஓங்கிய - சிரேஷ்டம் பொருந்திய. முனிகாள் - (சௌநகாதி) ரிஷிகளே உங்கட்கு - உங்களுக்கு. உரைத்த - உபதேசித்த, வேதாந்த சாரம் - வேதத்தின் முடி வான சார (வசந) மானது, சாங்கிய ஞானம் - விசார ஜந்நிய ஞானம் (ஆகிய சாங்கியம்), என்று - என்று, சாற்

றிடும் - சொல்லும், தன்மை யாகும் -தன்மையை உடைய தாம், ஈங்கு - இவ் விடத்து, இனி யோக மாவது - இனி (ஞாந) யோக மாவது, சித்தம் - மநம், எல்லாம் விடயம்- சகல விஷயங்களேயும், இறை இன்றி - அணு வளவு மில் லாமல், நீங்கி - நிவிர்த்தித்து, என்றனேடு -(சேதந ஞகிய) என்னேடு, நிலே பெற நிற்றல் - ஐக்கியப்பட்டு இருப்ப தாம். (எ—று) ஏ—ஏ—அசை, (40)

யோகஞ்செய ஞாநம்முள தாகும்மத ஞலே.
யாகும்மித யோகம்பினே யதுவேசெய லுறுவோன்,
சோகம்முறு பயனுமவை யெய்தாதள வில்லாப்,
போகம்முழு தெல்லாம்புணர் கின்ருனிவ னேயாம்.(41)

(இ—ள்) யோகம் செய - யோகத்தினே (அப்பியா சம்) செய்ய, ஞாநம் உளது ஆகும் - (பிரம) ஞாநம் உண் டாகும், அதனுலே - அந்த ஞாநத்திஞலே, மித யோகம் ஆகும் - மித மான யோகம் உண்டாம், பினே – பின்னர், அது செய லுறுவோன் - அந்த யோக ஞாநத்தினே அடைந் தவன், சோகம் உறு - துன்பம் பொருந்திய, பயன் ஆம் அவை - பிரயோசநங்களே, எய்தாது - அடையாது, அளவு இல்லா - அளவிடக்கூடாத, முழுது எல்லாம் போகம் - சகல போகங்களேயும், இவனே புணர்கின்ருன் - இவனே அடைந்தவ ஞகின்ருன்- (எ—று) ஏ—அசை. (41)

யாதொன்றினே யோகஞ்செய்து பெறுவாரவர் பயனேப்,
பேதம்மில ஞாநந்தனே யறிவோர்பெற விசைவா,
ரேதம்மில தாகும்வண மொன்ருயிடல் கண்டோர்,
போதம்முறு பரமாகிய பொருள்கண்டவ ராவார். (42)



(இ—ள்) யாது ஒன்றினே - எதனே, யோகம் செய்து - யோகத்தைச் செய்து, பெறுவார் - அடைவார்களோ, அவர் பயனே - அவ ரடைகின்ற பிரயோஜநத்தினே, பேதம் இல ஞாநந்தனே - அபேத ஞாநத்தை, அறிவோர் - உணர்ந்தவர்கள், பெற-அடைய, இசைவார் - இச்சிப்பார்கள், ஏதம் இலது - ஒரு குற்றமு மில்லாது, ஆகும் வணம் - இருக்கும்படி, ஒன்றுஆயிடல் கண்டோர்-ஏகமா யிருத்தலேப் பார்த்தவர், போதம் உறு- ஞாநம் பொருந்திய, பரம் ஆகிய - மே லாகிய, பொருள் கண்டவர் ஆவார் - பிரமத்தை அறிந்தவர் ஆவார்கள். (எ—று) ஞாநம் தனே-என்பதில், தன்-அசை (42)

யோகஞ்செய்து நின்றென்றுகை விட்டேவிட
யம்மேன்.
மோகஞ்செல விழுமாலவர் முடிவில்லிட ருறுவார்,
சோகம்மொழி விக்கும்பர மெய்தார்தமை யடையா,
ராகம்மறை முழுதும்மது தனேயேயறை தருமால். (43)

(இ—ள்) யோகம் செய்து நின்று, யோகப்பியாசஞ் செய்து இருந்து, ஒன்று கைவிட்டு - ஞாநத்தினே கை விட்டு, விடயம் மேல் - விஷயங்களின் மீது, மோகம் செல விழும் - மயக்க மடைந்து விழுகின்ற, மாலவர் - பிராந்தர் கள், முடிவு இல் – அள வில்லாத, இடர் உறுவார் - துன் பத்தை அடைவாரீகள், சோகம் ஒழிவிக்கும் -துக்கத்தை நிவிர்த்திப்பிக்கும், பரம் எய்தார்-பிரமத்தை அடையார் கள், தமை அடையார் – ஆந்மாவை உணரார்கள், ஆகம்- பொருந்திய, மறை முழுதும் - வேதங்கள் யாவும், அது தனேயே அறைதரும் - அதையே சொல்லும், (எ—று) ''அது தனே'' என்பதில் தன்-ஏ—ஆல்—அசை (43)

அறையுமவ் வியத்தஞ் சீவன்
மாயையா லகிலஞ் செய்யு,
மிறைவனு மீச னென்று
மியம்பிடு மறைக ளென்னை,
முறைமையா லுயிர்கட் கெல்லா
மாகியே முழுதுங் கண்டே,
சிறையிறந் தோங்கி யெங்குந்
திகழ்தரு மொளியு நானே. (44)

(இ—ள்) என்னை - (பரமேசுர னாகிய) என்னை, அறையும் - சொல்லாநின்ற, அவ்வியத்தம் - (வெளிப்படாத தன்மையினால்), அவ்வியத்த மென்றும். சீவன் - (சாக்கிரம் முதல் மோக்ஷ பரியந்தம் ஜீவித்துக் கொண் டிருக்கின்றமையின்) சீவன் என்றும், மாயையால் - (எனது) மாயையினாலே, அகிலம் செய்யும் - பிரபஞ்சத்தைச் சிருட்டிக்கும், இறைவன் ஆம் - தலைவ னாகிய, ஈசன் என்றும் — ஈசுர னென்றும், மறைகள் இயம்பிடும் - வேதங்கள் கோஷிக்கும், முறைமையால் - இக் காரணத்தினால், உயிர்கட்கு - ஜீவர்கட்கு, எல்லா மாகி - யாவு மாகிய, முழுதுங் கண்டு - எல்லாவற்றையு முணர்ந்து, சிறை இறந்து - பந்தத்தினின்றும் விடுபட்டு, ஓங்கி - மேன்மை யடைந்து, எங்கும் - எவ் விடங்களிலும், திகழ்தரும் - விளங்குகின்ற, ஒளியும் நானே - பூரணப் பிரகாசமும் நா னாகின்றேன், (ஏ—று)

ஏ-ஏ-ஏ-அசை. (44)

எல்லாரு மாசை யுறுகின்ற யாவு
மிரதங்கள் கந்த மெனிலே.
நில்லாதி றந்து வருமாறி லாது
நிலையாகி நின்ற வெனிலே,



பல்லார்மெய் கைக ளொடுகால்க ளெண்ணில்
பலவாய வற்றி னறிவாய்,
நில்லாது நின்று நிகழ்கின்ற தென்று
முளனாய்வி ளங்கு மெனிலே. (45)

(இ—ள்) நில்லாது - அஸ்த்திர மாய், இறந்து - நாசத்தை யடைந்து, வரும் ஆறு இலாது - உண்டாகும் படி இல்லாது, நிலை யாகி நின்ற - ஸ்த்திரமா யிருக்கின்ற, எனில் - என் னிடத்து, எல்லாரும் - யாவரும், ஆசை யுறுகின்ற - அவாக் கொள்ளுகின்ற, இரதங்கள் யாவும் - சகல ரசமும், கந்தம் - கந்தமும் (இருக்கின்றது), எனில் - என் னிடத்திருந்து யாவும் உண்டாகின்றன, என்றும் - எப் பொழுதும், உளனாய் - உள்ளவனாய், விளங்கும் எனில் - விளங்குகின்ற என்னிடத்து, பல் ஆர் - பல வாகப் பொருந்திய, மெய் - சரீரங்களும், கைகள் - அஸ்தங்களும், கால்கள் - பாதங்களும், எண்ணில் பல ஆய் - அளவிடக் கூடாத அநேக மாய், அவற்றின் அறி வாய் - அவற்றின் ஞானங்க ளாய், நில்லாது நின்று - ஸ்த்திரமா யில்லாமல் இருந்து, நிகழ்கின்றது - விளங்கிக் கொண்டிருக்கின்றது. (எ—று)

ஒடு-ஏ-ஏ-ஏ—அசை, (45)

கண்ணின்றி யெல்லாங் காண்பன்
காலின்றி யெங்குஞ் செல்வன்,
விண்ணின்ற வோசை யெல்லாஞ்
செவியின்றி விரைந்து கேட்பன்,
பண்ணின்ற கைய தின்றிப்
பற்றுவன் விடுவ னென்றே,

யண்ணனன் முனிவர் தங்கட்
கருளின னறியும் வண்ணம். (46)

(இ—ள்) அண்ணல் - பரம சிவன், நல் முனிவர் தங் கட்கு - சிரேஷ்டம் பொருந்திய (சௌநகாதி) ரிஷிகளுக்கு, கண் இன்றி - நேத்திரம் இல்லாமல். எல்லாம் காண்பன்- யாவற்றையும் பார்ப்பேன், கால் இன்றி - பாத மில்லாமல், எங்கும் செல்வன் - எல்லா இடங்கட்கும் நடப்பேன், செவி இன்றி - சுரோத்திர மில்லாமல், விண் ணின்ற ஓசை யெல்லாம் - ஆகாயத்தினின் றுண்டாகின்ற சத்த மனைத் தும், விரைந்து கேட்பன் - அதி சீக்கிர மாக சிரவணிப் பேன், பண்ணின்ற - அழகோடு கூடிய, கையது இன்றி- கைக ளில்லாமல், பற்றுவன் - (எல்லாவற்றையும்) பிடிப் பேன், விடுவன் - (விட்டு) விடுவேன், என்று - என்று, அறியும் வண்ணம் - தெரியும்படி, அருளினன் - (திரு வாய் மலர்ந்) தருளினன். (எ—று)

ஏ—அசை-'கையது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி, முனிவர் ''தம் கட்கு'' என்பதில், தம்- அசை. (46)

எல்லா ரையுநா னறிந்திருப்ப
னென்னை யறிவா ரியாருமிலை,
நல்லா ருண்மை யெனக்கண்டோர்
நாடி நின்றே யறிந்தபடி,
யலலா தில்லா வளவில்பரம்
புருட னெனவு மறிவின்றி,
யெல்லா மாகி யல்லாத
வேக மெனவு மியம்புவரால். (47)



(இ—ள்) நான் - (பரமசிவ னாகிய) நான், எல்லா ரையும் - சர்வ சீவர்களையும், அறிந்து - இருப்பன்- தெரிந்து இருக்கின்றேன், என்னை அறிவார் - என்னை உணருபவர்கள், யாரும் இலை- ஒருவரும் இல்லை, உண்மை என - சத்தியம் என்று, கண்டோர் - பார்த்த, நல்லார்- நல்லவர்கள், நாடி நின்று - தியாகித்து இருந்து, அறிந்த படி அல்லாது - உணர்ந்தபடி அல்லமாமல், அளவில் இல்லா - எல்லை யின்றிய, பரம் எனவும் - பிரமம் என்றும், புருடன் எனவும் - புருஷ னென்றும், அறிவு இன்றி - அறிவற்ற, எல்லாம் ஆகி - சர்வமு மாய், அல்லாத - அல் லாதனவு மாய், ஏகம் எனவும் - ஒன்றே எனவும். இயம்புவர் - கூறுவார்கள். (எ—று) ஏ—ஆல்—அசை. (47)

பார்த்துள முனிவ ரென்னைப்
பரமென்றும் பண்டு மின்று,
நீத்துள குணததோ னென்று
நின்மல ரூப னென்று,
மாத்துமப் பொருளீ தென்று
மலர்தலை யுலகுக் குண்மை,
யாய்த்துமிவ் வறிவே யெனப
ரல்லவ ரறியா ரென்றும். (48)

(இ—ள்) என்னை - எனது சொருபத்தை, பார்த் துள முனிவர் - உணர்ந்திருக்கின்ற முனிவர்கள், பரம் என் றும் - பிரமம் என்றும், பண்டும் இன்றும் - முன்னமும் இப் பொழுதும், நீத்துள குணத்தோன் என்றும் - நிர்க குணன் என்றும், நின்மல ரூபன் என்றும் - நின் மல ஸ்வருப னென்றும், ஈது ஆத்துமப் பொருள் - இது ஆத்ம வஸ்த்து, என்றும்- எனவும், இவ் அறிவே - இந்த சித்தே,

அலர் தலை - விரிந்த இடத்தினை உடைய, உலகுக்கு - இப் பிரபஞ்சத்திற்கு, உண்மை ஆய்த்தும் - சத்தியமா யிருப் பது, என்பர் - என்று கூறுவார்கள், அல்லவர் - (எனது சொருபத்தை அறியாத) அஞ்ஞாநிகள், என்றும்- எப் பொழுதும், அறியார் - உணரார்கள். (எ—று) (48)

யாதொன்றை யமரர் தம்மா லறிவரி தாகு மென்ற,
ஞேதிய மாயை மூட மோகத்தா லுணர்வ தின்றி,
யேதுவொன் றிசையா வென்ற ணுண்மையா மறிவைக் காணு,
ரீதென முநிகட் கெல்லா மியம்பின னிமையோர்க் கீசன். (49)

(இ—ள்) யாது ஒன்றை - எதை, அமரர் தம்மால்— தேவர்களால், அறிவு அரி தாகும் - உணர முடியாத, ஓதிய என் மாயை - சொல்லப்பட்ட எனது மாயை, மூட - மறைத்த. மோகத்தால் - (அந்த) மயக்கத்தினுல், உணர்வது இன்றி-ஞாந மில்லாமல், ஒன்று ஏது இசையா- ஒரு காரணத்தினுலும் முடியாத, என் உண்மை ஆம் - எனது சத்திய மாகிய, ஈது அறிவைக் காணர் - இந்த ஞாநத்தை அறியார்கள், இமையோர்க்கு தேவர்களுக்கு, ஈசன் – (தேவ னுகிய) பரம சிவன், என - என்று, முநி கட்கு எல்லாம் - (சௌநகாதி) ரிஷிக ளனைவருக்கும், இயம்பினன் - உபதேசித்தருளினுன். (எ—று)

'அமரர் தம்மால்' என்பதில், தம் – தன் –தன்- அசை. 'உணர்வது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி (49)

நானே மாயை தனைக்கடந்து
நிற்பேன் ஞாலந் தனையியற்றே,



னேனை யனவு மெனையொழிய
யாதோர் செயலு மில்லதனு,
ஞனே சகத்தை நடத்தியிடு
நாத னென்று நடுவென்று,
மாளு வறிவோ ரறிந்திடுவ
ரென்றே யருளிச் செய்தனனுல். (50)

(இ—ள்) ஆளு அறிவோர் - உண்மை ஞாநத்தை யுடையவர்கள், நான் மாயைதனைக் கடந்து-நான் மாயா தீத னுய், நிற்பேன் - இருப்பேன்- ஞாலந்தனை - பிரபஞ் சத்தை, இயற்றேன் - சிருட்டியேன். ஏனையனவும் - மற்ற வையும், எனை ஒழிய - என்னை இல்லாமல், யாது ஓர் செய லும் இல் - எந்தக் காரியமும் நடவாது, அதனுல் - ஆகை யால், நானே சகத்தை - நானே பிரபஞ்சத்தை, நடத்தி யிடும் நாதன் - நடத்துவிக்கும் தலைவன், என்றும் - என வும், நடுவு என்றும் - நடு நிலைமையை உடையவ னென் றும், அறிந்திடுவர் - உணருவார்கள், என்று அருளிச் செய்தனன் - என உபதேசித்தனன். (எ—று)

'மாயை தனை' என்பதில், 'ஞாலந் தனை' என்பதில், தன்-தன்-ஏ–ஏ–ஆல்–அசை. (50)

எங்குந் தானு யாவையுமாய்
நின்றே யொன்று யழிவின்றி,
யங்க மொன்றின் றறிவேயாய்
நுண்ணி தாய வருள்வடிவைத்,
தங்கு ஞாந யோகத்தான்
முன்பா சரித்துப் பினைவந்தெ,

னங்க மான பேரொளியோ
டொனறி யாஞ யடங்கிடுவார். (51)

(இ—ள்) தான் எங்கும் ஆய் - தான் சர்வத்ர வியாபி யாய், யாவையும் ஆய் - எல்லாப் பதார்த்தங்களு மாய், நின்று - இருந்து, ஒன்று ஆய் - ஏக மாய், அழிவு இன்றி - நித்தியமாய், ஒன்று அங்கம் இன்று - யா தொரு சரீரமும் இல்லாமல், அறிவே ஆய் - ஆன்மா வாய், நுண்ணிது ஆய - சூக்ஷுமமா யுள்ள, அருள் வடிவை - ஞாந வடிவை, தங்கு ஞாந யோகத்தால் - பொருந்திய ஞாந (சாங்கிய) யோகத்தினுல், முன்பு ஆசரித்து - முன்னர் அநுஷ்டித்து, பின வந்து - பின்னர் வந்து, என் அங்கம் ஆன - எனது சரீர மான. பேர் ஒளியோடு - பூரணப் பிரகாசத்தோடு, ஒன்றி - பொருந்தி, யான் ஆய் அடங்குடுவார் – யா ஞகை ஐயிக்கிய மாவார்கள். (எ-று) ஏ—ஏ—அசை (51)

ஆங்கவர்க ளென் னுடைய மாயையைவ சித்து,
நீங்கியபின் னின்மலம தாயவுரு வாவ,
ரீங்குதுசெ யாதவர்க ளென்றுமெனை யெய்தா,
ரோங்கிவரு பந்தமதி னின்றுடனு ழைப்பார். (52)

(இ—ள்) அவர்கள் - ஞாந யோகத்தினை அப்பியாசித்தவர்கள், என் னுடைய - எனது, மாயையை வசித்து - மாயையை வசம் பண்ணி, நீங்கிய பின் - மாயாதீதர்களான பின்பு, நின் மல மது ஆய உரு வாவர் - நின் மல ஸ்வரூப மாவார்கள், ஈங்கு இது செயாதவர்கள் - இவ்விடத்து ஞாந யோகத்தினை அப்யாசித்து மாயையை வசம் பண்ணுதவர்கள், என்றும் - எப் பொழுதும், எனை எய்



தார் - என்னை அடையார்கள், ஓங்கி வரு - விருத்தி யாகிக் கொண்டிருக்கின்ற, பந்த மதினின்று - பந்தத்தி லிருந்து, உடன் - கூடவே, உழைப்பார் - கஷ்டப்படுவார்கள். (எ—று) ஆங்கு-அசை, 'நின்மல மது'– 'பந்தமது'-என்பவற்றில், அது - பகுதிப் பொருள் விகுதி. (52)

சுத்தனு யொன்ரு யென்னைக்
கூடிடுந் தொன்மை யோர்க,
ளெத்தனை நூறு கோடி
கற்பங்க டாஞ்சென் ருலு,
மெய்த்தக மீளா ரென்றன்
விளங்குமெய் யருளா லென்றே,
யித்தகைத் தெனவே வேத
மியம்பிடு மென்ரு னீசன். (53)

(இ—ள்) சுத்தன் ஆய் - பரிசுத்த னுய், ஒன்று ஆய் - ஏக மாய், என்னை கூடிடும் - என்னை அடைகின்ற, தொன்மையோாகள் - பழமை யான பெரியோர்கள், எத்தனை நூறு கோடி-எவ் வளவு நூறு கோடி, கர்ப்பங்கள் சென்ருலும்-கர்ப்பங்கள் போயினும், என் விளங்கு மெய் அருளால் - எனது விளங்காநின்ற உண்மை ஞாநத்தினுல், மெய் தகமீளார் - சத்திய மாக ஜன்மததினை யடையார்கள், என்று - என, இத் தகைத்து - இந்தப் பிரகாரம், 'வேதம்- இயம்பிடும் - வேதங்கள் கோஷிக்கும், என்ருன் ஈசன் - என்று ஈசுரன் திரு வாய் மலர்ந்தருளினுன். (எ—று)

தான் தன்—ஏ—ஏ அசை (53)

என்ஞ லுங்கட் கியம்பியவிஞ்
ஞாந ஞாந யோகிகட்கும்,

பின்னு முமது புத்திரர்க்கும்
பேணு மியோக சாங்கியர்க்குஞ்,
சொன்னு லாகு மல்லாரைத்
தூர வொழிப்ப திதுவென்றே,
தன்னே ரனையா னுமீசன்
ருனே சாற்றி யருளினுன். (54)

(இ—ள்) என்னுல் உங்கட்கு - என்னுல் உங்களுக்கு, இயம்பிய - உபதேசித்தருளிய, பேணும் - விரும்பத் தகுந்த, யோக சாங்கியம் - சாங்கிய யோக மாகிய, இ ஞாநம் - இந்த ஞாநத்தை, ஞாந யோகிகட்கும் - ஞாந மார்க்கத்தை யநுட்டிக்கும் யோகிகட்கும், பின் ஆம் - பின் வரப்பட்ட, உமது புத்திரர்க்கும் - உமது சந்ததியார்க்கும், சொன்னுல் ஆகும் - உபதேசித்தால் பிரயோஜநப்படும், அல்லாரை - ஞாந யோக மல்லாத அபக்குவர்களை, இது தூர ஒழிப்பது - இது தள்ளத் தக்கது, என்று - என்று, தன் னேர் அனையான் ஆம் - தனக்குத் தானே சமான மாகிய, ஈசன் - பரம சிவன். தானே சாற்றி அருளினுன், - தானே உபதேசஞ் செய்தனன். (எ—று) (54)

தான் — ஏ - அசை.

அன்றரி யாமை யாகி யருள்செய்த புராணந் தன்னின்,
முன்றிகழ் பிறவி தீர முநிகளுக் கீசன் சொன்னுன்,
குன்றிடா மறையி னீருங் கீதையி னிரண்டா மத்தை,
யின்றெலா மறியும் வண்ண மியன்றவா றுரைத்த
தன்றே. (55)

(இ—ள்) அன்று - முற் காலத்து, அரி - மகா விஷ்ணு, ஆமை ஆகி - கூர்ம நாராயண ராய், அருள் செய்த - உபதேசித்த, புராணந் தன்னின் - கூர்ம புராணத்தில், முன் திகழ் - முன்னே உள்ள. பிறவி தீர - ஜந்மம் நீங்க, முநிகளுக்கு - (சௌநகாதி) ரிஷிகட்கு, ஈசன் சொன்னுன்-ஈசுரன் திரு வாய் மலர்ந்தனன், குன்றிடா-கெடாத, மறையின் ஈ றும் - வேதத்தின் அந்த மான, கீதையின் - (ஈசுர) கீதை வாக்கியத்தின், இரண்டாம் அத்தை - இரண்டாவது அத்தியாயத்தை, இன்று எலாம் - இப் பொழுது யாவரும், அறியும் வண்ணம் - உணரும்படி, இயன்ற ஆறு - என் புத்திக்கு எட்டிய அளவு, உரைத்தது - கூறினேன். (எ—று) 'புராணந் தன்னில்' என்பதில், தன் அன்று ஏ—அசைகள். (55)

2. சாங்கிய யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் - 85.

---



## 3. சம்பிரதாய அத்தியாயம்.

முன்ன நான்மறை யோதிமு டிந்ததை,
யுன்னு மாறரி தாகிய வொன்றினை,
ஞன்னு ஞாநமு ஞேயமு மல்லதை,
யின்னங் கேண்மினென் றீசனி யம்பினுன். (1)

(இ—ள்) முன்னம் - பூர்வம், நான் மறை - நான்கு வேதங்களும், ஓதி முடிந்ததை - உபதேசித்ததை, உன்னும் ஆறு - மநதினுல் சிந்திக்க, அரிது ஆகிய ஒன்றினை - அருமையா யுள்ள பிரமத்தினை, ஞன்னு - கருதாநின்ற, ஞாநமும் ஞேயமும் - ஞாநமும் விஷயமும், அல்லதை - அல்லாததை, இன்னம் கேண்மின்-இன்னமும் சிரவணிப்

பின்னு முமது புத்திரர்க்கும்
பேணு மியோக சாங்கியர்க்குஞ்,
சொன்னு லாகு மல்லாரைத்
தூர வொழிப்ப திதுவென்றே,
தன்னே ரனையா னுமீசன்
ருனே சாற்றி யருளினுன். (54)

(இ—ள்) என்னுல் உங்கட்கு - என்னுல் உங்களுக்கு, இயம்பிய - உபதேசித்தருளிய, பேணும் - விரும் பத் தகுந்த, யோக சாங்கியம் - சாங்கிய யோக மாகிய, இ ஞாநம் - இந்த ஞாநத்தை, ஞாந யோகிகட்கும் - ஞாந மார்க்கத்தை யநுட்டிக்கும் யோகிகட்கும், பின் ஆம் - பின் வரப்பட்ட, உமது புத்திரர்க்கும் - உமது சந்ததியார்க் கும், சொன்னுல் ஆகும் - உபதேசித்தால் பிரயோஜநப் படும், அல்லாரை - ஞாந யோக மல்லாத அபக்குவர்களை, இது தூர ஒழிப்பது - இது தள்ளத் தக்கது, என்று - என்று, தன் னேர் அனையான் ஆம் - தனக்குத் தானே சமாந மாகிய, ஈசன் - பரம சிவன். தானே சாற்றி அருளி னுன், - தானே உபதேசஞ் செய்தனன். (எ—று)

தான் — ஏ - அசை. (54)

அன்றரி யாமை யாகி யருள்செய்த புராணந் தன்னின்,
முன்றிகழ் பிறவி தீர முநிகளுக் கீசன் சொன்னுன்,
குன்றிடா மறையி னீருங் கீதையி னிரண்டா மத்தை,
யின்றெலா மறியும் வண்ண மியன்றவா றுரைத்த
தன்றே. (55)

(இ—ள்) அன்று - முற் காலத்து, அரி - மகா விஷ்ணு, ஆமை ஆகி - கூர்ம நாராயண ராய், அருள் செய்த - உபதேசித்த, புராணந் தன்னின் - கூர்ம புராணத் தில், முன் திகழ் - முன்னே உள்ள. பிறவி தீர - ஜந்மம் நீங்க, முநிகளுக்கு - (சௌநகாதி) ரிஷிகட்கு, ஈசன் சொன் னுன் - ஈசுரன் திரு வாய் மலர்ந்தனன், குன்றிடா - கெடாத, மறையின் ஈ ரும் - வேதத்தின் அந்த மான, கீதையின் - (ஈசுர) கீதை வாக்கியத்தின், இரண்டாம் அத்தை - இரண் டாவது அத்தியாயத்தை, இன்று எலாம் - இப் பொழுது யாவரும், அறியும் வண்ணம் - உணரும்படி, இயன்ற ஆறு - என் புத்திக்கு எட்டிய அளவு, உரைத்தது - கூறி னேன். (எ—று) 'புராணந் தன்னில்' என்பதில், தன் அன்று ஏ—அசைகள். (55)



2. சாங்கிய யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் - 85.

---

## 3. சம்பிரதாய அத்தியாயம்.

முன்ன நான்மறை யோதிமு டிந்ததை,
யுன்னு மாறரி தாகிய வொன்றினை,
ஞன்னு ஞாநமு ஞேயமு மல்லதை,
யின்னங் கேண்மினென் றீசனி யம்பினுன். (1)

(இ—ள்) முன்னம் - பூர்வம், நான் மறை - நான்கு வேதங்களும், ஓதி முடிந்ததை - உபதேசித்ததை, உன் னும் ஆறு - மநதினுல் சிந்திக்க, அரிது ஆகிய ஒன்றினை - அருமையா யுள்ள பிரமத்தினை, ஞன்னு - கருதாநின்ற, ஞாநமும் ஞேயமும் - ஞாநமும் விஷயமும், அல்லதை - அல்லாததை, இன்னம் கேண்மின் - இன்னமும் சிரவணிப்

பீர்க ளாக, என்று - என, ஈசன் இயம்பினன் - பரம சிவன் திரு வாய் மலர்ந்தருளினன். (எ—று) (1)

நன்றாய் ஞான கனமாகி
நானா வெல்லாம் பிறப்பிடமா,
யொன்றாய் வேறோர் பொருளின்றி
யொளியா யொன்றோ டுவமிப்ப,
தன்றா யகில சராசரங்கட்
காதா ரந்தா னுயென்றும்,
பொன்றா ததுவா யவிகாரப்
பொருளாய்ப் புலனுய்ப் புணர்ப்பரிதாய். (2)

(இ—ள்) நன்று ஆய் - நல்ல, கந ஞானம் ஆகி - திரண்ட ஞானம் ஆய், நானா எல்லாம் . நானா வாகிய யாவும், பிறப்பு இடம் ஆய் - உண்டாதற்கு காரண மாய், ஒன்று ஆய் - ஏக மாய், வேறு பொருள் இன்றி-தனக்கு அந்நிய மான வஸ்த்து இன்றி, ஒளி ஆய்- பிரகாச மாய், ஒன்றோடு உவமிப்பது - வே றொன்றோடு சம மாகச் சொல்லுவதற்கு, அன் றாய் - அல்லாமல், அகில சராசரங் கட்கு - சகல பிரபஞ்சத்திற்கும், தான் ஆதாரம் ஆய் - தா னுதார மாகி, என்றும் பொன்றாதது ஆய் - காலத் திரயத்திலும் நாச மில்லாத தாய், அவிகாரப் பொரு ளாய்- நிர் விகார மாய், புலன் ஆய் - பஞ்ச விஷயங்களோடும், புணர்ப்பு அரி தாய் - சம்பந்த மின்றிய தாய். (எ—று)

இச் செய்யுள் குளகம். (2)

இரண்டா வதிலா தளவைகளா
லெட்டா ததுவா யெங்கெங்குஞ்,



சிரங்கால் கைகண் முகமுடைத்தாய்த்
தெரியப் படாதாய்த் திரமாகி,
யிரும்பார் நீர்தீ கால்வாந
மெல்லா மிருத்தற் கிடமாகும்,
பரந்தா னுணர்ந்தோர் நிர்க்குணமாம்
பரம வியோம மென்பர்களால். (3)

(இ—ள்) இரண் டாவது இலாது - துவைத மில் லாது, அளவைகளால் - பிரமாணங்களால், எட்டாதது ஆய் - அறியக் கூடாதது (அவாங் மானச கோசரம்) ஆய், எங்கும் சிரம் - எவ் விடங்களிலும் சிரசும், எங்கும் கால் - எங்கும் கால்களும், எங்கும் கை - எங்கும் கை களும், எங்கும் கண் - எங்கும் கண்களும், எங்கும் முகம் உடைத் தாய் - எவ் விடங்களிலும் முகம் உடைய தாய்- தெரியப்படாது ஆய் - உணர முடியாத தாய், திரம் ஆகி - நிலை யாகி, இரும் பார் - பெரிய பூமியும், நீர் தீ கால் வாநம் - ஜலம் அக்நி வாயு ஆகாயம், எல்லாம் இருத் தற்கு - யாவும் பொருந்தி யிருப்பதற்கு, இடம் ஆகும் பரம் - இட மாகிய பிரமத்தினை, உணர்ந்தோர் - அறிந்த வர்கள், நிர்க்குணம் ஆம் - நிர்க்குண மான, பரம வியோ மம் - மே லாகிய ஆகாயம். என்பர்கள் - என்று கூறு வார்கள். (எ—று) தான் — ஆல் - அசை. (3)

அரிதா யறியா வறிவேயா
மனைத்தா ருயிர்க்கு முயிரந்தப்,
பெரிதா யகமும் புறமுமாம்
பிரம நானே பிறர்க்கென்றுந்
தெரியா தென்னு லேபரம்பி
யென்பா லிருந்திச் சகமெல்லாஞ்,

சரியா நின்ற தென்றறிவான்
சகல வேதங் களுமறிவான். (4)

(இ—ள்) அரிது ஆய் - (அடைதற்கு) அரிய தாய், அறியா அறிவே ஆம் - உணர முடியாத ஞானமாம். அனைத்து ஆர் உயிர்க்கும் பொருந்திய சகல ஜீவர்கட்கும், உயிர் - பிராண ஞய், அந்தப் பெரிது ஆய் - அவ் வளவு மகத் தாய், அகமும் புறமும் ஆம் - உள்ளும் வெளியி லு மாகிய, பிரமம் நானே - பிரமம் நாஞ யிருக்கின்றேன், பிறர்க்கு - அந்நியர்கட்கு, என்றும் தெரியாது - என்றும் அறிய முடியாது, இச் செகம் எல்லாம் - இந்தப் பிரபஞ் சங்கள் யாவும், என்ஞலே பரம்பி - என்ஞலே விரிந்து, என் பால் இருந்து - என்னிடத் திருந்து, சரியாநின்றது - சலித்துக் கொண்டு இருக்கின்றது, என்று அறிவான் - என்று உணருமவன், சகல வேதங்களும் - சகல வேதங் களையும், அறிவான் - உணர்ந்தவ ஞகின்ருன். (எ-று) (4)

ஒருதா ஞய பரம்பொருளை
யுணரப் படாத வியல்பதனுற்,
றெரியா மையெனப் படுமந்தத்
தெரியா மையிலே திகழ்காலம்,
பிரதா நந்தான் புமான்பிறந்த
வவற்ருன் முழுதும பிறத்தலிஞ,
னிருபா திகமாம் பிரமமய
நிகழ்வே யிந்த நிகழ்வெல்லாம். (5)

(இ—ள்) ஒரு தான் ஆய - ஒப் பற்ற தா ஞகிய, பரம் பொருளை - பிரம வஸ்துவை, உணரப்படாத - அறிய முடியாத, இயல்பு அதனுல் - தன்மையினுல், தெரி



யாமை எனப்படும் - அவ்வியத்த மென்று சொல்லப்படும், அந்த தெரியாமையில் - அந்த அவ்வியத்தத்தினின்றும், திகழ் காலம் - விளங்காநின்ற காலமும், பிரதாநம் - பிரதா நமும், புமான் - புருஷனும், பிறந்த - உண்டாயின, அவற்ருல் - அந்தக் காலம் பிரதாநம் புருஷன் ஆகிய மூன்ருலும், முழுதும் பிறத்தலிஞல் - சகலமும் உண்டானமையின், இந்த நிகழ்வு எல்லாம் - இந்து தோற்றுவன யாவும், நிருபாதிக மாம் - நிருபாதிக மாகிய, பிரம மய நிகழ்வே - பிரம சொருபத்தின் தோற் றமே யாம். (எ—று) ஏ-தான்-அசை. (5)

சொன்ன காலம் பகுதிபுமான்
ரேற்ற மென்பா லிரண்டிற்கு,
முன்ன ராகுங் காலமிவை
மூன்று மென்பா லேமுடியு,
மன்ன தன்மை யாலாதி
யந்த மின்றி யந்நியமா,
யென்னில் வேரு யின்மையிஞ
லென்ன துருவே யென்பர்களால். (6)

(இ—ள்) சொன்ன - (முற்) கூறிய, காலம் பகுதி புமான் - காலமும் பிரகிருதியும் புருஷனும், என்பால் தோற்றம் - என்னிடத் திருந்து முண்டாயின, காலம்-கால மானது, இரண்டிற்கும் - (பிரகிருதி புருஷன் ஆகிய) இரண்டிற்கும், முன்னர் ஆகும் -முன்னர் உண்டாயிற்று, என்பாலே – என் னிடத்திலேயே, இவை மூன்றும் - (இந் தப் (பிரகிருதி புருஷன் காலம்) மூன்றும், முடியும் - அந் தத்தை அடையும், அன்ன தன்மையால் – அந்தக் காரணத் திஞல், ஆதி அந்தம் இன்றி - ஆதியும் அந்தமு மில்லாமல்,

என்னில் அந்நியம் ஆய் - எனக்கு அந்நிய மாக, வேறு ஆய்
இன்மையினால் - வேறு வஸ்த்து இல்லாததனால், என்னது
உருவே - என் னுடைய சொருபமே, என்பர்கள்-(காலம்
பிரகிருதி புருஷன்) என்று சொல்லுவார்கள் (எ—று) ஆல்-
அசை. (6)

மகமுத லாக விசேடமீ ருக
மன்னுமிச் சகத்தெலாந் தந்து.
சகலவா ருயிர்க்கும் மோகமே செய்யுஞ்
சத்தியைப் பகுதியா கவுமப்,
பகுதியி லாங்கா ரத்துடன் புணர்ப்பாற்
பஞ்சவிஞ் சகனெனப் பட்டுச்,
சகமொடு துக்கந் துய்ப்பவன் புருட
னாகவுந் துணிந்தனர் தொல்லோர். (7)

(இ—ள்) மகம் முத லாக - மக தத்துவம் முத லாக,
விசேடம் ஈறு ஆக - விசேடம் இறுதி யாக, மன்னும் -
நிலைபெற்ற, இச் சகத்து எலாம் தந்து - இந்த பிரபஞ்சம்
யாவற்றையும் படைத்து, ஆர் - நிறைந்த, சகல உயிர்க்
கும் - சர்வ ஜீவர்கட்கும், மோகமே செய்யும் — மயக்கத்
தினைச் செய்யும், சத்தியை - சத்தியினை, பகுதி ஆகவும் -
பிரகிருதி யாகவும், பகுதியில் - (அந்தப்) பிரகிருதியில்,
ஆங்காரத்துடன் புணர்ப்பால் - அகங்கார தத்துவத்தின்
சம்பந்தத்தால்; பஞ்ச விஞ்சகன் - இரு பத் தைந்து தத்து
வத்தினை உடையவன், எனப்பட்டு - என்று சொல்லப்
பட்டு, சுகமொடு துக்கம் - சுக துக்கங்களை, துய்ப்பவன்-
அநுபவிப்பவன், புருடன் ஆகவும் - புருஷன் எனவும்,
தொல்லோர் - பழமையான பெரியோர்கள், துணிந்தனர் -
நிச்சயம் செய்தார்கள். (எ—று). ஏ-அசை. (7)



ஆதிவி காரப் பகுதியின் மானா
மறிதலில் விஞ்ஞா தாவும வன்பே,
ரேதவ கங்கா ரம்மென மானா
மொருவனு மேயங் கிருபெய ருற்றான்,
றீதுறு தேகங் கொண்டுந டத்துஞ்
சீவனு மாகச் செப்புத லுற்றா
னாதலி னெந்தப் பிறவியு மின்ப
துன்பமு மாங்கா ரத்தவ னாலே. (8)

(இ—ள்) ஆதி விகாரப் பகுதியில் - முதல் விகா
ரத்தை யடைந்த பிரகிருதியினின்றும், மான் ஆம் - மக
தத்துவம் உண்டாயிற்று, அறிதலில் விஞ்ஞாதாவும் -
உணருகின்றபடியால் விஞ்ஞாதாவும், அவன் பேர் - அவ
னது நாம மாம், மான்-அந்த மகதத்துவத்தினின்றும். ஏத
அகங்காரம் என ஆம் - குற்றம் பொருந்திய அகங்கார
தத்துவம் என ஒன்று உண்டாயிற்று, அங்கு ஒருவனுமே-
அவ்விடத்து மக தத்துவம் ஒருவனே, இரு பெயர் உற்
றான் - மக தத்துவம் என்றும், அகங்கார தத்துவ மென்
றும், இரண்டு பெயர் அடைந்தான், தீது உறு தேகம்-
குற்றம் பொருந்திய சரீரத்தை, கொண்டு நடத்தும் -
பெற்று நடத்துகின்ற, சீவனும் ஆக - சீவன் என்று,
செப்புதல் உற்றான் - சொல்ல லாயினன், ஆதலின் - ஆகை
யினால், எந்தப் பிறவியும் - எப்படிப்பட்ட பிறப்பும்,
இன்ப துன்பமும் - சுக துக்கங்களும், ஆங்காரத்தவனால்-
அகங்கார தத்துவத்தி லிருப்பவனால் உண்டாகின்றன
வாம். (எ—று) ஏ—அசை. (8)

கோல மறிவே சீவனுக்குங்
கொண்டு துய்க்குங் கருவிமாஞ்,

சாலு மதனு லவிவேக
　　மதனுற் றுன்பஞ் சாருமான்,
மாலும் பகுதி யிற்புருடன்
　　வைத்த பற்ருன் மற்றந்தக்,
காலஞ் செய்யும் பிறப்பிறப்புக்
　　கதுவே யென்றுங் காரணமாம். (9)

(இ—ள்) கோலம் அறிவே - அழகினை யுடைய அறிவு ரூப, சிவனுக்கும் - சீவனுக்கும், கொண்டு துய்க்கும் - கொண்டு அநுபவிக்கும், கருவி - சாதநம், மநம் - மந மாகும், அதனுல்-அம் மநத்தால், அவிவேகம் சாலும்- அவிவேகம் வந்து பொருந்தும், அதனுல் துன்பம் சாரும் - அவிவேகத்தால் துன்பம் உண்டாகின்றது, மாலும் பகுதியில் - மயக்கத்தை செய்கின்ற பிரகிருதியில், புருடன் வைத்த பற்ருன் - புருஷன் வைத்த சம்பந்தத்தினுல், அந்தக் காலம் செய்யும் - அந்த கால தத்துவம் செய்கின்ற, பிறப்பு இறப்புக்கு - ஜநந மரணத்திற்கு, என்றும் அதுவே - சதா காலமும் அந்தப் பிரகிருதி புருஷ சம்யோகமே, காரணம் ஆம் - ஏது ஆகும். (எ—று) ஆன் — மற்று—அசை நிலைகள். (9)

படைப்பதுங் காலந் தானே
　　படைத்தவை யாவு நேராய்த்,
துடைப்பதுங் காலந் தானே
　　தொல்லையீ றில்லாக் காலத்,
திடைப்படத் தோன்றி மாயு
　　மியாவையு மியாவ ரேனும்,
கடப்பவ ரில்லைக் காலங்
　　காலமே கடந்து நிற்கும். (10)



(இ—ள்) காலம் தானே - காலமே, படைப்பதும்- (சகலத்தையும்) சிருஷ்டி செய்வதும், காலம் தானே - காலமே, படைத்தவை யாவும் - சிருட்டித்த எல்லாவற்றையும், நேர் ஆய் துடைப்பதும் - நேரே சம்மரிப்பதும் ஆகும், தொல்லை ஈறு இல்லா - அநாதி யாக நாச மில்லாத, காலத்து இடைப்பட - காலத்தின் மத்தியில், தோன்றி மாயும் - உண்டாய் அழிகின்ற, யாவையும் - சகல பதார்த்தங்களும் கொண்டு, யாவரேனும் - எப்படிப்பட்ட பெரியோரேனும், காலம் கடப்பவ ரில்லை - காலத்தை கடந்தவர்க ளில்லை, காலமே கடந்து - காலமே சகலத்துக்கும் ஆதீத மாய், நிற்கும் - இருக்கும். (எ-று) 'தானே தானே' என்பவற்றில், தான் தான் - அசை. (10)

நிகில வுலகு நடக்கும்வகை
　　நேரே நியமிக் கின்றதது,
சகல வுயிர்க்கு முயிருமது
　　தானே யுள்ளா யிருக்குமது,
வகில வறிவு முடையதது
　　வாத லான்மற் றக்காலம்,
பகர வுறுவர் சநாதநனும்
　　பகவான் புருடோத் தமனுக. (11)

(இ—ள்) அது - அந்தக் காலமே, நிகில உலகும் - சகல பிரபஞ்சங்களையும் நடக்கும் வகை - நடக்கும் தன்மை யாக, நேரே நியமிக்கின்றது - சாக்ஷாத் நியமநஞ் செய்கின்றது, அது - அந்தக் காலமே, சகல உயிர்க்கும் உயிரும் - சகல ஜீவர்கட்கும் உயி ராக உள்ளதும், அது தானே - அந்தக் காலமே, உள் ளாய் இருக்கும் (சகல

பதார்த்தங்களிலும்) ஆந்தர மாய் இருக்கும், அது - அந்தக் காலமே, அகில அறிவும் - சகல ஞானமும், உடையதது - உடைத்தாயிருக்கின்றது, ஆதலான் - ஆகையினுல், அக் காலம் - அந்தக் காலத்தை, சநாதநம் ஆம் - நித்தியனு யுள்ள, பகவான் - ஷட் குணங்களை யுடைய, புருடோத்தமன் ஆக - புருஷோத்தம ஞகை, பகர உறுவர் - கூறுவார்கள். (எ-று) மற்று - அசை - 'தானே' - என்பதில், தான்—அசை. (11)

இந்தி யங்களிற் பரமம மநத்திலாங் கார
மந்த மானவாங் காரத்திற் பரமவ்வி யத்தம்,
பந்த மாமதிற் புமான்பர மதிற்பரங் கால
மிந்த யாவைக்கு முயிரிதிங் கிதனிஞ லெல்லாம். (12)

(இ—ள்) இந்தியங்களில் - இந்திரியங்கட்கும், பரம் - ஆந்தரமா யுள்ளது, மநம் - மநம் ஆகும், மநத்தில் - மநத்திலும், ஆங்காரம் பரம் - அகங்காரம் ஆந்தரமாயுள்ளது, அந்தம் ஆன - முடிவான, ஆங்காரத்தில் பரம் - அகங்காரத்திலும் ஆந்தரமா யுள்ளது, அவ்வியத்தம் - அவ்வியத்தமாகும், பந்தம் ஆம் அதில் - முடிச்சா யுள்ள அவ்வியத்தத்தில், புமான் பரம் - புருஷன் ஆந்தர மா யுள்ளது, அதில் - அந்தப் புருஷனிலும், இங்கு - இவ் விடத்து, இந்த யாவைக்கும் - கூறிய (இந்திரியம் மநம் அகங்காரம் அவ்வியத்தம் புருஷன் ஆகிய) எல்லாவற்றிற்கும், இது உயிர் பரம் - இந்த உயிராய் ஆந்தரமாயுள்ளது, காலம் - கால தத்துவ மாகும், இதனினுல் - இந்தக் கால தத்துவத்தினுலேயே, எல்லாம் - எல்லாம் உண்டாகின்றன. (எ-று) (12)

சகத்தி னுயிராங் காலபரந்
தன்னில் வியோமம் பரமதனை,



மிகுத்து நின்ற வியல்பதனுல்
வியோமா தீத ஞயெல்லாந்,
தெகித்த வதனு லநலென்று
செப்பப் பட்ட யானுகும்,
பகுப்பொன் றில்லாப் பரப்பிரம
மென்னில் வேருேர் பரமில்லை. (13)

(இ—ள்) சகத்தின் உயி ராம் காலம்- பிரபஞ்சத்திற்கு உயிரா யுள்ள காலதத்துவம், பரம் - ஆந்தரமா யுள்ளது, தன்னில் - அதில், வியோமம் பரம்-ஆகாயம் ஆந்தரமா யுள்ளது, அதனை மிகுத்து நின்ற - அவ் வாகாயத்தையும் கடந்து இருக்கின்ற, இயல்பு அதனுல் - தன்மையினுல், வியோம அதீத னுய் - நிர்க்குண வாகாயத்தைக் கடந்தவனு யிருந்து, எல்லாம் தெகித்த அதனுல் - யாவற்றையும் பஸ்மம் செய்வதனுல், அநல் என்று - அக்நி என்று, செப்பப்பட்ட யான் ஆகும் - சொல்லப்பட்ட யா னுகும், பகுப்பு ஒன்று இல்லா - பிறிதற்கு வே ருென்றும் இன்மையால், பரப் பிரமம் - மேலான பிரம மாம், என்னில் வேறு - எனக்கு அந்நிய மாக, ஓர் பரம் இல்லை - ஒரு ஆந்தர வஸ்த்துவும் இல்லை. (எ-று) (13)

பரமா மெல்லாப் பொருளுக்கும்
பரமா யுள்ள வெனையறிந்த,
வரமா முநிவன் ருனென்று
மரியான் பிறவான் மன்னுசரா,
சரமா முலக மெனையொழியத்
தானுண் டாகா தொருகாலுந்,

திரமா நானே யுலகனைத்துஞ்
செய்கின் றேனுஞ் சிதைப்பேனும். (14)

(இ—ள்) பரம் ஆம் - ஆந்தரமா யுள்ள, எல்லாப் பொருளுக்கும் - சகல வஸ்த்துக்கட்கும், பரம் ஆய் - ஆந்தர மாய், உள்ள எனை - இருக்கின்ற என்னை, அறிந்த - சாக்ஷசாத்காரித் துள்ள. வர மா முநிவன் - சிரேஷ்டம் பொருந்திய முநிவன், என்றும் - எப் பொழுதும், மரியான் - மரணத்தை அடையான், பிறவான் - ஜந்மத்தினை அடையான், மன்னு - நிலையா யுள்ள, சர அசரம் ஆம் உலகம் - சர அசர மாகிய பிரபஞ்சம் (யாவும்), எனை ஒழிய - என்னை இன்றி, ஒரு காலும் - ஒரு பொழுதும், உண்டாகாது-உண்டாக மாட்டாது, திரம் ஆம் நானே - நிலையா யுள்ள நானே, அனைத்து உலகும் - சகல பிரபஞ்சங்களையும், செய்கின்றேனும் - சிருஷ்டிப்பவனும், சிதைப்பேனும் - அழிப்பவனும் ஆம். (எ—று) தான் தான் - அசை. (14)

ஏகமாய் நின்ற வென்ற
னேவலா லெல்லை யில்லா,
மோகமாஞ் சகத்தை யென்றன்
முன்னரே நின்று காலம்.
பாகமாய்ப் பண்ணு மென்று
பரம்பர னருளி யீதே,
யாகும்வே தங்க ளெல்லா
மறைந்ததென் றருளிச் செய்தான். (15)

(இ—ள்) ஏகம் ஆய் நின்ற - அத்வைத ரூப மாயிருக்கின்ற, என்றன் ஏவலால் - என்னுடைய ஆக்ஞை



யினால், எல்லை இல்லா - அளவிட முடியாத, மோகம் ஆம் சகத்தை - மயக்க ஏதுவா யுள்ள பிரபஞ்சத்தை, என் முன்னரே நின்று - என் சந்நிதானத்திலேயே இருந்து, காலம் - கால தத்துவ மானது, பாக மாய் பண்ணும் என்று - பக்குவ மாகச் செய்யும் என, பரம் பரன் - பரத்துக் கெல்லாம் மே லாகிய பரமேசுவரன், ஈது அருளி - இவ் வாறு உபதேசித்து, எல்லாம் ஆகும் - யாவு மாகிய, வேதங்கள் - வேதங்கள், அறைந்தது - கூறுகின்றது, என்று - என, அருளிச் செய்தான் - திரு வாய் மலர்ந் தருளினன் (எ—று) தன்-தன்-ஏ-ஏ-அசை. (15)

3 சம்பிரதாய அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம்—100



## 4. பத்திமை அத்தியாயம்.

விரிந்ததிங் கேவனால விண்மு தற்பொருள்,
பெருந்தகை யாமவன் பெருமை பேசிடப்,
பரந்தெழு சிந்தையை யொருக்கிப் பத்தியா,
லருந்தவர் கேண்மினென் றருளிச் செய்குவான். (1)

(இ—ள்) இங்கு ஏவனால் - இவிடத்து எந்தப் பரமேசுரனால், விண் முதல் பொருள் - ஆகாயம் முதலிய (சகல) வஸ்த்துக்களும், விரிந்தது - உண்டாயினவோ, பெருந் தகை யாம் - மேன்மை பொருந்திய, அவன் பெருமை - அந்த பரமேசுரனது மகிமையை, பேசிட - சொல்ல, பரந்து எழு - விரி வாகச் செல்லுகின்ற, சிந்

தையை - மநதை, பத்தியால் ஒருக்கி - பத்தியினுல் வசம் பண்ணி, அரும் தவர் - அருமை யான தவத்தினை உடைய சௌநகாதி ரிஷிகளே, கேண்மின் என்று - சிரவணிப்பீர் கள் என்று, அருளிச் செய்குவான் - சொல்ல ஆரப்பித் தனன் (எ-று). (1)

சகத்துளோ ரியாவர்க்குஞ் சான்ருகி யானென்று,
மகத்துளே நின்ருலும் பழகியபத் தியினன்றி,
மகத்தினுற் ருநத்தான் மாதவத்தான் மற்றுமொரு,
முகத்தினு லொருவர்க்கு முன்னிற்கு மவனல்லேன். (2)

(இ—ள்) யான் - நான், சகத்துளோர் யாவர்க்குங் - பிரபஞ்சத்தி லுள்ள அனைவருக்கும், சான்று ஆகி - சாக்ஷி யாய், என்றும் - எப் பொழுதும், அகத்துளே நின்ருலும்- மநதினிடத்து இருப்பினும், பழகிய- நீண்ட கால மாக வழிபட்ட, பத்தியின் அன்றி-பத்தியினு லல்லாமல், மகத் தினுல் - யாகத்தாலும், தாநத்தால் - தா ந த் தி னு லும், மா தவத்தால்-(கிருச்சிர சாந்திராயணுதி) தவங்களினுலும், மற்றும் - வேறு, ஒரு முகத்தினுல் - ஒரு மார்க்கங்களினு லும், ஒருவர்க்கும் - எப்படிப்பட்டவர்கட்கும், முன் னிற்குமவன் - சாக்ஷாத் கரிப்பவன், அல்லேன் - அல் லன். (எ-று) (2)

ஈங்கென துள்ளா யிருக்கவெப் பொருளு
மெதுக்குமுள் ளாகியா னிருப்பன்,
ருங்குவன் முழுதுந் தருகுவ னெல்லாஞ்
சகலமு மழிவதென் றன்னுல்,



வோங்கிய முநிவர் பிதிரர்மற் றும்ப
ரொளிமிகும் பிரமரிந் திரர்வே,
ருங்கொளி மிகுத்தோ ரியாவரே யாக
வவருமென் னுண்மையை யறியார். (3)

(இ—ள்) ஈங்கு - இவ்விடத்து, எப் பொருளும் - எல்லா வஸ்த்துக்களும். எனது உள் ஆய் இருக்க - என் னிடத்து இருக்கவும், யான் - நான், எதுக்கும் - எல்லா வற்றிற்கும், உள் ஆகி யிருப்பன் - ஆந்தரமா யிருப்பேன், முழுதும்-எல்லாவற்றிற்கும், தாங்குவன் - ஆதாரமா யிருப் பேன், எல்லாம் - யாவற்றையும், தருகுவன் - உண்டாக் குவேன், என்னுல் - (பரமேசுர ஞகிய) என்னுல், சகலமும் அழிவது - சகலமும் நாசத்தை அடைவது, ஓங்கிய - சிரேஷ்டம் பொருந்திய, முநிவர் பிதிரர் உம்பர் - முநிவர் களும் பிதிர்க்களும் தேவர்களும், ஒளி மிகும் பிரமர் - பிர காசம் மிகுந்த பிரமாக்களும், இந்திரர் - இந்திரர்களும், வேறு ஒளி மிகுத்தோர் யாவரே யாக - வேறு பிரகாசம் பொருந்திய எவ ராயினும், அவரும் - அவர்களும், என் உண்மையை - எனது எதார்த்த சொருபத்தை, அறியார்- உணரார்கள். (எ-று), ஆங்கு மற்று தன் அசை, (3)

சந்ததம் வேத மியாவையும் பரமாச்
சாற்றவும் படுவதிங் கெனையே,
யந்தண ரெல்லாம் வேள்வியி னுலு
மங்கியிற் போற்றுவ தெனையே,
யெந்தலோ கத்தும் பிதாமகன் முதலா
மியாவரு மிறைஞ்சுவ தெனையே,
சிந்தையை யொருக்கி யோகிக ளுளத்தே
தியாநமுற் றிருப்பது மெனையே, (4)

(இ—ள்) இங்கு - இவ் விடத்து, எனையே - (பரமே சுர ஞகிய) என்னையே, சந்ததம் - சதா காலமும், வேதம் யாவையும் - வேதங்க ளெல்லாம், பர மாய் சாற்றவும் படு வது - உயர் வாகச் சொல்லப்படுவதும் ஆகும், எனையே - என்னையே, அந்தணர் எல்லாம் – பிராமணர்க ளெல்லோ ரும், வேள்வியினுலும் - யாகத்தினுலும், அங்கியில் - அக்கி நியில் (மந்திரங்களைச் சொல்லி), போற்றுவது - வணங்கு வதும் ஆம், எந்த லோகக்தும் - எல்லா உலகங்களிலும், பிதா மகன் முத லாம் யாவரும் - பிரமா முதலிய எல்லோ ரும், எனையே இறைஞ்சுவது - என்னையே நமஸ்கரிப்பதும் ஆம், யோகிகள் சிந்தையை - யோகிகள் சித்தத்தை, ஒருக்கி - வசம் பண்ணி, உளத்து - மநதின்கண், எனையே- என்னையே, தியாநம் உற்று இருப்பதும் - தியாநித்துக் கொண்டு இருப்பதுவு மாகும். (எ—று). ஏ-ஏஅசை (4)

ஏக ஞகி நிற்கின்ற யானே
யெல்லா விமையவர்க்குந்,
தேகம் பண்ணி யவற்றுள்ளே
திதஞய் நிற்ற லாய்ச்செய்யு,
மியாக மெல்லா மெனக்குறித்தே
யியற்று கின்ரு ரவற்றிலவிர்ப்,
பாகங் கொள்வே ஞனவற்றின்
பயனுங் கொடுக்கப் படுவேஞன். (5)

(இ—ள்) ஏகன் ஆகிநிற்கின்ற யானே - அத்வைத ரூப ஞன நானே, எல்லா இமையவர்க்கும் - எல்லா தேவர் களுக்கும், தேகம் பண்ணி - சரீரம் உண்டாக்கி, அவற் றுள்ளே - அந்தச் சரீரத்தினுள்ளே, தித ஞய் - ஸ்தித ஞக, நிற்ற லாய் செய்யும் - நிற்கும்படி செய்கின்றவனும் நானே, எனைக் குறித்தே - என்னை நினைந்தே, எல்லாம் யாகம் - சகல யாகங்களையும், இயற்றுகின்ருர் - செய்கின் ருர்கள், அவற்றில் - அந்த யாகங்களில், அவிர்ப்பாகம் - ஆவிர்ப்பாகம், கொள்ளுவேன் நான் – கொள்ளுபவனும் நானே, அவற்றின் பயனும்-அந்த யாகங்களின் பலன்களை யும், கொடுக்கப்படுவேன் நான் - கொடுப்பவனும் நானே ஆகின்றேன் (எ—று)- (5)

பத்தியினு லியாவர்சிலர் பரவியெனைப் பணிகின்ருர்,
சத்தியமே யவர்களுக்குச் சந்நிதிபண் ணுநிற்ப,
னித்தமுன்ன நால்வேத நிட்டர்களா யறநெறிசே,
ருத்தமரா மவரெனினு மொழிவறவே யுணர்
கில்லார். (6)

(இ—ள்) எனை - (பரமேசுர ஞகிய) என்னை, பத்தி யினுல் -' பத்தியோடும், யாவர் சிலர் - எவர்களேனும், பரவி - (வாக்கால்) தோத்திரம் செய்து, பணிகின்ருர் - (காயத்தால்) வணங்குகின்ருர்களோ, சத்தியமே - உண்மை யாகவே, அவர்களுக்கு - அந்த பக்தர் களுக்கு, சந்நிதி பண்ணுநிற்பன் - சதா காலமும் விளங்கிக் கொண்டு இருப்பேன், நித்தம்-நித்திய மாயும், முன் ஆம்- அநாதி யாயு முள்ள, நால் வேத நிட்டர்கள் ஆய் - நான்கு வேதங்களையும் தியாநித்துக் கொண்டு இருப்பவர்க ளாய், அற நெறி சேர் - தர்ம மார்க்கங்களை பொருந்தி யுள்ள, உத்தமர் ஆம் அவர் எனினும் - உத்தமர்க ளாயினும், ஒழிவு அற - இடையீ டின்றி, உணர்கில்லார் - அறியார் (ஏக தேச மறிவார்கள்) (எ—று) ஏ—அசை, (6)

மறையவ ரரசர் மாதவஞ் சிறந்த
வணிகர்தா மநத்திஞல் வணங்கிற்,

குறைவறு பரமா நந்தமாம் பதத்தைக்
கொடுப்பனுன் குலமிலா வெந்தக்.
கறையுறுங் குலத்தோ ராயினு மதனைக்
காலபா கத்திலே பெறுவர்,
இறையென வென்னையே பத்தியான் மலரிட்
டிடைவிடா திறைஞ்சுவ ராகில். (7)

(இ—ள்) மறையவர் - பிராமணர்களும், அரசர் - க்ஷத்திரியர்களும், மா தவம் சிறந்த - மகா தவத்திற் சிறப்புப் பொருந்திய, வணிகர்-வைசியர்களும்-மநத்தினுல் - மநத்தால், வணங்கில் - நமஸ்காரம் செய்யில், குறைவு அறு - பூரண மான, பரம ஆநந்தம் ஆம் - பிரம்மாநந்த மாகிய, பதத்தை - பதத்தினை, நான் - (பரமேசுர னுகிய) நான், கொடுப்பன் - (அவர்களுக்கு) அநுக்கிரகஞ் செய்வன், குலம் இலா - (நல்ல) குல மில்லாத. எந்தக் கறையுறும் - எப்படிப்பட்ட தாழ்ந்த, குலத்தோர் ஆயினும்-குலத்தவரா யிருப்பினும், எனையே - என்னையே, இறை என - பரமேசுரன் என்று, இடைவிடாது - இடையருது, பத்தியால் - பத்தியோடும். மலர் இட்டு - புஷ்பங்களைக் கொண்டு அர்ச்சித்து, இறைஞ்சுவர் ஆகில் - நமஸ்க் காராதி சேவைகளைச் செய்வா ராகில், அதனை-அந்த பிரமா நந்த பதத்தை. கால பாகத்திலே பெறுவர் - பரிபக்குவ காலத்து அடைவார்கள். (எ—று) தாம்— அசை, (7)

பழுதிலவ ரென்னுடைய பத்தரொரு காலு,
மழிவிலர்க ளென்றடியி லேயறைத லுற்றேன்,
றொழுதவரெ னன்பனையெ னைத்தொழுத லுற்றரே,
ரொழியவிகழ் வாருமெனை யேயிகழ்த லுற்றுர். (8)



(இ-ள்) பழு திலவர்-பரிசுத்த மானவர்களும், என்னுடைய-எனது, பத்தர் - பத்தர்களும், ஒரு காலும் - ஒர் பொழுதும், அழிவு இலர்கள்- நாச மடையார்கள், என்று-என, அடியிலே - இரண்டாவது அத்தியாயத்தில் பிரதமத்தில், அறைத லுற்றேன் - (3-வது கவியிலேயே) கூறியுள்ளேன், என் அன்பனை-என்னுடைய பக்தனை, தொழுதவர்-வணங்கியவர்கள், எனை தொழுத லுற்ருேர் - என்னை வணங்கியவ ராகின்றுர்கள், ஒழிய - நாசத்தை அடைய, இகழ்வாரும் - (என் அன்பனை) நிந்தித்தவரும், எனையே இகழ்த லுற்றுர் - என்னையே நிந்தித்தவ ராகின்றுர். (8)
(எ—று) ஏ—அசை.

கலையாள ரியாவரினுங் காயாதன் மலராத,
விலையாத னீராத லியன்றதுகொண் டென்பாலே,
நிலையாய பத்தியினு னித்தமெனை வழிபடுவான்,
றலையாய வன்பனெனக் கியாவரினுந் தானினியான். 9

(இ—ள்) கலையாளர் யாவரினுங் - எப்படிப்பட்ட வித்துவான்களா யிருப்பினும், காய் ஆதல் - (கனி) காய்களைக் கொண்டு ஆயினும். மலர் ஆதல் - புஷ்பங்களைக் கொண்டாயினும், இலை ஆதல் - பத்திரங்களைக் கொண்டாயினும், நீர் ஆதல் - ஜலத்தினைக் கொண்டாயினும், இயன்றது கொண்டு - (தன்) சத்திக்குத் தகுந்தவற்றைக் கொண்டு, என்பால் - (பரமேசுர னுகிய) என்னிடத்து, நிலை ஆய - ஸ்த்திர மான, பத்தியினுல் - அன்பினுல், நித்தம் எனை - சதா காலமும் என்னை. வழிபடுவான் - பூசிப்பவன், எனக்கு - எனக்கு, தலை ஆய அன்பன் -முதன்மையான பக்தன், யாவரினும் - எல்லோரினும் (இவனே),

இனியான் - விரும்பத்தகுந்தவன். (எ-று)
ஏ-தான் அசை. (9)

படைத்தவனைப் படைத்தவர்க்குப்
பண்டையே மறையனைத்துங்,
கொடுத்தவனு ஞதலிலெக்
குரவர்க்குங் குருபரனுன்,
றுடைப்பவனு னசுரர்களைத்
தொல்லறத்தி னின்றோரை,
யிடர்ப்படுமா றொழித்தவர்கட்
கின்பமளித திடுபவனுன். (10)

(இ—ள்) பண்டையே - முதலிலேயே, படைத்தவனை - இப் பிரபஞ்சத்தை சிருட்டிக்கின்ற பிரமாவை, படைதது - சிருட்டித்து, அவர்க்கு - அந்த பிரமாவுக்கு, மறை அனைத்தும் - வேதங்கள் எல்லாவற்றையும், நான் - (பரமேசுர ஞகிய) நானே, கொடுத்தவன் - உபதேசித்தவன், ஆதலில் - ஆகையினுல், எக் குரவர்க்கும் - எல்லா ஆசிரியர்கட்கும், நான் குருபர்ன் - நானே ஆசிரியஞவேன், அசுரர்களை - (தேவர்கட்குத் துன்பத்தைச் செய்யும்) அசுரர்களை, நான் துடைப்பவன் - நானே சம்மரிப்பவன், தொல் அறத்தின் நின்றோரை-பழமையான தர்மங்களை வழுவாது அநுஷ்டிப்பவர்கட்கு. இடர்ப்படும் ஆறு ஒழித்து - வரப்பட்ட துன்ப மார்க்கங்களை நிவிர்த்தித்து, அவர்கட்கு - அவர்களுக்கு. இன்பம் அளித்திடுபவன் - ஆநந்தத்தைக் கொடுப்பவன், நான் - நா ஞகின்றேன். (எ-று) (10)



ஓதுமி யோகியர்க டங்க ளுற்பவமொ
ழிப்ப ஞனுறுபி றப்பினுக்,
கேதுநா ஞெருபி றப்பி றப்புமில
ஞவ ஞனிவகி லத்தினுக்,
காதிநா னதுது டைப்ப ஞனதுபு
ரப்ப ஞன்முழுத ளிப்பனு,
னீதிதா னினைய லற்ற மாயைசெய்து
நித்த ஞய்மறைய நிற்பஞன். (11)

(இ—ள்) ஓதும் யோகியர்கள் தங்கள் - சொல்லாநின்ற யோகிகளுடைய. உற்பவம் - ஜந்மத்தினை நான் ஒழிப்பன் - நானே நிவிர்த்தி செய்பவன், உறு பிறப்பினுக்கு - (கருமாதீந மாகப்) பொருந்துகின்ற ஜந்மத்திற்கு, நான் ஏது - நானே காரணமா யுள்ளவன், நான் ஒரு பிறப்பு இறப்பும் - நான் ஒரு ஜநநமும் மரணமும், இலன் ஆவன் - இன்றியவன் ஆகின்றேன், நான் - நானே, இவ் அகிலத்தினுக்கு - இந்தப் பிரபஞ்சத்திற்கு, ஆதி - முதன்மையா யுள்ளவன், அது துடைப்பன் நான் - அந்தப் பிரபஞ்சத்தை சம்மரிப்பவனும் நா ஞகின்றேன், அது புரப்பன் நான் - அதை ரக்ஷிப்பவனும் நா ஞகின்றேன், முழுதும் அளிப்பன் நான் - எல்லாவற்றையும் ரக்ஷிப்பவனும் நா ஞகின்றேன், நீதி நினையல் அற்ற - கிரம மாக உணரமுடியாத, மாயை செய்து - மாயையினைச் செய்து, நித்தன் ஆய் - நித்தியஞய், நான் - (பரமேசுர ஞகிய) நான், மறைய நிற்பன் - (அதில்) மறைந்து இருப்பேன். (எ—று) தான்-அசை. (11)

வஞ்ச மாயையொரு சத்தி யென்றனது
மற்றி யாரையும யக்குமாம்,

விஞ்ஞை யாகுமொரு சக்தி மற்றெனது
விமல யோகுபுணர் வார்கடந்,
நெஞ்சின் மேவியத னாலம் மாயையினை
நீக்கி யேநிகழு கிற்பனா,
னஞ்சி டாதெனை யநந்த சத்திகளு
மியானி னைத்தவண மாகுமால். (12)

(இ—ள்) என் தனது - என்னுடைய, வஞ்ச மாயை - வஞ்சகத் தன்மையோடு கூடிய மாயை யாகிய, ஒரு சத்தி - ஓர் சத்தி யானது, யாரையும் மயக்கும் ஆம் - எப்படிப்பட்டவர்களையும் மோக மடையச் செய்யும், எனது விஞ்ஞை ஆகும் - என்னுடைய வித்தை யாகிய, ஒரு சத்தி - ஓர் சத்தி யானது, விமல யோகு - நின் மல மான யோகத்தை, புணர்வார்கள் - பொருந்தியவர்கள், நெஞ்சில் மேவியதனால் - மநதில் பொருந்தியிருத்தலினால், அம் மாயையினை நீக்கி - அம் மாயையினை ஒழித்து, நான் நிகழுகிற்பன் - நான் விளங்கிக்கொண்டு இருப்பேன், யான் நினைத்த வணம் - நான் எண்ணுகின்றபடி, அஞ்சி டாது - பயப்படாது, எனை - என்னிடத்து, அநந்த சத்திகளும் ஆகும் - அநேக சத்திகளு முண்டாகும். (எ-று) (12)

'தனது' என்பதில், தன்—ஏ—மற்று—ஆல்—அசைகள்.

ஆலம் பரமாஞ் சத்திகளுக்
காலம் பனா னடங்கவுமென்,
பாலங் கிருக்கு முத்தியுமென்
பாலே யெவர்க்கு முள்ளாமென்,
மாலொன் றியமா யையையடைந்து
மலரோன் வடிவு கொண்டொன்று,



ஞாலந் தன்னை யுண்டாகப்
பண்ணு நானா விதமாக. (13)

(இ—ள்) ஆலம்பரம் ஆம் - பற்றுக் கோடாகப் பொருந்திய, சத்திகளுக்கு - சத்திகட்கு, நான் ஆலம்பனன் - நான் ஆந்தரமா யிருப்பவன், என்பால் - என்னிடத்து, அடங்கவும் இருக்கும் - யாவும் இருக்கும். என்பாலே முத்தியும் - என்னிடத்திலேயே மோக்ஷமு மாகும், எவர்க்கும் உள்ளாய் - எல்லார்க்கும் ஆந்தரமா இருக்கும், என் மால் ஒன்றிய - என்னிடத்து மயக்கம் பொருந்திய, மாயையை யடைந்து - மாயையை பொருந்தி, ஒன்று - ஒரு சத்தி, மலரோன் வடிவு கொண்டு - பிரமா உருவெடுத்து, ஞாலந் தன்னை - இப் பிரபஞ்சத்தை, நானா விதமாக - அநேக பிரகார மாக, உண்டாகப் பண்ணும் - சிருஷ்டி செய்யும் (எ—று) (13)

அங்கு—'ஞாலம் தன்னை' என்பதில், தன்-அசை.

ஓதி யாவையுந் தானா யுயிர்க்கெலா,
நாத னாகிய நாரா யணனெனுந்,
தீதி லாதவென் சத்திதி தித்தலா,
லீதெ லாநிலை பெற்றேயி லங்குமால். (14)

(இ—ள்) ஓது யாவையும் தானாய் - (வேதம்) விளம்பாநின்ற எல்லாம் தனது சொரூப மாக. எலா உயிர்க்கும் - சகல ஜீவர்கட்கும், நாதன் ஆகிய - தலைவன் ஆகிய, நாராயணன் எனும் - விஷ்ணு வென்னும், தீது இலாத - குற்ற மற்ற, என் சத்தி - என்னுடைய (மற்றோர்) சத்தி யானது. திதித்தலால் - இரக்ஷித்தலினால், ஈது எலாம்-

இந்தப் (பிரபஞ்சங்கள்) யாவும், நிலை பெற்று இலங்கும் - நிலைத்து இருந்து விளங்கும். (எ—று) ஏ ஆல்-அசை. (14)

மூன்ரு வதுருத் திரமூர்த் தியதாய்த்,
தோன்ரு வகைநின் றுதுடைப் பதனைச்,
சான்ரோர் பலர்தா மதகா லமென,
வூன்ரு வெனதா கவுரைப் பர்களால். (15)

(இ—ள்) மூன் ருவது - மூன் ருவ தாக உள்ள (தமோ குண சத்தியை), உருத்திர மூர்த்தியது ஆய் - உருத்திர மூர்த்தி யாக, தோன்ரு வகை நின்று - மறைந்து இருந்து, துடைப்பதனை - (சகலவற்றையும்) சம்மரிப் பதனை, பலர் சான்ரோர் - அநேகம் பெரியோர்கள், தாமத காலம் என - தமோம்ச மான கால தத்துவம் என்று, ஊன்ரு - நிலை யுடைய, எனது ஆக உரைப்பர்கள்- என் னுடைய தாகச் சொல்லுவார்கள், (எ—று) ஆல்-அசை (15)

நித்தநிய மத்துடனே நெறியுறப்பார்ப் பார்கள்சிலர்,
பக்தியாற் பார்ப்பர்சிலர் பாவனையாற் பார்ப்பர்சிலர்,
சத்தியமா ஞானத்தாற் பார்ப்பர்சிலர் சாற்றுகின்ற,
வெத்திறத்தா ரினுமிவனே யெனையுணரு மெய்ஞ்ஞாநி. (16)

(இ—ள்) நெறி உற - கிரம மாகப் பொருந்திய. நித்த நியமத்துடன் - நித்திய (கர்மாநுஷ்டாந முதலிய) நியமத்தோடு, சிலர் பார்ப்பார்கள் - சிலர் பரமேசுர ஞகிய என்னை உணருவார்கள், சிலர் - சில பேர், பத்தியால் பார்ப் பர் - பத்தியினுலே உணருவார்கள், சிலர் - சில பேர், பாவனையாற் பார்ப்பர் - பாவனையினுலே உணருவார்கள்,



சிலர் - சில பேர், சத்திய மா ஞானத்தால் - உண்மை யாகிய பெரிய ஆந்ம ஞானத்தினுல், பார்ப்பர் - உணருவார்கள், இவனே - இப் போது கூறிய ஆந்ம ஞாநியே, சாற்று கின்ற - (முன்னர்க்) கூறியவருள், எத் திறத்தாரினும் - எல்லாரினும், எனை உணரும் - என்னை அறிந்திருக்கின்ற, மெய்ஞ் ஞாநி - உண்மை ஞாநி யாவன் (எ—று) ஏ—அசை. (16)

அறிவால் வழிபா டுறுவா னெவன்மற் றவனென்னிற்,
பிறிவா னவனியா னெனவே நினைமின் பிறர்தாமு,
முறவால் வழிபா டுடையா ரடையா ரொருகாலம்,
பிறவா ழியிடைப் பிறிவா யெனையே பெறுகின்ருர். (17)

(இ—ள்) எவன் - எந்தப் புருஷன், அறிவால் - ஞானத்தினுல், வழிபாடுறுவான் - வழிபடுகின்ருனே, அவன் - அந்த ஞாநி யானவன், என்னில் பிறிவான் - என் னில் வேருகான், அவன் யான் எனவே - அவனே நான் என்று, நினைமின் - உணருங்கள், பிறர் தாமும் உறவால் - வேறு தெய்வங்களின் சம்பந்தத்தால், வழிபாடு உடை யார்-பக்தி செய்பவர்களும். ஒரு காலம் - ஒரு காலத்தும், பிற ஆழி இடை - பிறவி யாகிய சமுத்திரத்தின்கண், அடையார் - விழமாட்டார்கள், பிறிவாய் - அன்போடு, எனையே பெறுகின்ருர் - என்னையே அடைகின்ருர்கள், (எ—று). மற்று —அசை. (17)

எல்லா வுலகங் களுமென் பாலே யென்னுலே,
செல்லா நின்றுஞ் செயலொன் றிலனுன் சிவயோகி,
யல்லா னடவா தெனவு மந்தச் செயலென்பா,
லில்லா தமையு மறிவா னென்றும் பிறிவானுல், (18)

(இ—ள்) என்பால் (அந்த ஞானியா னவன்) என்னிடத்திலேயே, எல்லா உலகங்களும் - எல்லா லோகங்களும் உண்டாகின்றது, என்ஞலே - என்ஞலேயே, செல்லாநின்றும் - (சகல சகத்தையும்) நடத்துபவனு யிருந்தும், நான் ஒன்று செயல் இலன்- நான் ஒரு செய்கையு மின்றிய (நிஷ்கிரிய)ஞவேன், சிவ யோகி அல்லால் - சிவ யோகியாகிய (நான்) இல்லாமல். நடவாது எனவும் -(பிரபஞ்சம்) நடக்கா தென்றும், அந்தச் செயல் - அந்தத் தொழில், என்பால் இல்லாதமையும் - என்னிடத்து இல்லாது இருப்பதையும், என்றும் - எப் பொழுதும், அறிவான் - தெரிந்து இருப்பவன், பிறிவான் - (என்னிடத்து) அன்புடையவ ஞவான். (எ—று) ஏ-ஆல்-அசை. (18)

காலமாகிய பரஞ்செயு முழுவதுங்
கண்டுகொண் டிருப்பேனு,
னூலி ஞலுநுண் ணுணர்விஞற் பிறிதிஞ
ஞவன்றிடப் படுவேஞன்
மாலிலாதமா யோகிமா தேவஞன்,
மகத்துவ மெனக்குண்டா,
மூல மாகிய பரத்தினிற் பரமமா
முறைமையான் மொழிகின்றேன். (19)

(இ—ள்) காலம் ஆகிய - கால தத்துவ மாகிய, பரம் செயும் - பரம் செய்கின்ற, முழுவதும் - எல்லாவற்றையும், நான் கண்டு கொண்டு இருப்பேன், நான் பார்த்துக்கொண்டிருப்பேன், நூலிஞலும் - சாஸ்த்திரங்களிஞலும், நுண் உணர்வினல் - சூக்ஷுமபுத்தியிஞலும், பிறிதிஞல்- மற்றையவற்ருலும், நான்-(பரமேசுவரஞகிய) நான்,



நுவன்றிடப்படுவேன் - சொல்லப்படுவேன், மால் இலாத-(யாதொரு) மயக்கமு மின்றிய, மா யோகி - மகா யோகியும், மா தேவன் - மகா தேவனும், நான் - நான் ஆகின்றேன், எனக்கு - (பரமேசுர ஞகிய) எனக்கு. மகத்துவம் உண்டாம் - பெருந் தன்மைகள் இருக்கின்றன, மூலம் ஆகிய - காரணம் ஆகிய, பரத்தினில் - மேலானவற்றைப் பார்க்கிலும், பரமம் ஆம்-ஆந்தர மாகிய, முறைமையால்-தன்மையினுல். மொழிகின்றேன் - சொல்லுகின்றேன். (எ—று) (19)

படைப்பவஞ னெப்போழுதும் பரம்பரயோ கிக்கிருந்து,
நடத்துவஞ னநவொடுக்க மிலாஞாந யோகத்தாற்,
கிடைத்திடுமென் றனையாகக் கெழுமியயோ காநந்தத்,
திடைப்படலா னடஞ்செய்வே னெல்லேயில்பே
ரின்பத்தால். (20)

(இ—ள்) படைப்பவன் நான் - (எல்லாவற்றையும் பிரமா ரூப மாக விருந்து) சிருட்டிப்பவன் நானே. எப்பொழுதும் - சதா காலமும், பரம்பர யோகிக்கு இருந்து - மே லான பிரம யோகிகளினது இருதயத்தி லிருந்து, நடத்துவன் நான் - நடத்துபவனும் நா ஞகின்றேன், நநவொடுக்கம் இலா - உற்பத்தி நாசம் இல்லாத, ஞாந யோகத்தால் - ஞாந யோகத்திஞல், கிடைத்திடும் - அடைகின்ற, என் தனை - என்து சொருபத்தை, ஆக கெழுமிய-மிகு சிரேஷ்டம் பொருந்திய, யோகாநந்தத்திடைப்படலால் - யோகாநந்தத்தில் விளங்குதலின், எல்லே இல் - அளவில்லாத, பே ரின்பத்தால் - பிரமாநந்தத்திஞல், நடஞ் செய்வேன் - நடநஞ் செய்து கொண்டு இருப்பேன். (எ—று) 'என் தனை' என்பதில், தன் - அசை. (20)

யானுடு மியல்பறிவா னெல்லாவே தமுமறிவான்,
வானுடர் மாமறைக ளறைகின்ற மறைவிதனைத்,
தானுளும் பெறவுரியான் றவமுடையா னிசமுடையா,
னுறுத வன்புடையா னுகிதவ நலமுடையான். (21)

(இ—ள்) யான் ஆடும் இயல்பு - நான் (இருதயத்தி லிருந்து) நிர்த்தநம் செய்கின்ற தன்மையை, அறிவான் - உணருமவன், எல்லா வேதமும் - சகல வேதங்களையும், அறிவான் - உணர்ந்தவனுகின்ருன், வானுடர் - தேவர்கள் (விரும்புகின்ற), மா மறைகள் - பெருமை பொருந்திய வேதங்கள், அறைகின்ற - சொல்லுகின்ற, மறைவு இதனை - இந்த ரகசியத்தை, நாளும் - சதா காலமும். பெற உரியான் - அடையத் தக்கவனுகின்ருன், தவம் - (நல்ல) தவத்தினை, உடையான் - உடையவனுகின்ருன், நிசம் - உண்மை, உடையான் - உடையவனுகின்ருன், ஆனுத - உயர்ந்த, அன்பு - பக்தியை, உடையான் - உடையவனுகின்ருன், ஆகித அநலம் - ஸ்தாபிக்கப்பட்ட நெருப்புடையவனுகிய, உடையான் - அக்நிஹோத்திரியு மாகின்ருன். (எ—று) தான் — அசை, (21)
4 பத்திமை அத்தியாயம் முற்றிற்று ஆக விருத்தம் 121.

---

## 5. விசுவ ரூப அத்தியாயம்.

இவ்வளவு தானருளி யின்பமுட னன்பர்க்,
கவ்வளவி லாததிரு மேனியத னுலே,
யெவ்வொளியு மானவனி லங்கியவ ருள்ளே,
செவ்வொளிவி ளங்கநட நின்றுசெய லுற்ருன். (1)



(இ—ள்) அன்பர்க்கு - (சௌநகாதி) ரிஷிகட்கு, இன்பமுடன் - அன்போடு, தான் - (பரமேசுரனுகிய) தான், இவ் அளவு - இந்தப் பிரகாரம் பக்தியை, அருளி - உபதேசித்து, அவ் அளவு இலாத - அளவிட முடியாத-திரு மெனியதனுலே - திவ்விய மங்கள விராட் சொருபத்தினுல், அவருள்ளே - சொநகாதி ரிஷிகளுடைய இருதயத்திலே, எவ் ஒளியு மானவன் - எல்லா பிரகாச ரூபமாயுள்ள பரம சிவன், செவ் ஒளி-சிவந்த திருமேனி, விளங்க-தோன்றும்படி யாக, இலங்கி - பிரகாசித்து, நின்று - இருந்து, நடம் - நிர்த்தநம், செயல் உற்ருன் - செய்ய ஆரம்பித்தான். (எ—று)

'மேனியது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. (1)

எண்ணமதி றந்தபர யோகவித யத்தே,
வண்ணமதி லாதபர மாகியம கேசன்,
விண்ணினிடை யேவிமல னுனவரி யோடுங்,
கண்ணினெதிர் நின்றுநட மாடவவர் கண்டார். (2)

(இ—ள்) எண்ணமது - சங்கல்பம், இறந்த -நாசமாயுள்ள, பர யோக இதயத்து-மேலான யோகத்தினை அப்யாசித்துள்ளவர் இருதயத்தின்கண். வண்ணமது இலாத - (தனக்கென) ஓர் நிறமு மில்லாத, பரம் ஆகிய - மேலாகிய, மகேசன் - மகேசுவரன், விண்ணினிடையே - ஆகாயத்தில், விமலன் ஆன - நிர்மல மான, அரியோடும் — மஹா விஷ்ணுவோடும், அவர் கண்ணின் எதிர் - சௌநகாதி ரிஷிகளது நேத்திரத்திற்கு முன்னர், நின்று நடம் ஆட - நின்று ஆநந்த தாண்டவம் செய்ய, அவர் - சௌநகாதி ரிஷிகள், கண்டார் - பார்த்தார்கள். (எ—று)

'எண்ணமது', 'வண்ணமது' அது, பகுதிப் பொருள் விகுதி. ஏ-அசை (2)

ஏவன் மாயை யிந்தவுல கெல்லா மாகி யிருப்பதுவா,
மேவ ஞலே நடக்கின்ற தேவன் பதங்கள் சிந்தித்தே,
பாவ மான வஞ்ஞானம் தன்ஞ லுண்டாம் பயம்போகு.
மாவ வந்தப் பரம்பொருணின் ருடக் கண்டா
ரன்போடும். (3)

(இ—ள்) ஏவன் மாயை - எந்த பரமேசுரனது மாயையினின்றும், இந்த உல கெல்லாம் ஆகி - சராசராத் மகப் பிரபஞ்சங்க ளனைத்தும் உண்டாகி, இருப்பது ஆம்- இருக்கின்றனவோ, ஏவஞலே - எந்தப் பரமேசுரஞல், நடக்கின்றது - இந்தப் பிரபஞ்சங்கள் யாவும் நடத்தப்படு கின்றனவோ, ஏவன் - எந்த பரமேசுர னுடைய, பதங்கள் சிந்தித்து - திரு வடிகளை தியாநித்தலிஞல், பாவம் ஆன- பாவ மாகிய, அஞ்ஞாநந்தன்ஞல் - அஞ்ஞாநத்திஞல். உண்டாம் - உண்டாகின்ற, பயம் போகும் - பீதி யானது நிவிர்த்தியாகுமோ, ஆ-அ - ஆச்சரியம் ஆச்சரியம், அந்தப் பரம் பொருள் - அந்தக் காரண மாகிய வஸ்த்து, நின்று ஆட - இருந்து ஆநந்த நடநம் செய்ய, அன்போடும் - பக்தியோடும், கண்டார் - (சௌநகாதி ரிஷிக ளனைவரும்) பார்த்தார்கள்- (எ—று).

ஏ- 'அஞ்ஞாநந் தன்ஞல்' என்பதில், தன் - அசை. (3)

நித்திரையு ருதவதில் வாயுவைநி றுத்திப்,
பத்தியொடு சாந்தியைய டைந்தபர யோகத்,
துத்தமர்க ளாதலுத யாத்தமந மில்லாச்,
சுத்தவொளி யோடவ்வொளி கண்டனர்க டூயோர் ,(4)

(இ—ள்) நித்திரை உருத அதில் -விழித்துக் கொண்டிருக்கப்பட்ட வஸ்த்துவில், வாயுவை நிறுத்தி -



பிராணனை பந்தநம் செய்து, பத்தியொடு - பத்தியுடன், சாந்தியை அடைந்த - உபசாந்தியைப் பொருந்திய. பர யோகத்து - மே லான யோகத்தின்கண், உத்தமர்கள் - மஹான்களா யுள்ளவர்கள் உணரும், உதய அத்த மநம் ஆதல் - ஜநந மரணம், இல்லா - இல்லாத, சுத்த ஒளி யோடு - பரிசுத்த மான பிரகாசத்தோடு, அவ் வொளி - அந்தப் பரமேசுரனை, தூயோர் - பரிசுத்தம் (பொருந்திய) சௌநகாதி ரிஷிகள், கண்டனர்கள் - பார்த்தார்கள். (எ—று)

(4)

கணமாத் திரையிற் கழல்கை தொழுவோ,
ருணரா மையழிக் குமுருத் திரனே,
வணநா டறியா னையம்மா முநிவர்,
கணமா வெளிகண் டனர்கம் மிசையே. (5)

(இ—ள்) கழல் - (தனது) திருவடிகளை, கை தொழு வோர் - நமஸ்க்கரிப்பவர்களது, உணராமை- அஞ்ஞாநத் தினை, கண மாத்திரரையில் - க்ஷண நேரத்தில், அழிக்கும்- நாசம் செய்கின்ற, உருத்திரனே - ருத்திர மூர்த்தியை, அணம் - வாக்கிஞல், நாடு அறியானை - வசநிக்க முடியாத வனை, அம் மா முநிவர் - அந்த சௌநகாதி ரிஷிகள், கம் மிசை - ஆகாயத்தின் மீது, கண மா (க) - கூட்ட மாக, வெளி கண்டனர் - நேரே பார்த்தார்கள், (எ—று)

ஏ-அசை. (5)

கிரங்க ளாயிரஞ் சேவடி யாயிரங்,
கரங்க ளாயிர மாய்க்கரத் தேந்திய,
வுரங்கொ டண்டமு மோங்கிய சூலமும்,
பரந்த வேணியும் பான்மதிக் கண்ணியும். (6)

(இ—ள்) ஆயிரம் சிரங்கள் - ஆயிரம் தலைகளும், ஆயிரம் சே அடி - ஆயிரம் திரு வடிகளும், ஆயிரம் கரங்கள் ஆய் - ஆயிரம் கைகளு மாக, கரத்து ஏந்திய - கையின்கட் பொருந்திய, உரங் கொள் தண்டமும் - வலுவு கொண்ட தண்டாயுதமும், ஓங்கிய சூலமும் - பிரகாச முடைய சூலாயுதமும், பரந்த வேணியும் - விரிந்த ஜடா பாரமும், பான் மதி - (அதில்) மூன்றும் பிறையும், கண்ணியும் - பூ மாலையும்ஆம். (எ-று) (6)

புண்டரிக வுரியுடையும் பொன்னொளியாற். பூமகன்பே,
ரண்டமெலா மாவரித்த வாலிரவி மதியென்னக்,
கொண்டிலகு முக்கண்ணுங் கூரெயிறுங் கோடிபெய,
ருண்டருக்க ரெறிக்கின்ரு ரெனத்திகழு மோருருவும். (7)

(இ—ள்) புண்டரிக உரி வுடையும் - புலித்தோல் ஆடையும், பூ மகன்-பிரம தேவனுல் (சிருட்டிக்கப்பட்ட), பேர் அண்டம் எலாம்-பிரமாண்டங்கள் யாவும், பொன் ஒளியால் - பொன் போன்ற பிரகாசத்திஞல், ஆவரித்த - மூடப்பட்டிருக்கின்ற, மதி இரவி அநல் - சோமன்- சூரியன்-அக்கி, என்ன - என்று சொல்லும்படி யாக, கொண்டு இலகு - இருந்து பிரகாசிக்கின்ற, முக் கண்ணும் - திரி நேத்திரங்களும், கூர் எயிறும் - கூர்மை பொருந்திய பற்களும், கோடி பெயர் உண்டு - கோடி பெயர்கள் இருக்கின்ருர்கள், அருக்கர் - சூரியர்கள், எறிக்கின்ருர் என - (அவர்) தகிக்கின்ருர்களோ என்று சொல்லும்படி, திகமும் - பிரகாசிக்கின்ற, ஓர் உருவும் - ஒரு சொருபமும் ஆக. (எ—று) (7)



தனதான திருவுருவிற் சகமெலாம் பிறந்துதன,
தாலாலே யழியமிக வதிசயமாம் படிகாட்டி,
யினமான தில்லாத விந்தவடி வந்தானே,
யனையாநின் ருகாசந் தனிலாடி யருளினனல். (8)

(இ—ள்) தனது ஆன - தன்னுடைய தாகிய, திரு உருவில் - திவ்விய மங்கள சொருபத்தில், சகம் எலாம் - பிரபஞ்சங்க ளனைத்தும், பிறந்து - உண்டாகி, தனது அநலாலே - தன்னுடைய அக்கினியினுலே, அழிய - நாச மடைய, மிக அதிசயம் - மிகவும் ஆச்சரியம், ஆம்படி காட்டி - உண்டாகும்படி அறிவித்து, இன மானது இல்லாத - சம்பந்த மில்லாத, இந்த வடிவம் தானே - இந்த சொருபமே, அனையா நின்று - அத் தன்மை யாக இருந்து, ஆகாசந்தனில் - ஆகாயத்தின்கண்ணே, ஆடி யருளினன்- (அவர்கட்கு) நிர்த்தநம் செய்து காட்டினன். (எ-று). (8)
'வடிவந் தானே' என்பதில் - தான் - ஆல் அசை-

ஞாலமெலாஞ் செய்கின்ற நாதனைஞா நச்சுடரைக்.
காலவுரு வனைக்கலைக ளியாவையுமாங் காரணனை,
யாலமமர் களத்தனையிவ் வனைத்துயிர்க்கு
மதிபதியைக்
சீலமிகு யோகிகடஞ் சிந்தனையிற் றிகழ்தேசை. (9)

(இ—ள்) ஞாலம் எலாம் - பிரபஞ்சங்கள் யாவற்றையும், செய்கின்ற - (பிரமா ரூப மாகயிருந்து) சிருட்டிக்கின்ற, நாதனை - தலைவனை, ஞாநச் சுடரை - ஞாந சூரியனை, கால உருவனை - யம சொருபனை, கலைகள் யாவையும் ஆம் - எல்லா கலைகட்கும், காரணனை - காரண பூதமா

யுள்ளவனை, ஆலம் அமர் - விஷம் பொருந்திய, களத்தனை- கண்டத்தை யுடைய (நீல கண்ட)னை. இவ் அனைத்து உயிர்க்கும் - இந்த சகல ஜீவர்கட்கும், அதிபதியை - தலைவ னுக உள்ளவனை. சீலம் மிகும் - ஒழுக்கம் மிகுந்த யோகிகள் - யோகிக ளுடைய, சிந்தனையில் - சித்த விருத்தியில், திகழ் - விளங்குகின்ற, தேசை - சைதந்ய சொருபனை. (எ—று)
இன்—தம்—அசை. (9)

உற்பவநோ யுற்றவர்க ளொழிப்பதனுக்
கொருமருந்தாங்.
கற்பகத்தை யோகிகடங் காரணத்தை யாரணந்தேர்,
தற்பதத்தைப் பரமான சத்திகட்குச் சத்தியா,
மற்புதவா தாரத்தை யமரேசர் தொழுமரசை. (10)

(இ—ள்) உற்பவ நோய் - ஜந்ம மாகிய வியாதியை. உற்றவர்கள் - அடைந்தவர்கள், ஒழிப்பதனுக்கு - அதை நிவிர்த்திப்பதற்கு விரும்பும். ஒரு மருந்து ஆம் - ஒப் பற்ற (ஔஷத மாகிய), கற்பகத்தை-கற்பக விருக்ஷத்தை, யோகிகள் தம் - யோகிக ளுடைய இருதயத்தின்கண், காரணத்தை - (விளங்கும்) காரணமா யிருப்பவனை, ஆரணம் தேர் - வேதங்களால் நிச்சயிக்கப்பட்ட, தற் பதத்தை - தற் பத வஸ்த்துவை, பரம் ஆன - மேலா யுள்ள, சத்திகட்கு - சத்திகளுக்கு, சத்தி ஆம் - சத்தி யாகிய, அற்புத ஆதாரத்தை-அதி ஆச்சரிய முடைய ஆதாரமா யுள்ளவனை, அமரேசர் - தேவேந்திரன், தொழும் - வணங்கு கின்ற அரசை - தலைவ னுன கடவுளை. (எ—று) தம் அசை. (10)

ஆகா தழியா திருந்தபர மாநந்
தத்தை யகிலத்துக்,



கேகா திபனை யெத்தேவு மெல்லா
முனிவர் களுமிறைஞ்சி,
நீகா வென்னு நின்மலனை நித்யத்
துவத்தை நிரந்தரமா.
மியோகா லடையு முயர்பதியை யொளிகட்
கெல்லா முள்ளொளியை (11)

(இ—ள்) ஆகாது அழியாது இருந்த - உற்பத்தி நாசம் இன்றிய, பரம ஆநந்தத்தை - பிரமாநந்தத்தினை, அகிலத்துக்கு - (இந்தப்) பிரபஞ்சத்திற்கு, ஏக ஆதிபனை - ஏகமா யுள்ள கடவுளை, எத் தேவும் - எல்லாத் தெய்வங்களும், எல்லா முனிவர்களும் - எல்லா ரிஷிகளும், இறைஞ்சி – (தோத்திரம் செய்து) நமஸ்கரித்து, நீ கா - தேவரீர் எங்களை இரக்ஷிப்பீராக, என்னும் நின்மலனை - என்று வணங்கும் நின்மல ஸ்வருபனை, நித்தியத்துவத்தை- நித்தியமா யுள்ள பிரமத்தை, நிரந்தரம் ஆம் – இடையீடின்றி அப்யாசிக்கின்ற, யோகால் அடையும் - யோகத்தினுல் அடைகின்ற, உயர் பதியை - மேலான கடவுளை, ஒளிகட்கு எல்லாம் - எல்லாப் பிரகாசங்கட்கும். உள் ஒளியை - ஆந்தரமா யுள்ள பிரகாசத்தினை (எ—று) (11)

துறவின ரறிவிடைத் தோன்றுஞ் சோதியை,
யுறவினி லறிபவர்க் கெளிய வுண்மையைப்,
பிறிவினி லறிவரி தாய பெற்றியை.
யறிவினை யறிபவர்க் கருளு மண்ணலை. (12)

(எ—று) துறவினர் - சந்நியாசிகளது, அறிவிடை - புத்தியின்கண், தோன்றும் - விளங்குகின்ற, சோதியை - பிரகாச சொருபனை, உறவினில் - பக்தியினுல், அறிப

வர்க்கு - உணருபவர்க்கு, எளிய - சுலப மான, உண்மையை - சத்தியப் பொருளே, பிறிவினில் - வேறுபாட்டால், அறிவு அரிது ஆய - உணரமுடியாத, பெற்றியை - தன்மையை, அறிவினே - ஆத்மாவை, அறிபவர்க்கு ' உணருபவர்கட்கு, அருளும் - அநுக்கிரகஞ் செய்யும், அண்ணலே-(பெருமையிற் சிறந்த) பரமசிவனே (எ—று) 12

மாதா விலியா வியகருணே
மாதே வனேமா மாதவத்தி,
ஞதா ரத்தை யொருகாலு
மழியாச் செல்வ மளிப்பவனேப்,
பேதா பேத மற்றெல்லாந்
தாஞ யிருந்த பிரமத்தை,
யோதா துணரு மியோகத்தை
யளித்தற் குரிய வொண்சுடரை. (13)

(இ—ள்) மாதா இலி ஆகிய-தா யில்லாதவ ஞகிய, கருணே மா தேவனே - கிருபையே சொரூப மாக உடைய மகா தேவனே, மா மா தவத்தின்- பெரிய மகா தவத்திற்கு, ஆதாரத்தை - ஆதாரமா யுள்ளவனே, ஒரு காலும் - ஒரு பொழுதும், அழியா - நித்தியமா யுள்ள, செல்வம் அளிப்பவனே - ஐசுவரியத்தினே கொடுப்பவனே, பேத அபேதம் அற்று - பேதாபேதங்க ளிறந்து, எல்லாம் தாஞ யிருந்த- சகலமும தனது சொரூப மாக யிருக்கின்ற, பிரமத்தை - பிரமத்தினே, ஓதா து உணரும் - வாக்கால் சொல்லாது (மநத்திஞலேயே) அறிகின்ற, யோகத்தை-யோகத்தை, அளித்தற்கு உரிய - கொடுக்கக் கூடிய, ஒண் சுடரை - பிரகாசம் பொருந்திய ஞாந சூரியனே. (எ—று) (13)



உருவோவிங் கருவோவென் றும்பர்க்கு
முணர்வரிதாய்க்,
கருவாகி நின்றபெருங் கண்ஞன காரணனேச்,
சொருபாநந் தனேத்தனது சோதியுளத் தேதோன்றக்,
குருவாகுந் திருமேனி கொண்டாடக் கண்டார்கள்.(14)

(இ—ள்) இங்கு - இவ் விடத்து. உருவோ - ரூபமோ, அருவோ - அரூபமோ, என்று - என, உம்பர்க்கும் - தேவர்கட்கும், உணர்வு அரி தாய் - அறிய முடியாத தாய், கருவாகின்ற - பீஜ மாகி யிருக்கப்பட்ட, பெரும் கண் ஆன - பெருந் தகைமையினே உடைய, காரணனே - காரண சொருபனே, சொருபாநந்தனே - சொருபாநந்த ஸ்வாமிகளே, தனது சோதி - தன் னுடைய பிரகாச மானது, உளத்தே தோன்ற - மநதில் விளங்கும்படி யாக, குரு ஆகும் - குரு மூர்த்த மாகிய, திரு மேனி கொண்டு - திவ்ய மங்கள மூர்த்தத்தினேக் கொண்டு, ஆட - நிர்த்தநம் செய்ய, கண்டார்கள் - (சௌநகாதி ரிஷிகள்) தரிசித்தார்கள். (எ—று) ஏ—அசை, (14)

கண்டு மாயையைய தற்கு ளேயொருவர்
காணெ ஞவகைக ஈந்துதர,
னண்டர் மாயையைம றைத்து
மீண்டுவெளி யாகி யாடியரு ளண்ணலே,
வண்டு ழாய்முடிய ஞன வச்சகல
லோக யோநியைபி டத்திலே,
கொண்ட கோலமொடு கண்டு மாமுநிவர்
கூறெ ஞவுவகை கூடிஞர். (15)

(இ—ள்) கண்டும்- (அவ் வாறு) தரிசநம் செய்தும், மாயையை அதற்குளே - மாயையி னுள்ளே, ஒருவர் -

ஒருவரும், காண ஒண்ணு வகை - அறியமுடியாதபடி, தான் கரந்து - தான் மறைத்து, அண்டர் மாயையை - தேவர்கள் மாயையினை, மறைத்தும் - மூடியும், மீண்டு வெளி ஆகி - மறுபடியும் வெளிப்படத் தோன்றி, ஆடி அருள் - நிர்த்தநம் செய்து அநுக்கிரகம் செய்கின்ற, அண்ணலை - பரம சிவனை, வண் துழாய் - வளப்பம் பொருந்திய துளப மாலைகளை, முடியன் ஆன - முடியி லணிந் துள்ள, அச் சகல லோக யோகியை - அந்த சகல லோகங்களையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருப்பவ ஞகிய மகா விஷ்ணுவை, இடத்திலே - வாம பாகத்திலே, கொண்ட கோலமொடு - உள்ள கோலத்தோடு, மா முநிவர் கண்டு - (சௌநகாதி) ரிஷிகள் பார்த்து, கூற ஒண்ணு - (வாக்கால்) சொல்ல முடியாத, உவகை கூடினர் - சந்தோஷத்தை அடைந்தார்கள். (எ-று) (15)

குரம்பையினுள் ளேயிதயக்
குகையின்மறைந் திருக்கின்ற,
பரம்பொருளைக் கண்ணுலே
பார்த்துப்பல் காற்பணிந்து,
கரந்தலையிற் குவித்துத்தங்
காதல்கரை யழிவுறநின்,
றுரந்தரவோங் காரத்தை
யுச்சரித்தங் குபநிடத்தால். (16)

(இ-ள்) குரம்பையி னுள்ளே - சரீரத்தி னுள்ளே, இதயக் குகையின் - இருதய மாகிற குகையில், மறைந் திருக்கின்ற - ரகசிமா யிருக்கின்ற, பரம் பொருளை - பிரம வஸ்துவை, கண்ணுலே பார்த்து - (ஞாநக்) கண்ணினுல் பார்த்து, பல் கால் பணிந்து - பல தரம் நமஸ்க்காரம் செய்து, தலையில் கரம் குவித்து - சிரசில் கைகளை கூப்பி, தம் - தம் முடைய, காதல் கரை - அன்பாகிய அணையானது, அழிவுற நின்று-உடையும்படி நெக்கு நெக்காக உருகிநின்று, உபநிடத்தால் - உபநிஷத்து வாக்கியத்தால். ஓங்காரத்தை - ஓம் என்னும் பிரணவத்தை. உரம் தர - அழுத்த மாக, உச்சரித்து -சொல்லி. (எ-று) அங்கு-அசை, (16)



பழுதி லீசன்முன் பாவகற் கண்டதோ,
ரிழுது போலவி தயமெ லாமுக,
வழுது மன்பினெ டாடியும் பாடியுந்,
தொழுது தோத்திரஞ் செய்யத்தொ டங்கினர். (17)

(இ-ள்) பாவகன் கண்டது - அக்கிநியின் முன் வைக்கப்பட்டு, ஓர் இழுது போல-(உருகுகின்ற)ஒப்பற்ற நெய்யைப் போல, பழுது இல் ஈசன் முன் - குற்ற மற்ற ஈசுவரனது சந்நிதாநத்தில், இதயம் எலாம் உக - மநமானது (நெக்கு நெக்காக) உருக, அழுதும் - ஆநந்தக் கண்ணீர் சொரிந்தும், அன்பினெடு - பக்தியோடு, ஆடியும் - நடநம் செய்தும், பாடியும் - (பரமேசுரனது கீர்த்தியைச் சொல்லிப்) பாடியும், தொழுதும் - நமஸ்க்காரம் செய்தும், தோத்திரம் செய்ய - தோத்திரம் பண்ண, தொடங்கினர் - ஆரம்பித்தார்கள். (எ-று) (17)

ஆகமுறு மாருயிர்நீ யவ்வுயிர்க்கு மதிபதிநீ,
யோகநுகர் புருடனுநீ நுகர்விக்கும் புராதநனீ,
யோகிநீ யுணர்பவனீ யுளந்தொறுநின் றுணர்கின்ற,
வேகனீ நின்மலமா யாவையுமாம் பரம்பொருணீ. (18)

(இ—ள்) ஆகம் உறும் - சரீரத்தின்கண் பொருந்திய, ஆர் உயிர் நீ - நிறைந்த ஜீவனும் நீயே ஆகின்ருய், அவ் வுயிர்க்கும் - அந்த ஜீவனுக்கும், அதிபதி நீ - தலைவன் நீயா யிருக்கின்ருய், போகம் நுகர் - போகங்களை அநுபவிக்கின்ற, புருடனும் நீ - புருஷனும் நீயா யிருக்கின்ருய், நுகர்விக்கும் - அநுபவிக்கும்படி செய்யும், புராதநன் நீ - பழையோனும் நீயா யிருக்கின்ருய், யோகி நீ - யோகியாகவும் நீயே யிருக்கின்ருய், உணர்பவன் நீ - (எல்லாவற்றையும்) நீயே அறிகின்ருய், உளந் தொறும் நின்று - அந்தக் கரணங்கள் தோறு மிருந்து, உணர்கின்ற - அறிகின்ற, ஏகன் நீ-அத்வைத சொரூபனும் நீ யாகின்ருய், நின்மலம் ஆய் - நின்மலமா யுள்ள, யாவையும் ஆம் - எல்லாமும் ஆகிய, பரம் பொருள் நீ - காரண வஸ்த்து நீயே ஆகின்ருய் (எ-று) (18)

கரண மெல்லா மொடுங்கினவர்
காயத் துள்ளே கதியாகிப்,
பிரம யோகி யாயுள்ள
பெரும வென்றும் பிறவாதாய்,
மரண மில்லா நின்செம்பொன்
வடிவே பரமாய் மற்றெதிலும்.
பரம மாகி யுயிர்க்குயிராய்
நிற்கும் பரமாய்ப் பார்க்கின்ரேம். (19)

(இ—ள்) கரணம் எல்லாம் - அந்தக் கரணம் யாவும், ஒடுங்கினவர் - லயத்தை யடைந்தவர்கள், காயத்துள்ளே - சரீரத்தினுள்ளே, கதி யாகி - இருப்பவ னுய், பிரம யோகியா யுள்ள - பிரம ரூப காரணமா யிருக்கின்ற,



பெரும - தலைவனே, என்றும் பிறவா தாய் - எப்பொழுதும் செநநம் அடையாதவனே, மரணம் இல்லா - நாச மில்லாத, நின் செம் பொன் வடிவே -தேவரீரது இரண்ய கற்ப சரீரமே, எதிலும் பரம் ஆய் - எல்லாவற்றிற்கும் மேலுக்கு, பரமம் ஆகி - மே லாகி, உயிர்க்கு உயி ராய்— பசு பதி யாய், நிற்கும் - இருக்கின்ற, பர மாய் பார்க்கின்ரேம் - பிரம சொரூப மாகப் பார்க்கின்ரேம். (எ-று) மற்று — அசை. (19)

பரமா ணுவின துருவாகிப்
படைப்பாய் நீபல் லுலகுகளுந்,
திரமா முன்னு லேயுண்டாஞ்
சிறிதிற் சிறிதாய் மிகப்பெரிதிற்,
பெரிதாய் நின்னில் வேறில்லாப்
பெருமை காணும் பெருந்தகமைக்,
குரியா ரெல்லா மொருநீயே
வேறென் றிலதென் றுரைப்பர்களால். (20)

(இ—ள்) நீ பரம அணுவினது உருவு ஆகி - தேவரீர் சூக்ஷுமமான அணு சொருபமா யிருந்து, பல் உலகுகளும் - சகல பிரபஞ்சத்தையும், படைப்பாய் - சிருட்டி செய்கின்றீர், திரம் ஆம் - நிலையா யுள்ள, உன்னுலே உண்டாம் - உன்னுலேயே உண்டாகின்றன, சிறிதில் சிறிது ஆய் - சூக்ஷுமத்தில் சூக்ஷுமமாய், மிகப் பெரிதில் பெரிதாய்-மிகுந்த மகத்தில் மகத் தாய், நின்னில் வேறு இல்லா- உன்னினின்றும் அந்நிய மில்லாத, பெருமை காணும் - பெருமையை உணரும், பெருந் தகமைக்கு - பெருந் தன்மைக்கு, உரியார் - உரித்தானவர்கள், எல்லாம் - எல்லா

ரும், ஒரு நீயே - ஒப்பற்ற தேவரீரே, வேறு ஒன்று இலது - (உன்னைத் தவிர) அந்நியமா யொன்று மில்லை. என்று உரைப்பர்கள் - என்று கூறுவார்கள். (எ—று) ஆல் - அசை, (20)

போத னாகிய புராணனும்
புருடனைப் பொருட்கெலா முயிராக,
வாதி நாள்படைத் தனையவன்
படைத்தன னகிலமு மந்நாளே,
வேதம யாவையும் விரித்தனை
யுன்னிலே மீளவு மனைத்திற்கு,
மேது பூதனா யுளந்தொறு
மிலங்குநின் னியல்புகண் டனமெந்தாய்.(21)

(இ—ள்) எந் தாய்- எமது தந்தையே, போதன் ஆகிய - பிரமா வாகிய, புராணன் ஆம் -பழமை யான, புருடனை - (இரண்யகற்ப) புருஷனை, பொருட்கு எலாம் - சகல வஸ்த்துக்கட்கும், உயி ராக - பிராண னாக, ஆதி நாள் படைத்தனை - முதலில் சிருட்டி செய்தீர், அவன் - அந்தப் பிரம தேவன், அகிலமும் படைத்தனன் - எல்லா வற்றையும் சிருட்டி செய்தான், அந் நாளே-அக் காலத்தி லேயே, வேதம் யாவையும் விரித்தனை - வேதங்கள் எல்லா வற்றையும் உண்டாக்கினீர், உன்னிலே -தேவரீரிடத்தி லேயே, மீளவும் - மருபடியும் (அடங்குகின்றன), அனைத் திற்கும் - எல்லாவற்றிற்கும், ஏது பூத னாய் - காரண பூத னாக, உளந் தொறும்- அந்தக் கரணங்கள் தோறும், இலங் கும் - பிரகாசிக்கும், நின் இயல்பு - உன் னுடைய தன் மையை, கண்டனம் - அறிந்தோம். (யாம்). (எ—று) (21)



இப்பிரம சக்கரமி யங்குவது முன்பா
லப்பெரிய மாயையுடை யாயமல நீயே,
சிற்பரம யோகபதி திவ்யநட நாநின்,
பத்மசர ணங்கள்சர ணென்றுபணி கின்றோம். (22)

(இ—ள்) அமல நீயே - பாப மற்றவனே தேவரீரே, சித் பரம யோக பதி - சித் தாய் பிரம ரூப மாய் யோகத் திற்குத் தலைவனே, திவ்ய நடநா - ஆநந்த தாண்டவம் செய்பவனே, இப் பிரம சக்கரம் - இந்தப் பிரமா ரூப சக்க ரம், இயங்குவதும் - நடப்பதுவும், உன் பால் - உன்னி டத்திலேயே ஆம், அப் பெரிய - அப்படிப்பட்ட மகத் தான, மாயை உடை யாய் - மாயையினை உடையவனே. நின் பத்ம சரணங்கள் - தேவரீரது தாமரை மலர் போன்ற திரு வடிகளை, சரண் என்று - அடைக்கலம் என்று கருதி, பணிகின்றோம் - நமஸ்கரிக்கின்றோம். (எ—று) (22)

எந்தைநீ பரமா காசத்
திடையுறு நிறுத்தங் கண்டோ,
மிந்தவெப் பொருளு மாநா
யேகநீ யாகி நின்ற,
வந்தநின் மகிமா வைக்கண்
டதிசய மாக வுன்ன,
தந்தமில் பரமா நந்த
மநுபவித் தநுப வித்தேம். (23)

(இ—ள்) எந் தை - எமது பிதாவே, நீ பரம ஆகா சத்திடை - தேவரீர் சிதாகாயத்தின்கண், உறும் - பொருந்தி (செய்யப்பட்ட), நிருத்தம் - ஆநந்த தாண்ட வத்தை, கண்டோம்-தெரிசித்தோம், இந்த - இங்கு தோற்

றப்பட்ட, எப் பொருளும் ஆனுய் - எல்லா வஸ்த்துக் களும் ஆயினீர், ஏகம் நீ ஆகின்ற - அத்வைத சொருபமா யிருக்கின்ற, அந்த - அப்படிப்பட்ட, நின் மகிமாவை கண்டு - தேவரீரது மகிமையைப் (பார்த்து). அதிசய மாக - ஆச்சரிய மாகக் கருதி, உன்னது - தேவரீரது, அந்தம் இல் - நாசம் இல்லாத. பரம ஆநந்தம் - பிரமாநந் தத்தினை, அநுபவித்து - அநுபவித்து (மேலும்), அநுபவித் தேம் - அநுபவித்தோம். (எ-று) (23)

உன்னுரையா மோங்கார முயர்முத்திக் கொருவிதைநீ
துன்னியுட ரேறுநீ தோன்ருமை மறைந்திருத்தி,
நின்னிடையெல் லாமாய நீமாயாய் நின்னெழிய,
வந்நியமா யுள்ளவெல்லா மசத்தியமென்
றறைவர்களால். (24)

(இ—ள்) உன் உரை ஆம் - தேவரீரது வசந மாகிய, ஓங்காரம் - ஓம் என்னும் பிரணவ மானது. உயர் முத்திக்கு - அநர்த்த நிவிர்த்தி ஆநந்த பிராப்தி ரூப மோக்ஷத் திற்கு, நீ ஒரு விதை - நீர் ஒப் பற்ற காரணம் ஆகும், நீ உடல் தோறும் - தேவரீர் சரீரங்கள் தோறும், துன்னி - பொருந்தி, தோன்ருமை - தோன்ருமல், மறைந்திருத்தி - ஆவரணம் செய்து இருக்கின்றீர், நின் னிடை - தேவரீரிடத்து, எல்லாம் மாய - எல்லாம் நாசம் அடைய, நீ மாயாய் - தேவரீர் நித்தியரு யிருக்கின்றீர், நின் ஒழிய - தேவரீரை இன்றி, அந்நியமா யுள்ள எல்லாம் – வேரு யிருக்கின்ற எல்லா வஸ்த்துக்களையும், அசத்தியம் என்று - பொய் என்று, அறைவர்கள் - சொல்லுவார்கள், (எ-று) ஆல் - அசை, (24)



தொழுதரு மறையெலாந் துதிப்ப துன்னையே,
பழுதறு முநிவர்கள் பணிவ துன்னையே,
யொழிவற வுணர்பவ ருணர்வ துன்னையே,
யழிவற நினைபவ ரடைவ துன்னையே. (25)

(இ—ள்) தொழுதரும் - வணங்குதற் குரிமை யான, மறை எலாம் - வேதங்கள் யாவும், துதிப்பது உன்னையே- தோத்திரம் செய்வது தேவரீரையே யாகும், பழுது அறும் - பாப மற்ற, முநிவர்கள் - ரிஷிகள், பணிவது உன்னையே - வணங்குவதும் தேவரீரையே யாகும், ஒழிவு அற - இடையீ டின்றி, உணர்பவர் - அறிபவர்கள், உணர்வது உன்னையே - அறிவதும் தேவரீரையே யாகும், அழிவு அற - நித்திய மா யிருத்தற் பொருட்டு, நினைபவர் - தியானிப்பவர்கள், அடைவது உன்னையே - அடைவதும் தேவரீரையே யாகும். (எ-று) (25)

ஒருமறை யநந்த சாகை
கொண்டுன துருவ மொன்றி,
னருமையை யறிவிக் கின்ற
வப்படி யறிய வுன்றன்,
பெருமையை யறிவார் சாந்தி
பெறுபவர் பெருதா ரெல்லாங்,
கருமய லுறுவார் சாந்தி
கநவிலுங் காணமாட்டார். (26)

(இ—ள்) ஒரு மறை - ஒரு வேத மானது, அநந்த சாகை கொண்டு - அநேக சாகைகளினுல், உனது உருவம் ஒன்றின் - தேவரீரது ஒ ருருவத்தின், அருமையை - அருமையினை, அறிவிக்கின்ற - சொல்லுகின்றன. அப்படி

அறிய - அவ் வாறு அறியக் கூடிய, உன் தன் - தேவரீரது, பெருமையை - கீர்த்தியினை, அறிவார் - உணர்ந்த மகான்கள், சாந்தி பெறுபவர் - சாந்தியை அடைந்தவ ராவார்கள், பெருதார் எல்லாம் - (தேவரீரது சொருபத்தை) உணராத யாவரும், கரும் மயல் உறுவார் - இருட் டாகிய மயக்கத்தினை அடைவார்கள், கனவிலும் - (அவர்கள்) சொற்பனத்திலும், சாந்தி - சாந்தியினை, காணமாட்டார் - அடையார்கள். (எ-று) தன் - அசை. (26)

ஆதி தேவ னீயுலகனைத்து யிர்க்கு மாதியா,
யீதெலாம மைக்குமண்ண லெல்லை யற்ற வின்பமெப்,
போது மேவி யென்று மைம்பு லப்படாதி ருப்பதோர்,
சோதி யாகி நித்தமுத்த சுத்த னாயி ருக்குமால். (27)

(இ—ள்) நீ ஆதி தேவன் - தேவரீரே முதற் கடவுளாவீர், அனைத்து உலகு - எல்லா உலகங்கட்கும், உயிர்க்கும் - எல்லா ஜீவர்கட்கும், ஆதி யாய் - (நீர்) முன்னே இருந்து, ஈது எலாம் - இவைகள் யாவற்றையும், அமைக்கும் - உண்டாக்குகின்ற, அண்ணல் - பெருமையில் சிறந்த கடவுளு மாவீர், எப் போதும் (நீர்) - சதா காலமும், எல்லை அற்ற - அளவிட முடியாத, இன்பம் மேவி - ஆநந்தத்தைப் பொருந்தி, என்றும் - எப் பொழுதும், ஐம் புலப்படாது - பஞ்சேந்திரியங்களின் (வழித்தாக விஷயங்களின்) வசப்படாது, இருப்பது - இருப்பதும் ஆகிய, ஓர் சோதி ஆகி - ஒப் பற்ற பிரகாச மாயும், நித்த - நித்திய மாயும், முத்த - முத்த மாயும் (விடுபட்ட தாயும்), சுத்தன் ஆய் - சுத்த மாயும், இருக்கும் - இருக்கின்றீர். (எ-று) ஆல் - அசை. (27)



படைத்தி நீய ளித்தி நீப
டைத்த யாவு முன்னிலே,
யுடைத்தி நீயொ ருத்த னேயு
ணர்ந்து கொண்டி ருத்திநீ,
யடைத்தி நீயு ளத்தி லேநி
னன்பை யேயொ ளிக்குமா,
தடைப்ப டாம லென்று நின்ச
ரண்ப ணிந்து சாருகோம். (28)

(இ—ள்) நீ படைத்தி - தேவரீரே (எல்லாவற்றையும்) உண்டாக்கினீர், நீ அளித்தி - தேவரீரே (எல்லாவற்றையும்) இரக்ஷிக்கின்றீர், நீ படைத்த யாவும் - உம்மால் உண்டாக்கப்பட்ட யாவும், உன்னிலே உடைத்தி - உம்மிடத்திலேயே இருக்கின்றன, நீ ஒருத்தனே - தேவரீர் ஒருவரே, உணர்ந்து கொண்டு இருத்தி - (எல்லாவற்றையும்) அறிந்து கொண்டிருக்கின்றீர், நீ உளத்திலே - தேவரீரது இருதயத்திலே, அடைத்தி - (எல்லாவற்றையும்) வைத்துக்கொண்டிருக்கின்றீர், நின் அன்பையே - தேவரீருடைய அன்பையே, ஒளிக்கும் ஆ(று) - பிரகாசிக்கும் படி யாக, தடைப்படாமல் - பிரதி பந்தக மில்லாமல், என்றும் - எப் பொழுதும், நின் சரண் பணிந்து - தேவரீருடைய திரு வடியை நமஸ்கரித்து, சாருகோம் - அடைகின்றோம். (எ-று) (28)

யோகி யாகி யுயிராகி யுணர்வா னாகி யிணையில்லா,
வேக னாகி யிந்திரனு மரியு மயனு மீசனுமாஞ்,
சேகி தாவுந் தாதாவுந் தீயு மதியுந் திநகரனு,
மாகி வெவ்வே றனைத்துருவு மானா யெனவே
யறைகுவரால். (29)

(இ—ள்) யோகி ஆகி - (மநோ நிக்ரகத்தில்) யோகி யாகவும், உயிர் ஆகி - பிராண னுகியும், உணர்வான் ஆகி - (எல்லாவற்றையும்) அறிவா னுகியும், இணை இல்லா - சமாந மில்லாத, ஏகன் ஆகி - அத்வைத ரூப னுகியும், இந்திரனும் - இந்திர னுகியும், அரியும் - மஹா விஷ்ணு வாகியும், அயனும் - பிரமா வாகியும், ஈசனும் ஆம் - ஈசுவர னுகியும், சேகிதாவும் - சேகிதா என்னும் தேவதையும், தாதாவும் - (தாங்குகின்ற) தாதா வென்னும் தேவதையும், தீயும் - அக்நியும், மதியும் - சந்திரனும், திநகரனும் ஆகி - சூரிய னுகியும், வெவ் வேறு - (இன் னும்) நாநா வான, அனைத்து உருவும் ஆனுய் - எல்லா சொரூபமுமாய் இருக்கின்ருய், என அறைகுவர் - என்று (பெரியோர்) கூறுவார்கள்- (எ—று) ஏ- ஆல் அசை. (29)

அகில உலகு மிருப்பிடநீ
யறிய வேண்டு மக்கரநீ,
சகல தருமங் களும்வளர்க்குந்
தாய்நீ புருடோத் தமன்றுனீ,
புகலு மரிநீ பூமகனீ
புராரி நீயெப் பொருளுக்கும்,
பகுதி நீநீ யொழிவின்றி
நிலையாய் நிற்கும் பரம்பரநீ. (30)

இ—ள்) அகில உலகும் - சகல பிரபஞ்சங்களுக்கும், இருப்பிடம் நீ - இருத்தற்கு நீயே இட மாய் இருக்கின் ருய், அறிய வேண்டும் - உணரத் தக்கன வாகிய, அக்கரம் நீ - அக்ஷர ரூப மாகவும் நீயே யிருக்கின்ருய், சகல தருமங் களும் - எல்லாத் தருமங்களையும், வளர்க்கும் தாய் நீ -



விருத்தி செய்கின்ற தர்ம மாதாவும் நீ யாகின்ருய், புரு டோத்தமன் நீ - புருஷர்களில் உத்தம னுகவும் நீ இருக் கின்ருய், புகலும் அரி நீ - சொல்லுகின்ற மகா விஷ்ணுவும் நீயா யிருக்கின்ருய், பூமகன் நீ — (பூமியை சிருட்டிக்கும்) பிரமாவும் நீயா யிருக்கின்ருய், புராரி நீ-(திரி புர தகநம் செய்த) ருத்திரனும் நீயா யிருக்கின்ருய்; எப் பொருளுக் கும் - எல்லா வஸ்துக்களுக்கும், பகுதி நீ - பிரகிருதியும் நீயா இருக்கின்ருய், நீ ஒழிவு இன்றி - தேவரீர் இடையீ டின்றி, நிலையாய் நிற்கும் - ஸ்த்திரமா யிருக்கின்ற, பரம் பரம் நீ - பரத்துக் கெல்லாம பர வஸ்த்துவும் நீயாய் இருக்கின்ருய். (எ—று) தான் - அசை. (30)

கரண மியாவையுங் கடந்திருள்
கடந்துனைக் கண்டவ ராதித்த,
வருண மானசிந் மாத்திர
நேத்திர முதற்புலன் மனஞ்செல்லாப்,
பிரம மேகமாம் புருடனோர்
பிறிதிலாப் பெருமையாற் பேச்சற்ற,
பரம வான்முதற் பகுதிநிர்க்
குணம்வெறும் பாழென நிகழ்கின்றுர். (31)

(இ—ள்) கரணம் யாவையும் - அந்தக் கரணம் எல் லாவற்றையும், கடந்து - நிக்ரகஞ் செய்து, இருள் கடந்து- அஞ்ஞாநத்தினையும் போக்கி, உனை கண்டவர் - உன்னு டைய (சொரூபத்தை) புணர்ந்தவர்கள், ஆதித்த வருணம் ஆன - சூரிய வர்ண மான, சிந் மாத்திரம் - சிதாகாச சொரூபம் என்கின்றுர்கள், நேத்திரம் முதல் புலன் - கண் முதலிய இந்திரியங்களால் பார்க்க முடியாத தாயும், மநம்

செல்லா - மநதினுலும் சிந்திக்க முடியாத தாயும் உள்ள, பிரமம் - பிரம மானது, ஏக மாம் - அத்வைத ரூப மாம் என்கின்றனர், ஓர் புருடன்-ஒப் பற்ற புருஷன் என்கின்றனர், பிறிது இலா - வேறுபடுத லில்லாத, பெருமையால்-பெருந் தன்மையால், பேச்சு அற்ற - (வாக்கால்) வசநிக்க முடியாத, பரம வான் முதல் - மே லான ஆகாயம் முதலிய, பகுதி - பிரகிருதி என்றும், நிர்க்குணம் - நிர்க்குணம் என்றும், வெறும் பாழ் என - வெறும் சூநிய மென்றும், நிகழ்கின்ருர் – சொல்லுகின்ருர்கள். (எ—று) (31)

ஓது மொலியூ றுருச்சுவைநாற் றந்தனக்கற்,
றாதி முடிவிலபர மாயசிந் திதமாய்,
பூத மனைத்தினுக் குமுள்ளாய்ப் புறம்புமாஞ்,
சோதி நினையறிந்தார் துஞ்சார் பிறவாரால். (32)

(இ—ள்) தனக்கு ஓதும் - தனக்குச் சொல்லா நின்ற, ஒலி, ஊறு. உரு, சுவை, நாற்றம் - சத்த, பரிச, ரூப, ரச, கந்தங்கள், அற்று - இன்றி, ஆதி முடிவு இல் - உற்பத்தி நாச மில்லாத, பரம் ஆய் - பிரம மாய், அசிந்திதம் ஆய் - சிந்திக்க முடியாத தாய், பூதம் அனைத்தினுக்கும் - எல்லாப் பூதங்கட்கும், உள் ஆய் புறம்பும் ஆம் - ஆந்தர மாகியும் வெளி யாகியும் உள்ள, சோதி - பிரகாசமான, நினை அறிந்தார் - உன்னை உணர்ந்தவர்கள், துஞ்சார் - மரண மடையார்கள், பிறவார்-ஜநந மடையார்கள். (எ—று) ஆல் - அசை. 32

எந்த யோகிகளு நாடு கின்றபர
யோகி நின்னடியி றைஞ்சுகோ,



மந்த மாதியி லநந்த சத்தியுடை
யண்ண னின்னடியி றைஞ்சுகோஞ்,
சந்த மின்னதென நாடு மாறரிய
சம்பு வேயடியி றைஞ்சுகோம்,
பந்த மொன்றில்பரி சுத்த நற்பரம
பாத பங்கயமி றைஞ்சுகோம். (33)

இ—ள்) எந்த யோகிகளும் - எப்படிப்பட்ட மகா யோகிகளும், நாடுகின்ற - (இருதயத்தின்கண்) தியாநிக்கின்ற, பர யோகி - மே லான யோகியே, நின் அடி - உன் திரு வடியை, இறைஞ்சுகோம் - நமஸ்காரம் செய்கின்ருேம், அந்தம் ஆதியில்-உற்பத்தி நாச மில்லாத, அநந்தசத்தியுடை-அநேக சத்திகளை உடைய, அண்ணல்-பரம சிவனே, நின் அடி இறைஞ்சுகோம் - உன் திரு வடியை நமஸ்க்காரம் செய்கின்ருேம், சந்தம் இன்னது என - சந்தங்கள் இப்படிப்பட்டது என்று, நாடும் ஆறு அரிய - கருதுதற்கு அருமை யான, சம்புவே - கடவுளே, அடி இறைஞ்சுகோம் - (உன்னுடைய) திரு வடியை நமஸ்காரம் செய்கின்ருேம், பந்தம் ஒன்று இல்-யா தொரு பந்தமு மில்லாத, பரிசுத்த - தூய்மை யான, நல் பரம - உயர்ந்த பரம சிவனே, பாத பங்கயம் – (உமது) பாத மாகிற தாமரை மலரை, இறைஞ்சுகோம்-நமஸ்க்காரம் செய்கின்ருேம். (எ—று) 33

கூடுநின் றுருகு மிறைவநின் ஞாநக்
கூத்தினைக் கண்டுகும் பிட்டே,
நாடுமெங் கண்க ளுன்றிரு மேனி
யன்றிமற் றென்றையு நாடா,
வோடுமிம் மநமு மொழிவற நிறைந்த
வுனையல தொருபொரு ளுணராப்,

பீடுறு கமல மலர்ப்பதம் பணிந்தெம்
பிறவிவே ரறுத்தனம் பிரானே. (34)

(இ—ள்) இறைவ - பரம சிவனே, நின் ஞாநக் கூத்தினை - தேவரீரது ஞாநாநந்த தாண்டவத்தினை, கண்டு - தெரிசித்து, கூடு நின்று உருகும் - சரீரமும் (அநலில் காட்டிய மெழுகு போல) இருந்து உருகும்படியாக, கும்பிட்டேம் - நமஸ்க்காரம் செய்கின்றோம், நாடும் என் கண்கள்- (ரூபங்களைப்) பார்க்கின்ற எனது கண்கள், உன் திருமேனி அன்றி - தேவரீரது திவ்ய மங்கள சொருபத்தை யல்லாது, மற்று ஒன்றையும் நாடா - வேறொன்றையும் பார்க்காது, ஓடும் இம் மநமும் - (விஷயங்களிற்) செல்லுகின்ற இந்த மநமும், ஒழிவு அற - இடையீடின்றி, நிறைந்த - பரிபூரணமா யுள்ள, உனை அலது - தேவரீரை அன்றி, ஒரு பொருள் - ஓர் வஸ்த்துவையும், உணரா - அறியமாட்டாது, பிரானே - பரம சிவனே, பீடு உறு - பெருமை பொருந்திய, கமல மலர் பதம் - தாமரை மலர் போன்ற (உபய) திரு வடியை, பணிந்து - நமஸ்க்கரித்து, எம் பிறவி - எங்களுடைய ஜன்ம மாகிய, வேர் அறுத்தனம் - மூலத்தை நாசம் செய்தோம். (எ—று) (34)

பவனே நின்னடி பணிகோம்
பவோற் பவனேயடி பணிகோங்,
தவனே நின்னடி பணிகோஞ்
சங்கர னேயடி பணிகோ,
மிவனே யென்றிட விங்ங
னெழுந்தரு ளும்பே ரருளே,
சிவனே யெத்தே வர்க்குந்
தேவே நின்னடி பணிகோம். (35)



(இ—ள்) பவனே - மேலானவனே, நின் அடி பணிகோம் - உன்னுடைய திரு வடியை நமஸ்கரிக்கின்றோம், பவ உத்பவனே - ஜென்மத்தை உண்டுபண்ணுபவனே, அடி பணிகோம் - (உன்) திரு வடியை நமஸ்க்கரிக்கின்றோம். தவனே - (மேலான) தவத்தை உடைவ்வனே, நின் அடி பணிகோம் -உன்னுடைய திரு வடியை நமஸ்கரிக்கின்றோம், சங்கரனே - சுகத்தைக் கொடுப்பவனே, அடி பணிகோம் - (உன்) திரு வடியை நமஸ்க்கரிக்கின்றோம், இவனே என்றிட - இவனே என்று சொல்லும்படி யாக, இங்ஙன் - இவ் விடத்து (நீர் ஆலங் கட்டியாய்த் தடித்தது போலும், உருகி யிருந்த நெய் கெட்டியானது போலும்,) எழுந்து அருளும் - எழுந்தருளி உள்ள, பேர் அருளே - பெரிய கிருபா மூர்த்தியே, சிவனே - பரம சிவனே, எத் தேவர்க்கும - எல்லாத் தேவதைகட்கும், தேவே - தேவனு யுள்ளவனே, நின் , தேவரீரது, அடி பணிகோம் - திரு வடியை நமஸ்க்காரம் செய்கின்றோம். (எ—று) (35)

காம னீறுசெய் கண்ணைவ ணங்குதுங்
கால னூறிய காலைவ ணங்குதும்,
சாம கீதனை நாளும்வ ணங்குதுந்
தாளி லெந்தலை யாரவ ணங்குதுஞ்,
நாம ரூபம தின்றிய னைத்துமா
நாம ரூபனை நாளும்வ ணங்குதுஞ்,
சேம மாகிய வீடரு ளெந்தையாஞ்
சிவப்பிர காசனை யெனறும்வ ணங்குதும். 36

இ—ள்) காமன் நீறு செய் - மன்மதனை பஸ்ப மாக்கிய. கண்ணை வணங்குதும் - நெற்றிக் கண்ணை நமஸ்கரிக்

கின்றோம், காலன் நூறிய - இயமனை உதைத்துத் தள்ளிய, காலை வணங்குதும் - பாதத்தை நமஸ்க்கரிக்கின்றோம். சாம கீதனை - சாம கானப் பிரியனை. நாளும் வணங்குதும் - சதா காலமும் நமஸ்கரிக்கின்றோம், தாளில்-தேவரீருடைய திருவடியில், எம் தலை ஆர - எமது சிரசு பொருந்தும்படியாக, வணங்குதும் - நமஸ்க்கரிக்கின்றோம். நாமம் ரூபமது - (ஒரு) நாமம் (ஒரு) உருவம். இன்றி - இல்லாது, அனைத்தும் ஆம் - எல்லா மாகிய. நாம ரூபனை - பெயரும் ரூபமும் உடைய கடவுளை, நாளும் வணங்குதும் - சதா காலமும் நமஸ்கரிக்கின்றோம், சேமம் ஆகிய வீடு - உயர்வாகிய (அனர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப) மோக்ஷத்தினை, அருள் - அநுக்கிரகஞ் செய்த, எந்தை ஆம் - எமது தந்தையாகிய, சிவப் பிரகாசனை - சிவப் பிரகாச ஸ்வாமிகளை, என்றும் வணங்குதும் - எப்பொழுதும் நமஸ்க்கரிக்கின்றோம்-(எ-று) -ரூப மது' - என்பதில். அது - பகுதிப் பொருள் - விகுதி.

(36)

உருப்ப நேகவித மாகி யோருருவ
னுமு ருத்திரநி னுள்குவார்,
விருப்ப னேயவர்க டற்பெ ரும்பிறவி
வெந்து நீறெழவி ழிப்பதோர்,
நெருப்ப னேநினைவு றப்ப டாவொருநி
ருத்த னேநிமல நெஞ்சகத்.
திருப்ப னேயிறைவ னேசி வாயநம
வென்று சேவடியி றைஞ்சினர். (37)

(இ—ள்) உருப்பு - உருவங்கள், அநேக விதம் ஆகி - அநேக பிரகாரமா யிருந்தும், ஓர் உருவன் ஆம்-ஒப் பற்ற சொருபத்தை யுடைய, உருத்திர - உருத்திர மூர்த்தியே, நின் உள்குவார் - உன்னை (மநதில்) தியாநிப்பவர்களிடத்து, விருப்பனே - பிரிய முடையவனே, அவர்கள் பெரும் பிறவி - அவர்களது பெரிய சந்மத்தினை, வெந்து நீறு எழ - தகித்து பஸ்ப மாகும்படி, விழிப்பது - விழிக்கின்ற, ஓர் நெருப்பனே - ஒப் பற்ற நெருப் பாகிய நெற்றிச் கண்ணை உடையவனே, நினை வுறப்படா - சிந்திக்க முடியாத, ஒரு நிருத்தனே-ஒப் பற்ற ஆநந்தத் தாண்டவஞ் செய்பவனே, நிமல நெஞ்சகத்து - நின்மல மான மநதின்கண், இருப்பனே-இருக்கின்றவனே, இறைவனே - கடவுளே, சிவாய நம - சிவன் பொருட்டு நமஸ்க்காரம், என்று - என்று சொல்லித் துதித்து, சே அடி - பெருமை பொருந்திய திருவடியை, இறைஞ்சினர் - நமஸ்காரம் செய்தார்கள் ரிஷிகள் (எ-று) தன் - அசை. (37)

எந்தையள வற்றதிரு மேனியையி றைஞ்சித்,
சிந்தைகளி கூருமள விற்சிவனை நேரே,
யந்தமறு தன்னையருள் செய்யவரு ளாலே,
வந்ததிரு மேனியினை மாலினெடு கண்டார். (38)

(இ—ள்) எந்தை - எமது தந்தை யாகிய பரமேசுரனது. அளவு அற்ற - எண்ண முடியாத, திரு மேனியை - திவ்ய மங்கள சொரூபத்தை, இறைஞ்சி - நமஸ்க்காரம் பண்ணி, சிந்தை - மநது, களிகூரும் அளவில் - சந்தோஷத்தை அடைந்த சமயத்தில், சிவனை நேரே - பரம சிவனை நேரே, அந்தம் அறு - நித்தியமா யுள்ள, தன்னை - தனது சொருபத்தை, அருள் செய்ய - அநுக்கிரகஞ் செய்ய, அருளாலே - கிருபையினாலே, வந்த - எழுந்தருளி வந்த,

திரு மேனியினை - திவ்ய மங்கள சொருபத்தை, மாலி னெடு - மகா விஷ்ணுவோடு, கண்டார் - தரிசித்தார்கள். (எ—று) (38)

அளவி றந்தவ னளவுபட் டிருந்தவவ் வருள்கண்,
டுளம்வி யந்துநின் னொப்பிலா வுருவுகண் டுய்ந்தோங்,
களவொ ழிந்துளங் காதலிக் கின்றதுன் கரைதீர்,
வளமை யின்னமுங் கேட்கவென் றடிவணங்
கினரால். (39)

(இ—ள்) அளவு இறந்தவன் - (ஒரு விதத்தினாலும்) அளக்க முடியாத பரம சிவன், அளவு பட்டு இருந்த - (ஒரு) அளவோடு கூடி யிருந்த, அவ் அருள் கண்டு - அந்த கிருபையைப் பார்த்து, உளம் - மனதில், வியந்து - சந்தோஷத்தை யடைந்து, நின் - தேவரீரது, ஒப்பு இலா - சமான ரகித மான, உருவு கண்டு-சொருபத்தை தரிசித்து, உய்ந்தோம் - ஈடேறினோம்- உளம்-மனது, களவு ஒழிந்து-பரிசுத்தமா யிருந்து, உன் கரை தீர் - தேவரீரது அளவிட முடியாத, வளமை - வளப்பத்தை, இன்னமும் கேட்க - மேலும் கேட்டு (ஆனந்த மடைய), காதலிக்கின்றது - விரும்புகின்றது, என்று - என விண்ணப்பஞ் செய்து, அடி வணங்கினர் - (சௌனகாதி ரிஷிகள்) திரு வடியில் நமஸ்கரித்தார்கள். (எ-று) ஆல் - அசை. (39)

மேல தானதன் பெருமையைக் கேட்கமேன் மேலுஞ்,
சால தாந்தவஞ் செயத்தகு தபோதனர் தமக்குக்,
கால காலனெக் கடவுளுந் தொழுதெழுங் கடவுண்,
மூல மாதவன் றன்முகம் பார்த்துமேன் மொழிவான். 40



(இ—ள்) மேலது ஆன - உயர்வா யுள்ள, தன் பெருமையை கேட்க - தன்னுடைய மகிமையைக் கேட்க, மேல் மேலும் - மீண்டும் மீண்டும், சால தாம் தவம் - மிகுந்த தவத்தினை, செயத் தகும் - செய்கின்ற, தபோதனர் தமக்கு - தபத்தையே தன மாக உடைய சௌனகாதி ரிஷிகட்கு, கால காலன் - காலனுக்குக் காலனும், எக் கடவுளும் - எந்தத் தேவதைகளும், எழும் தொழுது - எழுந்து வணங்குகின்ற, கடவுள் - பரமசிவன், மூல மாதவன் - (காரண மான) மஹா விஷ்ணுவினது, முகம் பார்த்து- முகத்தினைப் பார்த்து, மேல் மொழிவான்-மேலே சொல்ல ஆரம்பித்தார். (எ—று) தம்- தன் - அசை. (40)

5. விசுவ ரூப அத்தியாயம் முற்றிற்று.
(ஆக விருத்தம் 161)

---

## 6. சிவ சத்தியின் செய லுரைத்த அத்தியாயம்.

காத லான்முனிவர் கேண்மி னென்பெருமை
காணு மாறருமை கண்டுதா,
னோத லான்மறையெ னுள்ள வாறறியு
முற்ப விப்பதுல கென்றனு,
வீதெ லாமுனிலை பெற்றி யங்குவது
மென்றனு லழிவு மென்றனு,
லாத லாலழிவி லாத றப்பழைய
னுன நான்முழுது மாகுவேன். (1)

(இ—ள்) முனிவர் - (சௌனகாதி) ரிஷிகளே, காதலால்-பிரியத்தோடு, கேண்மின் - கேட்பீர்களாக, மறை-

வேதங்க ளானது, என் அருமை கண்டு - எனது அருமையை உணர்ந்து, பெருமை காணும் ஆறு - மகிமை தெரியும்படி, ஓதலால் - சொல்லுதலினுல், என் உள்ள ஆறு - என்னை உள்ளபடி (அவ் வேதங்கள்), அறியும் - உணரும், உலகு -(இந்தப்) பிரபஞ்சத்தை, உற்பவிப்பது- உண்டாக்குவதும், என் தனுல் - என்னுலேயே ஆம், ஈது எலாமும் - இந்தப் பிரபஞ்சம் யாவும், என் தனுல் - என்னுலேயே, நிலெபெற்று -ஸ்திரமா யிருந்து, இயங்குவதும் - நடப்பதுவும் ஆம், என் தனுல் - என்னுலேயே, அழிவும் - நாச மாக்கப்படுவதும் ஆம். ஆதலால்-ஆகையினுல், அழிவு இலாத - நித்தியமா யுள்ள, அற பழையன் ஆன- அத்தியந்தம் புராதந ணுகிய, நான் முழுதும் - நான் எல்லாமு மாய், ஆகுவேன் - இருக்கின்றேன். (எ—று) 'என்தனுல்' 'என்தனுல்' 'என்தனுல்' என்பது, மூன்றிடத்தும், தான், தன் தன் தன் —அசை. (1)

அகிலபூ தங்க ளுக்கு மந்தரி யாமி யாய்நான்,
சகலபூ தமுமென் னுள்ளே சாரநான் ருங்கி நிற்ப,
நிகலமு மதிலெங் கண்ணு நிற்பவ னெனவு
மென்னைப்,
புகலவும் படாதே யென்னிற பொருள்பிறி தின்மை
யாலே. (2)

(இ—ள்) அகில பூதங்களுக்கும் - சகல பூதங்கட்கும், அந்தரியாமியாய் - உள்ளே யிருந்து அசைப்பவ ணுகை, நான் - நான் இருக்கின்றேன், என் உள்ளே - என்னிடத்திலே, சகலபூதமும் சார - எல்லாப் பூதங்களும் பொருந்துதலினுல், நான் தாங்கி நிற்பன் - நான் அவற்றிற்கு ஆதாரமா யிருக்கின்றேன். நிகிலமும் அதில் - சகல வஸ்த்துக்களிலும், எங்கண்ணும் - எல்லா விடங்களிலும், நிற்பவன் எனவும் - பொருந்தியிருப்பவ னென்று, என்னை புகலவும் படாது - என்னைச் சொல்லக்கூடாது. என்னில் - என்னைத் தவிர, பிறிது பொருள் - வேறு வஸ்த்து, இன்மையால் — இல்லாமையால் (என்னிடத்து அவைக ளிருக்கின்றன- நான் அவைக ளிடத்தி லில்லை). (எ—று) ஏ—ஏ—அசை. (2)

செப்பிடவொ ணுதெதிர்தெ ரிந்திடவு முங்கட்,
கெப்படிநி கழ்ந்ததது வெனனுடைய மேனி,
யப்படியி ருந்தவெனை மாயையத னுலே
யொப்பிடநி னைந்திடுவ ரேயுணர்வி லாதார். (3)

(இ—ள்) உங்கட்கு-உங்களுக்கு, செப்பிட ஒணுது - (வாக்கினுலே) வசநிக்க முடியாது, எதிர் தெரிந்திடவும் - நேரேசாக்ஷக்ஷாத் கரிக்கவும், எப்படி நிகழ்ந்தது - எப்படி விளங்கியதோ, அது என் னுடைய மேனி- அதுவே எனது சொருபம், அப்படி இருந்த எனை - அவ் வா ருன என்னை, உணர்வு இலாதார் - அஞ்ஞாநிகள், மாயை அதனுலே - மாயையினுலே, ஒப்பிட - சமான மாக, நினைந்திடுவர் - எண்ணுகின்றுர்கள். (எ—று) ஏ - அசை. 'மாயை அதனுல்' என்பதில், அது பகுதிப் பொருள், விகுதி. (3)

மேவியா தினுமுளனுய் வியனுலகை நடத்துவனுன்,
ருவிலா வென்னுலே சகலகலை களுநடக்கு,
மோவிலா வொருகூற்ரு லுண்டாகு முலகனைத்து,
மாய்வதா மற்ரென்ரு லிருமையுமென் மாயையதால். 4

(இ—ள்) யாதினும் மேவி - எல்லா வஸ்த்துக்களிடத்தும் பொருந்தி, உளன் ஆய் - இருப்பவ னுய், வியன்

உலகை - ஆச்சரியப்படத்தக்க பிரபஞ்சத்தை, நான் நடத்துவன் - நான் நடத்துகின்றேன், தாவு இலா-அழிவு இல்லாத, என்னுலே - என்னுலேயே. சகல கலைகளும் நடக்கும் - எல்லா வித்தைகளும் நடக்கின்றன. ஒவு இலா - ஒழிவு இல்லாத, ஒரு கூற்ருல் - ஒரு சத்தியினுல், அனைத்தும் உலகு - எல்லா உலகங்களும், உண்டாகும் - உண்டாகின்றன, மற்று ஒன்ருல் - வே ருெரு சத்தியினுல், மாய்வது ஆம் - சகலமும் நாசத்தை யடைகின்றன. என் மாயையதால் - என் னுடைய மாயையினுலேயே, இருமையும் - (உத்பத்தி நாசம்) இரண்டு முண்டாகின்றன. (எ—று) (4)

ஈங்காதி யிடைமுடிவற் றிருப்பேனென் மாயையினுற்,
பாங்காகப் பகுதிபுமான் பண்ணினன்முற் பவத்தாமா,
ஞங்கார முதலாக வனைத்தும்விரிந் தனவதனு,
லோங்காரப் பொருளாமென் ஞெளியின்விரி
வுலகெல்லாம. 5

(இ—ள்) ஈங்கு -இவ்விடத்து, ஆதி இடை முடிவு- உற்பத்தி திதி நாசம், அற்று இருப்பேன் - இல்லாதவ னுக இருப்பேன், என் மாயையினுல் - என் னுடைய மாயா சத்தியினுல், பவத்து ஆம் முன் - சிருட்டிக்கு முன்னர், பாங்கு ஆக-.(பக்குவ மாக) சிரேஷ்ட மாக, பகுதி புமான்- பிரகிருதி புருஷன் ஆகிய இரண்டையும், பண்ணினன் - சிருட்டித்தேன், அதனுல்- அதனினின் றும், மான் ஆங்காரம் - மக தத்துவம் அகங்கார தத்துவம், முத லாக அனைத்தும் — முதலிய யாவும். விரிந்தன - உண்டாயின, உலகு எல்லாம் - இந்தப் பிரபஞ்சம் யாவும், ஓங்காரப் பொருளாம் - ஓங்கார அர்த்த மாகிய, என் ஒளியின் விரிவு - என்னுடைய பிரகாசத்தின் விரிவே யாம். (எ—று) (5)



கரியதாய் நின்றிவ் வுலகினுக் கெல்லாம்
காலசக் கரந்தனை நடத்து,
மிரணிய கருப்ப னுகுமார்த் தாண்ட
னென்னிடைத் தோன்றின னென்ருற்,
புரியும்வே தங்க ணுன்கையு மொன்ருய்ப்
பொருளதாய் புராணமாய்ப் புணர்தற்,
கரியதி லரிதா ஞானயோ கதையு
மடியிலே யவர்க்களித் தனனுல். 6

(இ—ள்) இவ் உலகினுக்கு எல்லாம் -இந்த பிரபஞ்ச முழுமைக்கும், கரியது ஆய் நின்று - சாக்ஷி யாக விருந்து, கால சக்கரந்தனை - கால மாகிய சக்கரத்தினை, நடத்தும் - நடத்துகின்ற, இரணிய கருப்பன் ஆகும் - இரணிய கருப்ப னுகிய, மார்த்தாண்டன் - சூரிய னுனவன், என் னிடைத் தோன்றினன் - என்னி லிருந்து உண்டாயினுன், அவர்க்கு - அந்த சூரியனுக்கு, என்னுல் புரியும் - என்னுல் செய்யப்பட்ட, வேதங்கள் நான்கையும்-நான்கு வேதங்களையும், ஒன்று ஆய் - ஏக மான, பொருளது ஆய் - அர்த்தங்களுள்ள தாய், புராணம் ஆய் - பழமை யாய், புணர்தற்கு - அடைதற்கு, அரியதில் அரிது ஆய் - அருமையிலும் அருமை யாக உள்ள, ஞான யோகதையும் - ஞான யோகத்தினையும், அடியிலே - முதலிலே, அளித்தனன் - உபதேசித்தேன். (எ—று) 'கரியது' என்பதில், அது ஆல் அசை. சக்கரம் தனை' என்பதில், தன் அசை. 'பொருளது' என்பதில், அது, அரியது, என்பதில், அது. (6)

எந்த நாளுமெனே யேநினைந்தவியல்
பாலே யென்னருளி னலயன,
சந்த நாடரிய திவ்ய மாமெனது
தன்மை தானவதரிக்கிரு.
னந்த மாதியிலென் னேவ லாவனிவ்,
வகில லோகமும மைக்கிரு,
னிந்த நாரணன ளிக்கு மாறுமிவ
னென்னில் வேறெனவி லாமையால். (7)

(இ—ள்) எந்த நாளும்-எப் பொழுதும், எனேயே - (பரமேசுர னகிய) என்னேயே, நினைந்த இயல்பால் - ஸ்மரிக்கின்ற தன்மையினுல், அயன் - பிரமா வானவன், என் அருளினுல் - என் னுடைய கிருபையினுல், சந்தம் நாடு அரிய - சதா காலமும் கருதுதற்கு அருமை யான. திவ்யம் ஆம் எனது - திவ்ய மான என் னுடைய, தன்மை - தன் மையினுலேயே, தான் அவதரிக்கிருன் - தான் உத்பத்தி யாகின்றனன், அந்தம் ஆதியில் - உற்பத்தி நாச மில்லாத, என் ஏவலால் அவன் - என்னுடைய ஏவுதலினுலே பிரமா, இவ் அகில லோகமும் - இந்த சகல சகத்தையும், அமைக்கிருன் - சிருட்டி செய்கின்ருன், இந்த நாரணன் - இந்த மஹா விஷ்ணு வானவர், என்னில் வேறு என – எனக்கு வேருக, இலாமையால் - இன்மையினுல் (இந்த சகல பிரபஞ்சத்தையும்), இவன் அளிக்கும்-இந்த விஷ்ணு இரக்ஷிக்கின்ற, ஆறும்-முறைமையு மாகும். (எ–று) ஏ–அசை. 7

கடையுகம திற்கடிய காலவந லாய்நின்,
றடையவுமு ருத்திரன ழிப்பதுமென் னலே,
யுடையவலி யாலுலவு மூதையுட லுய்த்தே,
நடையைமுத லானவைந டத்துவது மென்னுல். (8)



(இ–ள்) கடை யுகமதில் - யுகாந்தத்தில் பிரளாய காலத்தில், கடிய - கடுமையான. கால அநல் ஆய் நின்று - சூலாக்நி ரூப மாக இருந்து, அடையவும் - பொருந்தவும், உருத்திரன் - ருத்திர மூர்த்தி. அழிப்பதுவும் - (கலியுகத்தில்) சங்காரஞ் செய்வதும், என்னுல் - என்னுலேயே ஆம், உடைய வலியால் - உள்ள வலிவினுல், உலவும் - சஞ்சரிக்கின்ற, ஊதை - காற்று ரூபமா யிருந்து, உடல் உய்த்து - உடலின்கண் பொருந்தி, நடையை முதலானவை - நடப்பது முதலியன, நடத்துவதும் - நடத்துகின்றதும், என்னுல் - என்னுலேயே ஆம். (எ–று) ஏ–ஏ–அசை. (8)

தெய்வங் களுக்கும் பிதிரர்க்குஞ்
செய்யும் பூசை யாகின்ற,
வவியங் கவியம் பாகஞ்செய்
தநலோ னளிப்ப தென்னுலே,
யுய்வந் திடுமா றுதரத்தீ
யாகு மவனுண் டனவெல்லா.
மெய்வெந் திடாம லென்னியமத்
தாலே வேவித் திடுகின்ருன். (9)

(இ—ள்) தெய்வங்களுக்கும் - தேவதைகட்கும், பிதிரர்க்கும் - பிதிரர்களுக்கும், செய்யும் - செய்யப்பட்ட, பூசை ஆகின்ற - பூசை ஆகிய, அவியம் கவியம் - அவிசும் பஞ்ச கவ்யமும், பாகம் செய்து - பக்குவம் செய்து, அநலோன் அளிப்பது - அக்கினி கொடுப்பதும், என்னுலே - என்னுலேயே ஆம், உண்டன எல்லாம் - புசிக்கப்பட்ட யாவும், உய் வந்திடும் ஆறு - ஜீவித் திருக்கும்படி யாக, உதரத் தீ யாகு மவன் - உதராக்நி ரூப மானவன், மெய் வெந்திடாமல - (உதராக்நியால்) சரீரம் வேகாமல், என்

னிய மத்தாலே - என் னுடைய ஆக்ஞையினாலே, வேவித்திடுகின்றான் - பக்குவம் செய்கின்றான், (எ-று) (9)

வருணனெனு மகிலசல பதியுமழை வரவுதவு,
மருணனெனு முலகுதிகழ் வதுசெயம லனுமமிர்த,
கிரணனெனு முயிர்மகிழ்வு கெழுமவருள் பவனுமெம,
பரணமென விவரெனது பணிவகைசெய்
தொழுகுமவர். (10)

(இ—ள்) மழை வர வுதவும் - மழையைப் பொழிகின்ற, வருணன் எனும் - வருண னென்னும் தேவதையும், அகில ஜல பதியும் - எல்லா ஜலங்களுக்கும் தலைவனும், உலகு திகழ்வது செய் - எல்லா உலகங்களையும் விளக்குகின்ற, அருண னெனும் அமலனும் - சூரிய னென்னும் நின்மல மாகிய தேவதையும், அமிர்த கிரணன் எனும் - குளிர்ச்சி பொருந்திய கிரணங்களை உடைய, உயிர் மகிழ்வு - ஜீவர்கள் சந்தோஷத்தை யடையும்படி, கெழும - பூரண மாக, அருள்பவனும் - கொடுப்பவனாகிய சந்திரனும், எம பரணம் என - எமனது தொழிலைப் போல, இவர் எனது - ஆகிய இவர்கள் என் னுடைய, பணி வகை செய்து - ஏவலைச் செய்து, ஒழுகு மவர் - நடப்பவ ராவார்கள். (எ—று) (10)

மிகப்ப யஞ்செயும ரக்கர் கோனிருதி
யாகும் விண்ணவனும் வெவ்விதா,
மகப்ப யன்றனைய ளிக்கு மந்தகனு
மாட காதியள வற்றதோர்.
சுகப்ப யன்செய்யள கேச னுமெனது
தோழ னுஞ்சுருதி சொன்னவா,



மகப்ப யன்றனைய ளிக்கு மிந்திரனு
மற்றெ னேவல்செய் து வாழ்வரால். (11)

(இ—ள்) மிக பயம் செயும் - மிகுதி யான பீதியை உண்டாக்குகின்ற அரக்கர் கோன் - இராக்கதர் தலைவனாகிய, நிருதி ஆகும் - நிருதி திக்கில் வசிக்கப்பட்ட, விண்ணவனும் - தேவனும், வெவ்விது ஆம் - கொடி தாகிய, அகப் பயன்தனை அளிக்கும் - பாபத்திற்குத் தக்க துக்கத்தினைக் கொடுக்கும், அந்தகனும் - இயமனும், அளவு அற்றது - அளவிட முடியாத, ஓர் - ஒப் பற்ற, ஆடக ஆதி - பொன் முதலிய வாகிய, சுகப் பயன் - சுக ரூபப் பிரயோசனத்தை, செய் - கொடுக்கின்ற, அளகேசன் ஆம் - குபேரனாகிய எனது தோழனும் - என் னுடைய நண்பனும், சுருதி சொன்ன ஆறு - வேதத்தில் கூறிய பிரகாரம், மகப் பயன்றனை அளிக்கும் - யாகத்திற்த தக்க பிரயோசனத்தைக் கொடுக்கின்ற, இந்திரனும் - இந்திரனும், என் ஏவல் செய்து - என்னா லேவப்பட்ட தொழிலைச் செய்து, வாழ்வர் - வசிப்பார்கள், (எ—று) ஆல் - மற்று - அசை. 'மகப் பயன்தனை', 'அகப்பயன்தனை', என்பவற்றில் தன் - தன் அசை. (11)

பொலலாத பேய்களுக்கும் பூதங்க ளனைத்தினுக்கு,
மல்லாத கணங்களுக்கு மதிபதியா கியவீச,
னல்லார்க்கு நன்மைபெற நல்குவது நாடொருமென்,
சொல்லாலே மற்றவர்க்குச் சொல்லவேண் டுவ
துண்டோ. (12)

(இ—ள்) பொல்லாத பேய்களுக்கும்-துஷ்ட பிசாசுகளுக்கும், பூதங்கள் அனைத்தினுக்கும் - எல்லாப் பூதங்

களுக்கும், அல்லாத - (இவை) ஒழிந்த, கணங்களுக்கும் - (பூதக்) கூட்டங்களுக்கும், அதிபதி ஆகிய - தலைவ ணுகிய, ஈசன் - ஈசாந திக்கி லுள்ள ஈசாநன், நாள் தொறும் - சதா காலமும், நல்லார்க்கு - சாதுக்களுக்கு, நன்மை பெற - சுகம் உண்டாகும்படி, நல்குவதும் - கொடுப்பதுவும், என் சொல்லாலே - என் னுடைய ஏவுத லினுலேயே ஆம், மற்றவர்க்கு - ஏனையோர்க்கு, சொல்ல வேண்டுவது உண்டோ - சொல்லவேண்டுவது என்ன இருக்கிறது. (எ—று) (12)

அருத்திசெய் தங்கிரா வடிவ ணங்குவோ,
னுருத்திர கணத்திலுத தமனி யோகிகள்,
வருத்தம தொழித்துவாழ் வாம தேவனுந்,
திருத்தமா யென்னுடை யேவல் செய்குவார். (13)

(இ—ள்) அருத்தி செய்து - பக்தி பண்ணி, அங்கிரா - அங்கிரா ரிஷியி னுடைய, அடி வணங்குவோன் - திரு வடியை நமஸ்கரிப்பவ னையும், உருத்திர கணத்தில் - ருத்திர கூட்டங்களில், உத்தமன் - உத்தம னுகியும், யோகிகள் வருத்தமது - யோகிகளது துன்பங்களை, ஒழித்து - நிவிர்த்தித்து, வாழ் - வாழ்கின்றவரு மாகிய, வாம தேவ னும் - வாம தேவ ரிஷியும், திருத்த மாய் - செவ்வை யாக, என் னுடைய ஏவல் - யான் ஆக்ஞாபித்த பணி விடையினை, செய்குவார் - செய்வார். (எ—று) 'வருத்த மது, என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி, (13)

தக்ககரு மங்களிலே நடத்துவதுஞ் சார்பிலர்பால்,
விக்கமளித் திடுவதுவும் விநாயகனென் னேவலினுற்,



செக்கநிறத் தமரர்கள்சே நாபதியாய் ஞானத்தான்,
முக்கியமா மறுமுகனென் னேவலையே முயல்
கின்றுன். (14)

(இ—ள்) தக்க கருமங்களிலே - நேர்மையான கரு மங்களில், நடத்துவதும் - இருந்து நடத்தி வைப்பதும், சார்பு இலர்பால் - பக்தி இல்லாதவர்கட்கு, விநாயகன் - விநாயகக் கடவுள், விக்கம் - விக்கிநங்களை, அளித்திடு வதும் - செய்வதும், என் ஏவலினுல் - (பரமேசுர னுகிய) எனது ஆக்ஞையினுலே யாம், செக்க நிறத்து - சிவந்த நிற முடைய, அமரர்கள் - தேவர்களது, சேனா பதி ஆய் - சேனைகட்குத் தலைவ னுயும், ஞானத்தால் - ஞானத்தினுலே, முக்கிய மாம் - பிரதாந மாக வுள்ள, அறுமுகன் - ஷண் முகக் கடவுள், என் ஏவலையே - நான் ஆக்ஞாபித்த பணி விடைகளிலேயே, முயலகின்றுன் - முயற்சி செய்கின் றுன். (எ—று) "விக்கிநம்" என்பது, 'விக்கம்' எனக் குறு கிற்று. (14)

மதியி னுன்மிகு மரீசியே
யாதியாய் மன்னுயி ரனைத்திற்கும்,
பதிக ளாகிய பதின்மரு
முலகெலாம் படைப்பதென் பணியாலே.
திதிசெய் நாரணன் றேவியா
கியதிரு செல்வநல் குவதென் றன்,
விதியி னுலென் றன்பணியினுற்
கலைமகள் விமலவாக் களிக்கின்ருள். (15)

(இ—ள்) மதியினுல் மிகும் - புத்தியில் சிரேஷ்ட முடைய, மரீசியே ஆதியாய் - மரீசி முதலிய, மன் உயிர்

அனைத்திற்கும் - நிலைபெற்ற பிரஜைகள் யாவருக்கும், பதிகள் ஆகிய -தலைவர்களாகிய, பதின்மரும் - பத்து பெயர்களும், உலகு எலாம் படைப்பது - உலகங்களைச் சிருட்டிப்பது, என் பணியாலே - என் னுடைய ஆக்ஞையினுலேயே ஆகும், திதி செய் நாரணன் - இரக்ஷித்தலை செய்கின்ற மகா விஷ்ணுவினது, தேவி யாகிய - மனைவி யாகிய, திரு - மகா லக்ஷுமி, செல்வ நல்குவதும் - ஐஸ்வரியத்தைக் கொடுப்பதும், என் விதியினுல் - என் னுடைய ஆக்ஞையினுலேயாம், என் பணியினுல் – என் னுடைய ஆக்ஞையினுல், கலை மகள் - சரசுவதி தேவி யானவள், விமல - நின்மல மான, வாக்கு அளிக்கின்ருள் - வாக் சாதுரியத்தினைக் கொடுக்கின்ருள். (எ-று) தன்-தன்-அசை (15)

வேமெரி நரகி னுள்ளே
வீழ்பவா தம்மை யந்தத்,
தீமையி னின்று சாவித்
திரியெடுப் பதுவு மென்னு,
லோமெனும் பொருளை ஞான
யோகியர்க் குமையாம் விஞ்சை,
யாமக ளருளு மாறு
மலகிலென் னருளி னுலே. (16)

(இ—ள்) வேம்-அதி வெப்பத்தோடு கூடிய, எரி நரகினுள்ளே - ஜ்வலிக்கின்ற (ரௌரவாதி) நரகத்தினுள், வீழ்பவர் தம்மை - விழுபவர்களை, அந்தத் தீமையினின்று - அந்த துக்கத்தி லிருந்தும், சாவித்திரி - சாவித்திரி தேவி யானவள், எடுப்பதுவும் – காப்பாற்றுவதும், என்னுல் - எனது ஆக்ஞையினுலேயே ஆம், ஞான யோகியர்க்கு - ஞானயோகிகளுக்கு, ஓம் எனும் பொருளை – பிரணவ அக்ஷரத்தினை, உமை ஆம் - உமா தேவி யாகிய, விஞ்சை ஆம் மகள் - வித்தியா தேவி யானவள், அருளும் ஆறும் - அநுக்கிரகஞ் செய்வதுவும், அலகு இல் - அளவு இறந்த, என் அருளினுல்-என் னுடைய ஆக்ஞையினுலேயே யாம். (எ-று) "வீழ்பவர் தம்மை" என்பதில், தம்ஏ–அசை. 16

படவர வரசென் னேவலா லுலகம்
பரிப்பதும் பரவையு ணின்று,
வடவையுண் பதுமென் னேவலாற் பதினன்
மநுக்கள்பா லநமுமற் றென்னுற்.
சுடருடை யருக்க ருருத்திரர் வசுக்க
டொன்மருத் துக்களச் சுநிக,
டிடமுற மற்றுந் தேவர்க டத்தந்
தேவையென் னேவலாற செய்வார். (17)

(இ—ள்) பட வர அரசு-படத்தினை மேன்மை யாக உடைய ஆதிசேஷ ஞகிய அரசன், உலகம் பரிப்பதும் - உலகத்தை தாங்கி நிற்பதுவும், என் ஏவலால் - என் னுடைய ஆக்ஞையினுலேயே ஆகும், வடவை - வடவா முகாக்நி யானது, பரவையுள் நின்று - சமுத்திரத்திற்குள் இருந்து, உண்பதும் - (ஜலத்தினை) வற்றச் செய்வதும், என் ஏவலால் - என் னுடைய ஆக்ஞையினுலேயே ஆகும், பதின் நான் மநுக்கள் - ஒரு பிரம்மாவினது ஒரு நாளில் வந்து உலகத்தை அரசாக்ஷி செய்து போகின்ற பதி னுன்கு மநுக்களது, பாலநமும் - பரிபாலிப்பதுவும், என்னுல் – என் னுடைய ஆக்ஞையினுலேயே ஆம், சுடர் உடை – கிரணங்களை உடைய, அருக்கர் - பனி ரெண்டு சூரியர்களும், உருத்திரர் - ஏகா தச ருத்திரர்களும், வசுக்கள் -

அஷ்ட வசுக்களும், தொன் மருத்துக்கள் - பழமையான வாயு தேவதைகளும், அச்சுவிநி - அசுவிநி தேவர்களும், திடம் உற - வலிமை பொருந்திய, மற்றும் தேவர்கள் - வேறு தேவதைகளும், தம் தம் தேவை - தத் தமக்கு வேண்டிய தேவைகளை, என் ஏவலால் - என்னுடைய ஆக்ஞையினாலேயே, செய்வார் - செய்வார்கள். (எ—று) மற்று - அசை. (17)

பொருவில் கின்னரர் கருடர்கிம் புருடர்சா ரணர்கந்,
தருவர் சாத்தியர் சித்தர்விச் சாதர ரியக்கர்,
வெருவ வந்திடு மரக்கர்வே தாளபூ தங்க,
ளொருவ ரிங்கொழி யாமனுன் விதித்தவா றுறை
வார். (18)

(இ—ள்) பொருவில் - சமான ரகித மான, கிந்நரர் - கிந்நரர்கள், கருடர்- (பதினென் கணத்து ளொருவ ராகிய) கருடர், கிம்புருடர் - கிம்புருஷர்கள், சாரணர் - சாரணர் கள், கந்தருவர் - கந்தருவர்கள், சாத்தியர் - சாத்தியர்கள், சித்தர் - சித்தர்கள், விச்சாதரர் - வித்தியாதரர்கள், இயக் கர் - இயக்ஷசுக்கள், வெருவ வந்திடும் - பயப்படும்படி வருகின்ற, அரக்கர் - இராக்கதர்கள், வேதாள பூதங்கள் - வேதாளங்கள் பூதங்கள், இங்கு - இவ் விடத்து, ஒருவர் ஒழியாமல் - ஒருவர் நீங்காமல், நான் விதித்த ஆறு - நான் ஆக்ஞாபித்த பிரகாரம், உறைவார் - இருப்பார்கள், (எ—று) "வித்தியாதரர்" என்பது, "விச்சாதரர்" என வந் தது. (18)

நிகழ்ந்திடும் கலைகள் காட்டைக ணிமிட
நீதிசெய் சாந்திநாண் முகூர்த்தம்.



பகர்ந்திடு மிருது வாண்டுமா தங்கள்
பக்கங்க ளென்விதிப் படியே,
யுகங்களு மநுக்கட் குள்ளவெல் லைகளு
முரைத்திடு பராபரார்த் தங்க,
ணிகழ்ந்திடுங் கால பேதமியா வையுநா
னியமித்த படியிலே நிலையாம். (19)

(இ—ள்) நிகழ்ந்திடும் - உண்டாகாநின்ற, கலைகள்- கலை (மினிட்டுக்)களும், காட்டைகள் - காட்டைகளும், நிமிடம் - நிமிடங்களும், நீதி செய் சாந்தி - கிரமமா யுள்ள பகலும், நாள் - (பக லிர வாகிய ஒரு) நாளும், முகூர்த்தம்- முகூர்த்தமும் (முன்றே முக்கால் நாழிகை), பகர்ந்திடும் இருது - சொல்லாநின்ற (ஆறு) இருதுக்களும், ஆண்டு - பிரபவ முதல் அக்ஷய பரியந்த மான அறுபது வருஷங் களும், மாதங்கள் - சித்திரை முதல் பங்குனி பரியந்த மான பனி ரெண்டு மாதங்களும், பக்கங்கள் - (கிருஷ்ண பக்ஷம் சுக்கில) பக்ஷங்களும், என் விதிப்படியே - என் ஆக்ஞைப் பிரகாரமே (நடக்கும்), யுகங்களும் -கிரேதா யுகம் முதலிய வைகளும், மநுக்கட்கு உள்ள - மநுக்கட்கு உள்ளன வான, எல்லைகளும் - அளவுகளும், உரைத்திடு - சொல்லா நின்ற, பர அபர அர்த்தங்கள் - பிரமாவினது ஐம்பது வருஷ மாகிய கர்ப்பமும், நிகழ்ந்திடும் - விளங்காநின்ற, கால பேதம் - கால வேற்றுமைகள், யாவையும் -எல்லாம், நான் நியமித்தபடியிலே - என்னால் நியமித்த பிரகாரமே, நிலை யாம் - நிலை யாக நடக்கும். (எ—று( (19)

உற்பவச ராசரவி யோநியொரு நாலும்,
பற்பலவ தாகமொழி பாதலம லைத்து,

மெப்புவ மும்பிரம ரண்டமவை யாவு,
மிப்படியி ருக்குமது வென்றனிய மத்தால். (20)

(இ—ள்) உத்பவ சர - உத்பவிக்காநின்ற சரவஸ்த் துக்களும். அசர - அசர வஸ்த்துக்களு மாகிய, ஒரு - ஒப் பற்ற, நாலு யோநியும் - சராயுஜம் அண்டஜம் சுவேதஜம் உத்பிஜம் ஆகிய நான்கு யோநியும், பல் பலவது ஆக மொழி - அநேக பிரகார மாகச் சொல்லப்பட்ட, பாதலம் அனைத்தும் - கீழ் ஏழ் உலகங் களும், எப் புவநமும் - மேல் ஏ ழுலகங்களும், பிரமர் அண்டம் - பிரமாண்டங்களும், அவை யாவும் - அவை அனைத்தும், என் நியமத்தால் - என் னுடைய ஆக்ஞையி னுல், இப்படி இருக்கும் - (நான் நியமித்த) பிரகாரமே யிருக்கும். (எ—று) 'பலவது', இருக்குமது', என்பவற்றில், அது பகுதிப் பொருள் விகுதி-தன்-அசை. (20)

அந்நிய மின்றி யென்னிலே தோன்று
மநந்தபிந் நாந்மக மாயென்,
றன்னிடை நிகழும் பிரமரண் டங்க
டனக்கொரு முடிவுதா னிலதான்,
முன்னிறந் தனவு முடிவிலை யென்பான்
முளைத்திடப் படுவதப் படியே,
யென்னிய மத்தாற் தோற்றமு நிலையு
மிறுதியும் பெறுவதிங் கெல்லாம். (21)

(இ—ள்) என்னிலே - என்னில், அந்நியம் இன்றி - வேருக இல்லாமல், என்னிலே - என்னிடத்திலே, தோன் றும் - உண்டாகின்ற, அநந்த பிந்ந ஆந்மகம் ஆய் - அநந்த வேறுபா டுடைய, பிரமர் அண்டங்கள் - பிரமாண்



டங்கள், என்னிடை நிகழும் - என்னிடத்திலேயே விளங் கும், தனக்கு ஒரு முடிவு இலதால் - அவற்றிற்கு ஒரு முடிவும் இல்லாமையால், முன் இறந்தனவும் - முன்னே நசித்தனவும், முடிவு இலை - அள வில்லை, என்பால் - என் னிடத்து, முளைத்திடப்படுவது - தோன்றப்படுவதும். அப் படியே - அது போலவே யாகும், என் நியமத்தால் - என் னுடைய நியமநத்தினுல், இங்கு எல்லாம் - இவ் விடத்து யாவும், தோற்றமும் - உண்டாவதையும், நிலையும் - ஸ்திதி பெற்று இருப்பதையும், இறுதியும் - அழிவதை யும், பெறுவது-(அது போலவே) அடைவ தாம். (எ—று) தான் தன் - அசை, (21)

பூத மைந்தி னெடுமநமும் புத்தி மமதை பூதாதி,
யாதிப் பகுதி யென்னியமத் தாலே யென்பா
லாயிருக்கு,
மோதி வந்த வனைத்திற்கு மியோநி யாகி யுளமாயை,
பேதஞ் செய்வ தென்னேவ லாலே யன்றிப்
பிறிதில்லை. (22)

(இ—ள்) பூதம் ஐந்தினெடு - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னப்பட்ட பஞ்ச பூதங்களோடு, மந மும்-மநதும், புத்தி-புத்தியும், மமதை - (மமதா) அகங்கா ரமும், பூத ஆதி - பூதத்திற்கு ஆதி யான மக தத்துவமும், ஆதிப் பகுதி - (இவைகட்கு) முன்ன ருண்டான பிரகிருதி யும், என் நியமத்தாலே - என் னுடைய ஆக்ஞையினுலே, என்பால் ஆய் இருக்கும் - என்னிடத்திலேயே இருக்கும், ஓதி வந்த அனைத்திற்கும்-கூறி வந்த யாவற்றிற்கும், யோநி யாகி உள மாயை - காரணமா யிருக்கப்பட்ட மாயை

யானது, பேதம் செய்வது - வேறு படுத்துவது, என் ஏவலால் அன்றி - என் னுடைய ஆக்ஞையினுலே யல்லாமல், பிறிது இல்லை - (எனக்கு) வே ருக இல்லை. (எ-று) ஏ-அசை. (22)

ஆகமெடுத் தவர்க்கெல்லா மதிபதியா மாங்மாவாம்,
போகநுகர் பரம்புருட னென்னேவல் புரிகின்ருன்,
மோகமெலா மறமாற்றி முடிவில்பர மாநந்த,
ஏகஎனைத் தரும்விஞ்சை யென்னருளா லியங்குவாள் (23)

(இ—ள்) ஆகம் - சரீரம், எடுத்தவர்க்கு எல்லாம் - உண்டான யாவருக்கும், அதிபதி ஆம் - தலைவ னுகிய, ஆங்மா ஆம் - ஆங்மா வாக உள்ள, போகம் நுகர் - போகங்களைப் புசிக்கின்ற, பரம் புருடன் - மே லான புருஷன், என் ஏவல் - எனது ஆக்ஞையினை, புரிகின்ருன் - செய்கின்ருன், மோகம் எலாம் - அஞ்ஞானம் யாவற்றையும், அற மாற்றி - அத்தியந்தம் கெடுத்து, முடிவு இல் - நித்திய மா யுள்ள, பரம ஆநந்த - பிரமாநந்த, ஏக எனை - அத்வைத ரூப னுன என்னை, தரும் - உபதேசிக்கின்ற, விஞ்சை - வித்தியா தேவி யானவள், என் அருளால் - என் னுடைய கிருபையினுல், இயங்குவாள் - விளங்கிக் கொண்டிருக்கின்ருள். (எ—று) (23)

பலவுரை செய்குவதென் பலபர சத்தியினு,
லுலகமெ லாமெனிலே யொழுகவெ னுள்ளொழியத்,
துலகுப ரப்பிரம மாகிய சோதியதா,
யிலகுவ னுனெனில்வே றில்லையோ ரங்நியமே. (24)



(இ—ள்) பல - அநேக பிரகார மாக. உரை செய்குவது - சொல்லப்படுவதால், என் - யாது பிரயோஜநம், பல பர சத்தியினுல் - அநேக பரா சத்தியினுல், உலகம் எலாம் - சகல சகத்தும், எனிலே - என் னிடத்திலேயே, ஒழுக - உண்டாகின்றன, துலகு - விளங்காநின்ற, பரப்பிரமம் ஆகிய - பரப் பிரம சொரூப மான, சோதி அது ஆய் - பிரகாச மாய், நான் எனில் - நான் என்னிடத்திலேயே, இலகுவன் - விளங்கிக்கொண்டிருப்பேன், என் உள் ஒழிய - என் னுள்ளேயே தவிர, ஓர் அங்நியம் - ஓர் அங்நியமும். வேறு இல்லை , விலக்ஷண மாக இல்லை யாம், (எ-று) ஏ அசை, (24)

தொல்லை யுள்ளவென் சோதியைச் சுத்தமா,
நல்ல வன்பொடு நானுமக் கோதினே,
னெல்லை யுண்மையு ணர்ந்தவர்க் குற்பவ,
மில்லை யில்லையென் றீசனி யம்பினுன், (25)

(இ—ள்) தொல்லை உள்ள - அநாதி யாக உள்ள, என் சோதியை - என் னுடைய பிரகாச சொருபத்தை, சுத்த மாம் - பரிசுத்த மாக, நல்ல அன்பொடும் - மிகுந்த பிரியத்தோடும், நான் - (பரமேசுர னுகிய) யான், உமக்கு - உங்களுக்கு, ஓதினேன் - உபதேசித்தேன், ஒல்லை - அநாதி யான. உண்மை - உண்மையினை, உணர்ந்தவர்க்கு - அறிந்தவர்களுக்கு. உற்பவம் - பிறப் பானது. இல்லை இல்லை - இல்லவே இல்லை, என்று - என, ஈசன் - ஈசுரன், இயம்பினுன் - (சௌநகாதி ரிஷிகளுக்கு) உபதேசித்தான். (எ—று) (25)

6-வது சிவ சத்தியின் செய லுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் (186)

## 7. தத்துவ நிசம் விபூதி அத்தியாயம்.

அநிய மானதற் றறிகு வார்கள்பின்,
செநியு ருதவா திகழுந் தேவனுந,
தனிய னுனவென் றன்மை யோதநான்.
முநிவர் கேண்மெனு முதல்வ ஞேதுவான். (1)

(இ—ள்) அநியம்- ஆனது அற்று, (தனக்கு) அந்நிய மாக உள்ள வேறுபாடுகள் யாவும் நீங்கி, அறிகுவார்கள்- (அபேத மாய்) உணர்ந்தவர்கள், பின் செநி உருத ஆறு - மீண்டும் ஜநநத்தை அடையாதபடி, திகழும் தேவ னும் - விளங்குகின்ற கடவுளாகியும், தனியன் ஆன - கேவல ஸ்வ ரூப மாக உள்ள, என் தன்மை - என் னுடைய பெரு மையை, நான் ஓத - நான் சொல்ல, முநிவர்- (சௌநகாதி) ரிஷிகளே, கேண்ம் எனு - கேளுங்கள் என்று, முதல்வன், பரமேசுரன், ஓதுவான் - சொல்ல ஆரம்பித்தார். (எ-று) 'கேளும்'-என்பது, உகரம் தொக்கி, 'ளகரம்' ணகர மாகத் திரிந்தது செய்யுள் விகாரம். (1)

சிரந்தந மாய்மிகத் திரமாய்ச் சிற்சுகந்,
தரந்தனு ருவாயவி கார மாய்ச்சதா,
நிரந்தர மாகிநிட் களமாய் நித்தமாய்,
பரம்பர மானதென் பழைய தாமமால். (2)

(இ—ள்) மிக சிரந்தநம் ஆய் - மிகப் பழைமை ஆகி, திரம் ஆய் - நிலை ஆகி, சித் சுகம் - சித் சுகத்தை, தரம் தன் உருவு ஆய் - தருகின்ற தன் னுடைய சொருப மாய், சதா அவிகாரம் ஆய் - எப் பொழுதும் விகாரம் அற்ற தாய், நிரந்தரம் ஆகி - இடை யீடின்றிய



தாய், நிட்களம் ஆய் - களங்க மற்ற தாய், நித்தம் ஆய் - நித்திய மாய், பரம் பரம் ஆனது- பரத்துக் கெல்லாம் பரமா யுள்ளது, என் பழைய தாமம்- என் னுடைய பழைய ஸ்தாந மாம். (எ—று) ஆல்-அசை 2

சங்கரனு னுருத்திரரி லியோகிகளிற் சம்புநான்,
பங்கமில்சீர் வசுக்கடமிற் பாவகனு கின்றேனுன்,
மங்கையரின் மலைமகளுன் வலியவரில் வாயுநான்,
சிங்கமிரு கங்களினுன் றிநகரரில் விண்டுவுநான். (3)

(இ —ள்) உருத்திரரில் - (ஏகா தச)ருத்திரர்களில், சங் கரன் நான்-சங்கரனென்னும் உருத்திரன் நானு கின்றேன், யோகிகளில் - யோகிகளிலே, சம்பு நான் - சம்பு யோகி நா னுகின்றேன், பங்கமில் சீர் - குற்ற மின்றிய சிறப்புப் பொருந்திய, வசுக்கள் தமில் - (அஷ்ட) வசுக்களில், பாவ கன் - அக்நி என்னும் வசு, நா னுகின்றேன் - நான் ஆகின் றேன், மங்கையரில் - ஸ்திரிகளில், மலை மகள் நான் - இமோத்பர்வத ராஜன் புத்திரி நான் ஆகின்றேன், வலிய வரில் - பலாட்டியர்களில், வாயுவும் நான் - வாயுவும் நா னுகின்றேன், மிருகங்களில் - விலங்குகளிலே, சிங்கம் நான் - சிங்க மாகிய மிருகம் நா னுகின்றேன், திநகரரில் - (பனி ரெண்டு) சூரியர்களில், விண்டுவும் நான் - விஷ்ணு என்னும் சூரியன் நா னுகின்றேன் (எ—று) தம் அசை. 3

இந்திரனு னிமையவரி லியக்கரிலவச் சிரவணநான்,
சந்திரனுன் ருரகையில் விரதத்திற் சத்தியநா,
னெந்திரத்தில வில்லுநா னிலங்கியசா வித்திரியா,
மந்திரந 'ன் மந்திரத்தின் மாதவரில் வசிட்டநான். (4)

(இ—ள்) இமையவரில் - தேவர்களில், இந்திரன் நான் - தேவேந்திரன் நா னுகின்றேன், இயக்கரில் - இயக்ஷசுக்களில், வச்சிரவணன் நான் - வச்சிரவண னென்னும் இயக்ஷசு நா னுகின்றேன், தாரகையில்- நக்ஷத்திரங்களில், சந்திரன் நான் - சந்திர நக்ஷத்திரம் நா னுகின்றேன், விரதத்தில் - விரதங்களில், சத்தியம் நான் - சத்திய விரதம் நா னுகின்றேன், எந்திரத்தில் - எந்திரங்களிலே, வில்லு நான்- வில் லாகிய எந்திரமும் நா னுகின்றேன், மந்திரத்தில்—மந்திரங்களில், இலங்கிய - விளங்காநின்ற, சாவித்திரி ஆம் - சாவித்திரி ஆகிய, மந்திரம் நான் - மந்திரம் நா னுகின்றேன், மா தவரில் - தவ சிரேஷ்டர்களில், வசிட்டன் நான் - வசிட்டன் நான் ஆகின்றேன். (எ—று) 'வில்லு' உ-சாரியை, (4)

ஞானமதி லென்னுடைய ஞானநா னன்றுன,
யானையயி ராவதநா னுச்சிரமத் தில்லறநான்,
கானமுறு பறவைகளிற் கருடனுன் பதியதனி,
னீனமிலா முத்திநா னிராக்கதரி னிருதிநான். (5)

(இ—ள்) ஞானம் அதில் - ஞானத்தில், என் னுடைய- என் னுடைய, ஞானம் நான் - ஞானம் நா னுகின்றேன், நன்று ஆன - சிரேஷ்ட மான; யானை - யானைகளிலே, ஐராவதம் நான் - ஐராவத மாகிய யானை நா னுகின்றேன், ஆச்சிரமத்து - ஆச்சிரமங்களிலே. இல் லறம் நான் - இல் லற ஆச்சிரமம் நா னுகின்றேன், கானம் உறு - காட்டில் பொருந்தி யுள்ள, பறவைகளில் - பக்ஷிகளில், கருடன் நான் - கருடப் பக்ஷி நா னுகின்றேன், கதியதனில் - (அடையத் தக்க) கதிகளில், ஈனம் இலா -உயர்வு பொருந்திய, முத்தி நான் - மோக்ஷம் நா னுகின்றேன், இராக்கதரில் - இராக்ஷதர்களில், நிருதி நான் - நிருதி நா னுகின்றேன். (எ—று) 'ஞானமது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. 'கதியதன்' என்பதில், 'அது, அன்' பகுதிப் பொருள் விகுதி சாரியை. (5)



எண்ணுமதிற் காலநா னெல்லையிலா மாயைபல,
பண்ணுமவர் களிலரிநான் பாசத்தின் மாயையுநான்,
புண்ணியமாந் தீவுகளிற் புட்கரநான் பூதத்தில்,
விண்ணுநான் றத்துவத்தின் மிருத்தியுநா
கின்றேனுன். (6)

(இ—ள்) எண்ணு மதில் - எண்ணிக்கைகளிலே, காலம் நான் - கால மாகிய எண்ணிக்கை நா னுகின்றேன், எல்லை இலா - அளவிட முடியாத, பல மாயை பண்ணுமவர்களில் - பல வித மான மாயை செய்பவர்களில், அரி நான் - விஷ்ணு வாகிய மாயாவி நா னுகின்றேன், பாசத்தில் மாயையும் நான் - பந்தத்தில் மாயையும் நா னுகின்றேன், புண்ணிய மாம் தீவுகளில் - புண்ணிய தீவுகளில், புட்கரம் நான் - புட்கரத் தீவு நா னுகின்றேன், பூதத்தில் - பூதங்களிலே, விண் நான் - ஆகாய பூதமும் நா னுகின்றேன், தத்துவத்தில் - தத்துவங்களில். மிருத்தியும் - இயம தத்துவமும், நான் ஆகின்றேன் - நா னுக இருக்கின்றேன். (எ—று) 'எண்ணுமது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. 'விண்ணு' என்பதில் - உ - சாரியை (6)

சித்தர்களிற் கபிலனுன் றேசங்க டனிற்பிரம,
மத்தனு மீசர்களின் மகேசனுன் மறைகடமி,

லுத்தமவோங் காரநா னூர்களில்வா ரணசிநான்,
றத்துவஞா நிகடம்மிற் சதுர்முகனு கின்றேனுன். (7)

(இ—ள்) சித்தர்களில் - சித்தர்களிலே, கபிலன் நான் - கபில சித்தன் நா னுகின்றேன், தேசங்கள்தனில் - தேசங்களிலே, பிரமம் நான் - பிரம தேசம் நா னுகின் றேன், அத்தன் ஆம் - சகலத்தையும் புசித்து இருப்போ னுகிய, ஈசர்களில் - ஈசுரர்களில், மகேசன் நான்-மகேசுரன் நா னுகின்றேன், மறைகள் தமில் - வேதங்களில், உத்தம - உயர் வான, ஓங்காரம் நான் - ஓங்காரம் நா னுகின்றேன், ஊர்களில் - ஊர்களிலே, வாரணசி நான் - காசிச் க்ஷேத்தி ரம் நா னுகின்றேன், தத்துவ ஞாநிகள் தம்மில் - தத்துவ ஞாநிகளிலே, சதுர் முகன் - பிரமாவும், நா னுகின்றேன்- நா னுக இருக்கின்றேன். (எ—று)'தேசங்கள் தனில்' என் பதில்,-தன், 'மறைகள் தமில்' என்பதில், தம், 'ஞாநிகள் தமில்' என்பதில், தம் அசை. (7)

கர்ப்பங் களின்மா கர்ப்பநான்
கணேசர் களிலே விநாயகனுன்,
சர்ப்பங் களிலே யநந்தனுன்
சாயம் பவுநான் மநுக்களிலே,
வெற்புக் களின்மா மேருநான்
விசுவ கர்மா நானெனலாகு,
சிற்பஞ் செய்ய வல்லவரிற்
சேநா பதிக ளிற்குகநான். (8)

(இ—ள்) கர்ப்பங்களில் - கர்ப்பங்களிலே, மா கர்ப் பம் நான்-பெரிய கர்ப்பம் நா னுக இருக்கின்றேன், கணே சர்களில் - கணேசர்களில், விநாயகன் நான் - விநாயகன் நா னுக இருகின்றேன், சர்ப்பங்களில்-சர்ப்பங்களில், அநந் தன் நான்-அநந்த சர்ப்பம் நா னுக இருக்கின்றேன், மநுக் களில் -மநுக்களில், சாயம்புவு நான்-சுவாயம்பு மநு நா னுக இருகின்றேன், வெர்ப்புக்களில்-பர்வதங்களில், மா மேருவு- மஹா மேரு பர்வதம், நான்-நா னுக இருக்கின்றேன், சிற் பம் செய்ய - சிற்பங்களை இயற்ற, வல்லவரில்-சாமர்த்திய முடையவரில், விசுவ கன்மா நான் - விசுவ கர்மா நா னுக இருக்கின்றேன், எனல் ஆம் - என்று சொல்லப்படும், சேநா பதிகளில் - சேனைத் தலைவர்களில், குகன் நான் - சுப்பிரமண்யன் நா னுக இருக்கின்றேன். (எ-று) ஏ-ஏ-ஏ அசை. (8)



ஏவ லார்களிலி ராம னுனசுரர்
தங்க ளிற்பிரக லாதனுன்,
மேவ லாரகல வெல்லும் வீராகளில்
வேளும் வீரபத் திரனுநான்,
ருவில் சாமமறை தன்னி லத்தின்மிகு
சேட்ட சாமமது தானுநா.
னுேவி லாதடைவி லேசு ழன்றிடுமு
கங்க ளிற்கிருத யுகமுநான். (9)

(இ—ள்) ஏவலார்களில் - வில் வித்தையிற் சிறந்த வர்களில், இராமன் நான் - ஸ்ரீ ராமன் நா னுகின்றேன், அசுரர்தங்களில் - அசுரர்களிலே, பிரகலாதன் நான் - பிரக லாதன் நா னுகின்றேன், மேவலார் அகல - பகைவர்கள் புற முதுகு காட்டி ஓடும்படி, வெல்லும் வீரர்களில் - ஜய மடைகின்ற வீரர்களில். வேளும் - சுப்பிரமண்யரும், வீர பத்திரனும் நான் – வீரபத்திரனும் நா னுகின்றேன், தாவு

இல் - அழிவு இல்லாத, சாம மறைதன்னில் - சாம வேதத்தில், அத்தின் மிகு சேட்ட-அதில் மிகுந்த சிரேஷ்ட மான, சாமமது தானும் நான் - சாமமும் நா னுகின்றேன், ஒவு இலா து - இடையருது, அடைவிலே - கிரம மாக, சுழன்றிடும் - சுழன்று வருகின்ற, உகங்களில் - (நான்கு) யுகங்களில், கிருத யுகமும் நான் - கிருத யுகமும் நா னுக இருக்கின்றேன். (எ—று) 'அசுரர் தங்களில்', 'மறை' தன்னில் தம் தன் தான் அசை. 'சாமமது' என்பதில், அது பகுதிப் பொருள் - விகுதி. (9)

தக்க பிரசா பதிதம்மிற்
 றக்க னுனெக் கணங்களினும்,
விக்கி னவிநா யகனுன்ருன்
 வியாத னுன்மெய் முநிவர்களிற்,
ருெக்க சூத்தங் களிற்புருட
 சூத்த மாவே னுன்சோதி,
மிக்க விஞ்சை யாவையினுந்
 தன்னை யறியும் விஞ்சைநான், (10)

(இ—ள்) தக்க பிரசா பதி தம்மில் - தகுதி யான பிரஜா பதிகளில், தக்கன் நான் - தக்ஷப் பிரஜா பதி நா னுகின்றேன், எக் கணங்களினும் - எல்லாக் கணங்களிலும், விக்கிந விநாயகன் நான் - விக்கிந விநாயகன் நா னுகின்றேன், மெய் முநிவர்களில் - உண்மை யான முநிவர்களில், வியாதன் நான் — வியாச மகா முநிவன் நா னுகின்றேன், தொக்க சூ த் த ங் க ளி ல் - தொகுதி யான சூத்தங்களில், புருட சூத்தம் நான் ஆவேன் - புருட சூத்தம் நா னுக இருக்கின்றேன். சோதி மிக்க - பிரகாச மிகுந்த, விஞ்சை யாவையினும் - எல்லா வித்தையிலும், தன்னை



அறியும் - தன்னை (ஆத்மாவை) உணர்கின்ற, விஞ்சை நான் - வித்தை நா னுக இருக்கின்றேன் - (எ—று) 'பிரசா பதி தம் மில்' என்பதில், தம் - தான் - அசை. (10)

ஒன்ன லர்த்தெறு மாயு தங்களி
 லோங்கு வச்சிர மாவனுன்,
பன்னு மெவ்வுல கங்க ளிற்பர
 மேச ரிற்பர மேசனு,
னின்னு மிங்குல கிற்சி றந்தன
 யாவை மற்றவை யென்னதா,
மன்னு சோதியில் வந்து தித்தன
 வென்ன வேமநம் வைம்மினீர் (11)

(இ—ள்) ஒன்னலர் தெறும் -பகைவர்களை வெல்லுகின்ற, ஆயுதங்களில் - ஆயுதங்களிலே, ஓங்கு - சிரேஷ்டமான, வச்சிரம் ஆவன் நான் - வச்சிராயுதம் நா னுக இருக்கின்றேன், எவ் வுலகங்களில் பன்னும் - எல்லா உலகங்களிலும் வழங்கும், பரமேசரில் - பரமேசுரர்களில், பரமேசன் நான் - பரமேசுரன் நா னுகின்றேன், இங்கு உலகில் - இந்த லோகத்தில், இன்னும் சிறந்தன - மேலும் சிறப்புப் பொருந்தி யுள்ளன, யாவை அவை - எவையோ அவைகள், என்னது ஆம் - என் னுடைய தாகிய, மன்னு சோதியில் - நிலை பெற்ற பிரகாச சொரூபத்தில், வந்து உதித்தன - தோன்றி உண்டாயின, என்ன - என்று, நீர் மநம் வைம்மின் - (சௌநகாதி ரிஷிக ளாகிய) நீங்கள் மநதின்கண் சிந்தியுங்கள். (எ—று) மற்று - ஏ அசை. (11)

எந்தப் பிராணி களும்பசுக்க
 ளென்னப் படுமிங் கதிபதியான்,

பந்தப் படுக்கு மென்மாயா
பாச மதனுற் பசுபதியாய்த்,
தொந்திப் பதுவீழ்ப் பதுவாமித்
தொழிலென் விளையாட் டெனையன்றி,
யிந்தப் பசுக்கள் கட்டுனர்க
ளில்லை யவிழ்ப்பார் களுமிலதால். (12)

(இ—ள்) எந்தப் பிராணிகளும் - எல்லாப் பிராணிகளும், பசுக்கள் என்னப்படும் - பசுக்கள் என்று சொல்லப்படும், அதிபதி யான் - (இவர்களுக்கு) தலைவன் நான், பந்தப் படுக்கும் - பந்தத்தினை உண்டாக்கும், என் மாயா பாச மதனுல் - என் னுடைய மாயை யாகிய பாசத்தினுல், பசு பதி யாய் - பசு பதி யாக, தொந்திப்பது - பந்தப்படுத்துவதும், வீழ்ப்பது ஆம் - பந்தத்தினின்று விடுபடச் செய்வதும் ஆம், இத் தொழில் - இந்த கிருத்தியம், என் விளையாட்டு - என் னுடைய லீலை யாகும், எனை அன்றி - என்னைத் தவிர, இந்தப் பசுக்கள் - இந்தப் பசுக்களை, கட்டுனர்க ளில்லை - பந்தப்படுத்துபவர்களும் இல்லை, அவிழ்ப்பார்களும் இலது - விடுவிப்பவர்களும் இல்லை. (எ—று) ‘பாசமது’ என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. இங்கு-ஆல் - அசை. (12)

ஊறதாம் போகமே யூட்டி விட்டிடப்,
பேறதா யுயிர்களைப் பிணித்த மாயைதன்,
கூறதாங் கணங்களாற் கூறப் பட்டநா,
லாறதாம் பாசம தறியக் கூறுவாம். (13)

(இ—ள்) ஊறது ஆம் போகமே - நிக்கிருஷ்டமான போகங்களை, ஊட்டி விட்டிட - புசிக்கும்படி செய்யும், பேறது ஆய் - பிரயோஜந மாகி, உயிர்களைப் பிணித்த - ஜீவர்களை பந்தித்த, மாயை தன் கூறது ஆம் - மாயையின் பாகுபா டாகிய, கணங்களால் - கூட்டங்களினுல், கூறப்பட்ட - சொல்லப்பட்ட, நால் ஆறது ஆம் - இரு பத்து நான் காகிய, பாச மது - பாசத்தினை, அறியக் கூறு வாம் - (உங்களுக்கு) தெரியும்படி யாகச் சொல்லுவாம். (எ—று) தன் ‘கூறது’ அது, ஆறது அது, பாசமது, அது, அசை, பகுதிப் பொருள் விகுதி. (13)

மாநம்புத்தி மமத்துவம்வான் வளிதீநீர் மண்ணெட்டு,
முனையுற்ற பகுதிகளா மூக்குவிழி செவிநாமெய்,
பனவுற்ற வாய்கைகால் பாயுருபத் தஞ்சத்தந்,
தனுவுற்ற வுருச்சுவைநாற் றங்களெனுந் தத்துவமும். (14)

(இ—ள்) மாநம் புத்தி மமத்துவம் - மாநமும் புத்தியும் (மமதா) அகங்காரமும், வான் வளி தீ நீர் மண் - ஆகாயமும் வாயுவும் அக்கியும் அப்புவும், பிருதிவியும், எட்டும் - ஆகிய எட்டும், முனை உற்ற - முன்னர் பொருந்திய, பகுதிகள் ஆம் - பிரகிருதிகள் ஆகும், மூக்கு விழி செவி நா மெய் - கிராணேந்திரியமும், சக்ஷுரிந்திரியமும், சுரோத்ரேந்திரியமும், ஜிஹ்வேந்திரியமும், துவக்கிந்திரியமும், பன வுற்ற - சொல்லாநின்ற, வாய் கை கால் - வாக்கும், பாணியும், பாதமும், பாயுரு உபத்தம் - பாயுருவும், உபஸ்த்தமும், சத்தம் - சத்தமும், தநு உற்றல் - சரீரத்தில் பொருந்தி யுள்ள பரிசமும், உரு சுவை நாற்றங்கள் - ரூபமும் ரசமும் கந்தமும், எனும் தத்துவமும் - என்று சொல்லப்பட்ட இரு பத்து மூன்று தத்துவமும். (எ—று) உறல், உற்றல் என இரட்டித்தது. (14)

ஆகவிவை யிருபத்து மூன்றிவற்றுக் காதிதா,
ஞகியநா தியதாகி யகிலத்தின் காரணமாய்,
மோகசமு சயகுணமாய் முதற்பகுதி தெரியாமை,
யேகமுமாந் தத்துவங்க ளிருபதுட னீரிரண்டாம். (15)

(இ—ள்) ஆக இவை இரு பத்து மூன்று - முன்னர்க் கூறிய அஷ்டப் பிரகிருதிகள் ஞானேந்திரிய கர்மேந்திரியம் பஞ்ச பூதங்கள் ஆகிய இரு பத்து மூன்றும், இவற்றுக்கு ஆதி தா ஞகி - இவைகளுக்கு முதன்மையாய், அநாதியது ஆகி - அநாதி யாக உள்ள, அகிலத்தின் காரண மாய்-எல்லாவற்றிற்கும் ஏது வாய், மோக சமுசய குண மாய் - மோகமும் சமுசயமு மாகிய குண முடையதாய், முதல் பகுதி தெரியாமை - முதல் பிரகிருதி அவ்வியத்தமும், ஏகமும் ஆம் -'ஒன்ருேடு, தத்துவங்கள் - தத்துவங்கள், இரு பதுடன் - இரு பதோடு, ஈர் இரண்டு ஆம் - நான்கும் ஆகி ஆக தத்துவமும் இரு பத்து நான்காகும். (எ—று) தான் அசை. (15)

ஒத்தமுக் குணங்களாம் பகுதி யுத்தமஞ்,
சத்துவ ஞானமாந் தமமஞ் ஞானமா,
மத்திமங் கலப்பதா மற்றிம் மூன்றையும்,
புத்தியின் விகாரமே புலப்ப டுத்துமால். (16)

(இ—ள்) முக் குணங்கள் ஒத்த-முக் குணங்களையும் சம மாகப் பொருந்தி உள்ளது, பகுதி யாம் - பிரகிருதியாம், உத்தமம் சத்துவம் - (அதனது) சுத்த சத்தவ குணமானது, ஞானம் ஆம் - ஞான ரூப மாம், தமம் - தமோ குண மானது, அஞ்ஞானம் ஆம் - அஞ்ஞான மாம், மத்திமம் - இரஜோ குண மானது, கலப்பது ஆம் - (சத்துவம்



தமம் ஆகிய இரண்டினையும்) சேர்ந்து இருக்கும், இம் மூன்றையும் - இம் மூன்று குணங்களையும், புத்தியின் விகாரமே-புத்தியி னுடைய விகாரமே, புலப்படுத்தும்-தோற்றுவிக்கும். (எ—று) மற்று, ஆல் - அசை. (16)

தரும பாவமி ரண்டுள தப்புதற்,
கருமை யாகிய பாசம தாகிலு,
மிருமை யாதர வின்றியெ னக்குநேர்,
கரும முத்தியின் காரண மாகுமால். (17)

(இ—ள்) தரும பாவம் இரண்டு உள - புண்ணிய பாவ மாகிய இரண்டு இருக்கின்றன, தப்புதற்கு - ஜந்மத்தினின்றும் மீளுதற்கு, அருமை யாகிய - அருமையாயுள்ள, பாச மது - பந்த மது ஆகும், ஆகிலும் - ஆனலும், இருமை ஆதரவு இன்றி - (பாவ புண்ணியம்) இரண்டினிடத்திலும் விருப்பு இன்றி, எனக்கு - (பரமேசுரனாகிய) எனக்கு, நேர் கருமம் - சாக்ஷசாத் (நிஷ்காமியமாகச் செய்யும்) கருமம், முத்தியின் - மோக்ஷத்திற்கு, காரணம் ஆகும் - ஏது வாகும். (எ—று) பாசமது' அது, பகுதிப் பொருள் விகுதி. ஆல் - அசை. (17)

அறியாமை காமம்வெறுப் பாமாசை யகஞ்செறிதற்,
பொறியாகப் புகுந்தொருவர் போக்கரிய பாசமிவை,
முறியாத வினைத்தளையான் முடிச்சிட்டே யென்மாயை,
பிறியாதென் பாலுளதாம் பிறவிகளுக் கடியாக. (18)

(இ—ள்) அறியாமை - அவித்தை, காமம் - அஸ்மிதை, வெறுப்பு ஆம் - துவேஷம், ஆசை - இராகம், அகம் செறிதல் - அபிநிவேசம் (ஆகிய இவ் வைந்தும்),

பொறி யாகப் புகுந்து - இந்திரியங்களின் வழித் தாகச் சென்று, ஒருவர் போக்கு அரிய - ஒருவராலும் போக்க முடியாத, பாசம் - பாச மாம், இவை - இந்த பாசங்க ளானது, முறியாத- நாச மாகாத, வினைத் தளையால் - (புண் ணிய பாவ ரூப) வினைக ளாகிற தளையினால், முடிச்சு இட்டு - முடிச்சுப் போட்டு, பிறவிகளுக்கு அடி யாக - ஜந்மத்திற்கு ஏது வாக, என் மாயை - என் னுடைய மாயை யானது, பிறியாது - நீங்காது, என்பால் - என் னிடத்திலேயே, உளது ஆம் - இருக்கின்றது. (எ-று) ஏ - அசை. (18)

பின்னிய பகுதியாம் பிரதாந மாயையு,
மன்னிய புருடனு மானு மாதியாய்த்,
துன்னிய விகாரமுந் தொல்லை யீசனி,
லன்னிய மின்மையா லவனே யாகுமால். (19)

(இ—ள்) பின்னிய பகுதி ஆம் - ஒன் றோடொன்று முடிச் சாக உள்ள பிரகிருதி யாகிய, பிரதாநம் மாயையும் - முதன்மை யான மாயையும், மன்னிய புருடனும் - (அதிற்) பொருந்திய புருஷனும், மானும் ஆதி யாய் - மக தத்துவம் முத லாகவும், துன்னிய விகாரமும் - பொருந்தா நின்ற (16) விகாரங்களும், தொல்லை ஈசனில் - அநாதி யான ஈசுவரனில், அந்நியம் இன்மையால் - வேறாகாமை யினால், அவனே ஆகும் - (யாவும்) அந்தப் பரமேசுரனே யாகும். (எ-று) ஆல் - அசை. (19)

அவனே பாச மவனேகட்டுண்
டவனே கட்டு மதிபதியு,
மவனே பசுக்க ளாகின்று
னனைத்து மாகி யுள்ளானு,



மவனே யவனை யொருவர்களு
மறிவா ரில்லை யனைத்திற்கு,
மவனே யநாதி புருடனென
வவனை யறிவா ரறைகுவரால். (20)

(இ—ள்) அவனே பாசம் - அவனே பாச மாகவும், அவனே கட் டுண்டவன் - அவனே கட்டப்பட்டு, கட்டும் அதிபதியும் - (அவனே) கட்டுகின்ற அதிபதியு மாகும், அவனே பசுக்கள் ஆகின்றான் - அவனே ஜீவர்களுமாகவும் இருக்கின்றான், அவனே அனைத்தும் ஆகி - அவனே எல்லாமும் ஆகி, உள்ளானும் - இருப்பவனும் ஆகும், அவனை - அந்த பரம சிவனை, அறிவார் - உணர்பவர், ஒருவர்களும் இல்லை-ஒருவரும் இல்லை, அவனை அறிவார்- அவனை உணர்ந்தவர்கள், அனைத்திற்கும் அவனே - சகல பிரபஞ்சத்திற்கும் அந்த ஈசனே, அநாதி புருடன் என - அநாதி புருஷன் என்று, அறைகுவர் - சொல்லுவார்கள். (எ-று) ஏ-ஆல் - அசை. (20)

7-தத்துவ நிசம் விபூதி அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் (206)

---

## 8. பிரபஞ்ச சர்வ காரண புராண புருஷப் பிரதிபாதந அத்தியாயம்.

வருந்தியு மறைகளீ றறியு மன்னுயி.
ரிரும்பவக் கடல்கடந் தேற வுய்ப்பதாந்,

திருந்திய வுணர்வது செப்ப வின்னமு,
மருந்தவர் கேண்மினென் றருளிச் செய்குவான். (1)

(இ—ள்) மறைகள் ஈறு - வேதத்தின் அந்தங்களே, வருந்தியும் - (கிருச்சிர சாந்தராயணாதி தவத்தினாலே சிரவண மநநாதி செய்து) வருத்த முற்று, அறியும் - உணர்கின்ற மன் உயிர் - நிலை பெற்ற ஜீவர்கள், இரும் பவக்கடல் - பெரிய ஜநந சமுத்திரத்தை, கடந்து ஏற-தாண்டிச் செல்ல, உய்ப்பது ஆம் - ஓட மாகிற, திருந்திய - நேர்மையான, உணர்வது - ஞாநத்தினே, இன்னமும் செப்ப - மேலும் (நான்) உங்களுக்குச் சொல்ல, அரும் தவர் - அரிய தவத்தினே உடைய (சௌநகாதி) ரிஷிகளே, கேண்மின் என்று - கேட்பீர்கள் என்று, அருளிச் செய்குவான் - சொல்ல ஆரம்பித்தார். (எ—று) 'உணர்வது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி (1)

பகருபர மீசன் வெறுமொருவ னீறில்
பரமனெனு மாதி பகவனு,
னிகரிலழி யாத பிரமமய மாகி
நிமலநிலை யேயெ னெழிவுருக்.
ககநவடி வான பிரமமெனி லியோநி
கருவையுற மேவி விடுவனு,
னகிலசக மாக வறிவருமென் மாயை
யெனேவிதய னாகி யமருமால். (2)

(இ—ள்) பகரு பரம் ஈசன் - சொல்லாநின்ற பரமேசுர னாயும், வெறும் - கேவல னாகியும், ஒருவன் - ஏகனாகியும், ஈறு இல் - அழியாத, பரமன் எனும் - பரமன் ஆகியும் உள்ள, ஆதி பகவன் நான் - ஆதி பகவான் நானாகின்றேன், நிகர் இல் - சமாந ரகித மான, அழியாத - நித்தியமா யுள்ள, பிரம மயம் ஆகி - பிரம சொருப மாய், நிமல நிலேயே - நின்மல மான தன்மையே, என் ஒழிவு உரு - எனது இடையறாத, ககந வடிவு ஆன - சிதா காய ரூப மான, பிரமம் - பிரம மாம், எனில் நான்-என்னிடத்தில் நான், அகில சகம் ஆக - எல்லா பிரபஞ்சங்களு மாக, யோநி கருவை - யோநி யாகிற கர்ப்பத்தை, உற மேவி விடுவன் - பொருந்த உண்டு பண்ணிவிடுவேன், அறிவு அரும் - அறிய முடியாத, என் மாயை - என்னுடைய மாயை யானது, எனே இதயன் ஆகி - என்னே இருதய னாகப் பொருந்தி, அமரும் - இருக்கும், (எ—று) ஆல் - அசை. (2)

சென்மா தியதாம் பகுதிபுமான்
சிறந்த மான்பூ தாதிமநம்,
தன்மாத் திரைகள் பூதங்க
ளிந்தி யங்கள் சமைத்ததனாற்
பொன்மா லிரவி பலகோடி
போலு மண்டம் போதாமே,
டென்மா சத்தி யெல்லையிலா
வுயிரு முளதா யிழைத்திடுமால். (3)

(இ—ள்) சென்ம ஆதியது ஆம் - உற்பத்தியை முதன்மை யாக வுடைய, பகுதி - பிரகிருதியும், புமான் - புருஷனும், சிறந்த-சிறப்பினே யுடைய, மான்-மக தத்துவமும், பூதாதி - அகங்கார தத்துவமும், மநம் - மநமும், தன்மாத்திரைகள் - (பஞ்ச) தன் மாத்திரைகளும், பூதங்

கள் - (பஞ்ச) பூதங்களும், இந்தியங்கள் - ஞாநேந்திரிய கர்மேந்திரியங்களும், (ஆகிய இரு பத் தைந்து தத்துவங் களும்), சமைத்த - உண்டாக்கிய, அதனுல்-தன்மையினுல், பல கோடி - அநேக கோடி, பொன் மால் - பொன் பொருந்திய, இரவி போலும் - சூரியர்களைப் போலும், அண்டம் - பிரமாண்டத்தை, போதாஞேடு - பிரமாவுடன், என் மா சத்தி - என் னுடைய மாயா சத்தி யானது, எல்லை இலா - அள வில்லாத, உயிரும் உளது ஆய் - பிர ஜைகளும் பொருந்தி யிருப்ப தாய், இழைத்திடும் - சிருட்டி செய்யும். (எ—று) 'போதன்' என்பது-'போதான்' என நீண்டது. ஆல் - அசை. (3)

எந்தயோ நியிற்பிறப்பா ரியார்க்குந்தா யென்மாயை,
தந்தையா னெனவறிவார் சநநவினை தப்புவரா,
லெந்தையா யெனையறியா திருப்பவரென் மாயையினுற்,
பந்தமா மியோநிதொறுற பவித்திறந்து பதைப்பர்
களால். (4)

(இ—ள்) எந்த யோநியில் பிறப்பார் - நால் வகை யோநி எழு வகைத் தோற்ற மா யுள்ளவைகளில் ஜநிப் பவர்கள், யார்க்கும் - எல்லா ஜீவர்கட்கும், என் மாயை - என் னுடைய சத்தி யானது, தாய் - மாதா வாகும், யான் தந்தை - (பரமேசுர ஞகிய) நான் பிதா வாகும், என அறிவார் - என்று உணரு மவர்கள், சநந வினை தப்புவர் - புண்ணிய பாவங்களால் வரப்பட்ட பிறவியினின்றும், மீளுவர், எனை - (பரமேசுர ஞகிய) என்னை, எந் தை ஆய் - தந்தை யாக, அறியாதிருப்பவர் - உணராதிருப்பவர்கள், என் மாயையினுல் - என் னுடைய மாயா சத்தியினுல்,



பந்தம் ஆம் - பாச மாகிற, யோநி தொறும் - சராயுஜம் சுவேதஜம் அண்டஜம் உத்பிஜம் ஆகிய நால் வகை யோநி கள் தோறும், உற்பவித்து - பிறந்து, இறந்து - மரித்து, பதைப்பர்கள் - துன்பத்தை அடைவார்கள். (எ—று) ஆல்- ஆல் அசை. (4)

பாங்காய விச்சைகட்கும் பகர்பூத மனைத்தினுக்கு,
மீங்காரு மிலரிறைவ ரென்னையலா லியானேயா,
நீங்காத வதிபதியாய் நின்றுலகம் படைக்கின்ற,
வோங்கார வுருவான பிரமமென வுள்ளே னும. (5)

(இ—ள்) பாங்கு ஆய - உயர்வு பொருந்திய, விச்சைகட்கும் - வித்தைகளுக்கும். பகர் பூதம் - சொல்லா நின்ற பூதங்கள், அனைத்தினுக்கும் - எல்லாவற்றிற்கும், ஈங்கு - இவ் விடத்து, என்னையலால் - என்னைத் தவிர்த்து, ஆரும் இறைவர் இலர் - ஒருவரும் தலைவர் இல்லை. யானே ஆம் - நானே எல்லாவற்றிற்கும் தலைவ ஞகின்றேன், நீங் காத - (இவைகளை விட்டு) நீங்காத, அதிபதி யாய் நின்று - தலைவ ஞகி விருந்து, உலகம் படைக்கின்ற - பிரபஞ் சத்தைச் சிருட்டி செய்கின்ற, ஓங்கார உருவு ஆன - பிர ணவ சொரூப மான, பிரமம் என - பிரமா வாக, உள்ளே னும் - இருப்பவனும் (நா ஞகின்றேன்). (எ—று) (5)

பொன்றுகின்ற பொருள்கடோறும் பொன்ருதே புரை
நின்றதறிந் தவனென்னை நோாக வறிகின்ரு [யறநான்,
னன்றியுமிங் கவன்றன்னைத் தன்னுலே யறிந்தழியா,
தென்றுமுள பரமபத வின்பமடைந் திடுகின்ருன். (6)

(இ—ள்) பொன்றுகின்ற-நாசத்தை அடைகின்ற, பொருள்கள் தொறும் - வஸ்த்துக்கள் தோறும், பொன்றாது - நித்திய மாய், புரை யற - குற்ற மின்றி, நான் நின்றது - (பரமேசுர னாகிய) நான் பொருந்தியிருப்பதை' அறிந்தவன் - உணர்ந்தவன், என்னை நேராக - என்னை சாக்ஷாத் தாக, அறிகின்றான் - உணர்ந்தவ னாகின்றான், அன்றியும் - அல்லாமலும், இங்கு - இவ் விடத்து, தன்னாலே - (ஜீவ னாகிய) தன்னாலே, தன்னை - (கூடஸ்த்த னாகிய) தன்னை, அறிந்த அவன் - உணர்ந்த புருஷன், என்றும் - எப் பொழுதும், அழியாது உள - நித்தியமா யுள்ள, பரம பத இன்பம் - பிரமாநந்தத்தினை, அடைந்திடுகின்றான் - அநுபவிக்கின்றான். (ஏ—று) ஏ- அசை. (6)

சங்கையறத் தத்துவங்க டன்னுடைய நுண்மையுமென்,
னங்கமென மொழிகின்ற வாறினையு மகிலத்தின்,
பங்கமறு பகுதியுமப் பகுதிவிநி யோகமுமென,
றிங்கெனது நிலையறிந்தா னென்னையடைந்
திடுகின்றான். (7)

(இ—ள்) சங்கை அற - சமுசய மின்றி, தத்துவங்கள் தன் னுடைய - தத்துவங்க ளுடைய, நுண்மையும் - சூக்ஷ்மங்களையும், என் அங்கம் என மொழிகின்ற - என்னுடைய அங்க மாகச் சொல்லுகின்ற, ஆறினையும்-ஆறையும், அகிலத்தின் - சகத்தினிடத்து பொருந்திய, பங்கம் அறு - (ஞாநத்தா லன்றி) நாச மாகாத, பகுதியும்-பிரகிருதியும். அப் பகுதி விநியோகமும், - அந்தப் பிரகிருதியின் விநியோகமும், என்று இங்கு - ஆக இவ் விடத்து, எனது- என் னுடைய, நிலை அறிந்தான் - தன்மையை உணர்ந்த



வன், என்னை - (பரமேசுர னாகிய) என்னை, அடைந்திடுகின்றான் - அடைந்தவ னாகின்றான், (எ—று) தன்- அசை. (7)

இறைவனுக் கநாதியா யிலங்கு போதமு,
மறிவது முழுதையு மநந்த சத்தியு,
நிறைவொடு சுதந்தர நித்த சத்தியென்,
றறைவர்க ளறிபவ ராறு மங்கமாய். (8)

(இ—ள்) இறைவனுக்கு -பரமேசுரனுக்கு, இலங்கு- விளங்குகின்ற, அநாதி போதமும்- 1 அநாதி ஞாநமும், முழுதையும் அறிவதும் - 2 சர்வக்ஞத் தன்மையும், அநந்த சக்தியும் - 3 சர்வ சத்தித்துவமும், நிறைவு - 4 திருப்தியும், சுதந்தரம் - 5 சர்வ சுதந்தரத்துவமும், நித்த சத்தி - 6 நித்திய சத்தியும், என்று ஆறும் - என ஆறையும், அறிபவர் - உணர்ந்தவர்கள், அங்கம் ஆய் - (பரமேசுரனது) அங்க மாக, அறைவர்கள் - சொல்லுவார்கள். (எ—று) ஒடு-இடைச்-சொல். (8)

நுண்ணியதத் துவங்ளென நுகல்வனதா நுகர்சீவன்,
வண்ணமிலா மநமொடுதன் மாத்திரைகண்
மற்றெதுக்கு,
மெண்ணுவதா மிவையடியா மியாதினுக்குங்
காரணமாய்ப்,
பண்ணுவது பகுதியதன் விநியோகம் பந்தமதாம். (9)

(இ—ள்) நுண்ணிய தத்துவங்கள் என - (ஏழு) சூக்ஷ்ம தத்துவங்க ளென்று, நுவல்வன - சொல்லுகின்றன, நுகர் சீவன்-1(கருமாதீந மாக போகங்களை)அநுபவிக்கின்ற ஜீவனும், வண்ணம் இலா - இவ் வர்ண மென்று சொல்ல முடியாத, மநம் - 2 மநமும், தன் மாத்திரைகள் -

3. (7) பஞ்ச தந்மாத்திரைகளும் ஆம், எண்ணுவ தாம் எதுக்கும்-கருதுவன வாகிய எல்லாவற்றிற்கும், இவை அடியாம் - இவை காரண மாம், யாதினுக்கும் - எல்லாவற்றிற்கும், காரண மாய் பண்ணுவது-ஏது வாகச் செய்வது, பகுதி - பிரகிருதி யாம், அதன் வியோகம் - அந்தப் பிரகிருதியின் வியோகம். பந்தமது ஆம் - பந்த மாகும். (எ—று) ஒடு எண் ணிடைச் சொல். மற்று - அசை. தான் அசை. 'பந்தமது' அது, பகுதிப் பொருள் விகுதி. (9)

ஆரண மந்த வுண்மையிற் கரப்ப
தாகுமென் றறைந்திடப் பட்ட,
வோரண வின்றி யுள்ளவெப் பொருட்கு
மியோகியா தொன்றதிவ் வுலகின்,
காரண மந்தப் பகுதியி லதனைக்
கடந்துமே லாகுமொன் றான,
பூரண மான மகேசனென் றுரைக்கும்
பொய்மைதீர் பரமனும் புருடன் (10)

(இ—ள்) ஆரணம் - வேத மானது, அந்த உண்மையில் - அந்த சத்தியத்தில், கரப்பது ஆகும் - லயப்பட்டிருப்ப தாகும், என்று அறைந்திடப்பட்ட - என்று சொல்லப் பட்ட, ஓரண இன்றி - சம்பந்த மின்றி, உள்ள எப் பொருட்கும் - உள்ள எல்லா வஸ்த்துக்களுக்கும், யோகியாது ஒன்றது - கரு வாக உள்ளது யாதோ அது, இவ் உலகின் காரணம் - இவ் வுலகிற்கு முதன்மை யாம், அந் தப் பகுதியில் - அந்தப் பிரகிருதியினிடத்தில், அதனைக் கடந்து - அதை தாண்டி, மே லாகும் ஒன்று ஆன - மேலாய் உயர் வான, பூரணம் ஆன.பூரணம் ஆகிய. மகேசன் என்று - மகேசுரன் என்று, உரைக்கும் - சொல்லுகின்ற. பொய்மை தீர் - நித்தியமா யுள்ள, பரமன் ஆம் புருடன் - பிரம மாகிய புருஷன் ஒருவ னுளன். (எ-று) (10)

மோகமா முலக முற்றி னுக்குமொரு
மூல மானதெரி யாமையும்,
போகு மாசெயும்வி ருத்தி யும்பொருள
னைத்தை யுந்தருபு ராணனு,
யேக னுகியிறை யாகி வானமென
வெங்கு முள்ளபர மீசனு,
மியோகி யாயுளவொ ருத்தனே யெனவொ
ருக்கி மாமறையு ரைக்குமால. (11)

(இ—ள்) மோகம் ஆம் உலகம் முற்றினுக்கும் - மயக்க மாகிய சகல உலகங்கட்கும், ஒரு மூலம் ஆன - ஒப் பற்ற காரண மான, தெரியாமையும் - அவ்விபத்தமும், போகும் ஆ (று) செயும் - நிவிர்த்தியாகும்படி செய்கின்ற, விருத்தியும் - (அகண்ட பிரம்மாகார) விருத்தியும், அனைத்தையும் பொருள் - சகல வஸ்த்துக்களையும், தரு - உண்டாக்கின்ற, புராணன் ஆம் - பழையோ னுகியும், ஏகன் ஆகி - அத்வைதரூப னுகியும், இறை ஆகி - தலைவ னுகியும், வானம் என - ஆகாயம் போல, எங்கும் உள்ள - எவ் விடங்களிலும் (வியாபக மாய்) உள்ள, பரம் ஈசன் ஆம் - பிரம மாகிய ஈசுர னுகியும், யோகி யாய் - யோகியாக, ஒருத்தனே உள - ஒருவனே உள்ளவ னுகும், என மா மறை - என்று பெருமை பொருந்திய வேதங்கள்,

ஒருக்கி உரைக்கும் - நிச்சய மாகச் சொல்லும். (எ—று) ஆல் - அசை. (11)

பாக மென்பர்ப குதிப்ப ரமனோ,
டேக மெனபர்சி லரணு வுக்கணு,
வாகி மற்றது மப்படி யாமென்பர்,
யோகி யுள்ளதெ லாமென்ப துண்மையாம். (12)

(இ—ள்) பகுதி - பிரகிருதி, பரமனோடு - பிரமத்தோடு, பாகம் என்பர் - பிந்நம் என்று சொல்லுவார்கள். சிலர் - சில பேர் (பிரமத்தோடு), ஏகம் என்பர் - அபேதம் என்று சொல்லுவார்கள், அணுவுக்கு அணு ஆகி - அணுவுக்கு அணு வாய், அப்படி யாம் - அந்தப் பிரகாரம், மற்றதும்- மகத்துக்கு மகத்தும் (ஆகி யிருக்கின்றது), என்பர் - என்று சொல்லுவார்கள், யோகி - யோகிகள், எலாம் உள்ளது - எல்லாம் இருப்பதே, என்பது - என்று சொல்லுவது, உண்மை யாம் - சத்திய மாம். (எ—று) (12)

என்னையுற நினைப்பவரி லெங்கேனு மொருவனவன்,
றன்மதியைக் கடந்தருளாற் றன்னிதயக் குகைதன்
னிற்,
பொன்மயனாய்ப் புராணமாம் புருடனாய்ப் பொருந்து
மெனி,
லந்நியம தறவறிவா னவன்பரமத் திடையடைவான்.
(13)

(இ—ள்) என்னை உற - (பரமேசுர னாகிய) என்னை அடைய, நினைப்பவரில் - விருப்ப முள்ளவர்களில், எங்கேனும் - எவ் விடத்தாயினும், ஒருவன் அவன் - ஒரு புருஷன், தன் மதியைக் கடந்து - தன் னுடைய புத்தியைத்



தாண்டி, அருளால் - (எனது) கிருபையினால், தன் இதய குகை தன்னில் - தன் னுடைய இருதய மாகிய குகையில், பொன் மயன் ஆய் - இரண்ணிய கர்ப்ப னாய், புராணன் ஆம் - பழைமை யான, புருடன் ஆய் - புருஷ னாய், பொருந்தும் - இருக்கின்ற, எனில், என்னிடத்தில், அந்நிய மது அற - வேறுபாடு இன்றி, அறிவான் அவன் - உணருமவன் யாவனோ அந்த புருஷன், பரமத்திடை - பிரமத்தினை, அடைவான் - அடைந்தவ னாகின்றான். (எ—று) 'குகை தன்னில்' என்பதில், தன் அசை, 'அந்நியமது, என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. (13)

8 பிரபஞ்ச சர்வ காரண புராண புருஷப் பிரதிபாதந அத்தியாயம் முற்றிற்று. ஆக விருத்தம் (219)

---

## 9. மாயா விகார அத்தியாயம்.

நின்மலமா யவிகாரி வேறுபடா நிட்களனாய்ச்,
சின்மயனாய் நித்தனாஞ் சிவனேநீ செகத்தான,
தன்மையினை யருளென்னத் தபோதநரோர்
தனையொழிய,
வின்மையினா னப்பரிசை யின்னமவர்க் கெடுத்து
ரைப்பான். (1)

(இ—ள்) நின்மலம் ஆய் - மல மற்ற தாய், அவிகாரி - நிர் விகாரி யாய், வேறுபடா - பிந்ந மின்றிய, நிட்களன் ஆய் - களங்கம் அற்றவ னாய், சின்மயன் ஆய் - சித் ரூப னாய், நித்தன் ஆம் - நித்தியனா யுள்ள, சிவனே - பரமசிவனே, நீ செகத் தான - தேவரீர் பிரபஞ்ச ரூப

மான, தன்மையினை - காரணத்தை, தபோதநர் - சௌள நகாதி ரிஷிகள், அருள் என்ன - திருவாய் மலர்ந்தருளுவீர் என்று விண்ணப்பஞ் செய்ய, ஓர் - ஒப் பற்ற, தனை ஒழிய- (பரமேசுர னுகிய) தன்னை அல்லாமல், இன்மையினுல் - (அந்நிய மாக சகத்) இன்மையினுல், அப் பரிசை - அந்தத் தன்மையினை, இன்னம் - மீண்டும், அவர்க்கு - (சௌள நகாதி) ரிஷிகளுக்கு, எடுத்து உரைப்பான் - (சிவன்) சொல்ல லாயினுர். (எ—று) (1)

என்னெழிய வில்லைசக மியானவ்வு ருவல்லே,
னுன்னிலொரு மாயையுல குக்குமுத லாகு,
ஞன்னுருவ மானவெனை யன்றியது நாளுந்,
தன்னியல்பி னுனிகழ்வு றத்தகுவ தன்ருல். (2)

(இ—ள்) என் ஒழிய - என்னைத் தவிர, சகம் இல்லை- பிரபஞ்சம் இல்லை, யான் அவ் வுருவு அல்லேன் - நான் அந்தப் பிரபஞ்ச ரூபம் அல்லன், உன்னில் - விசாரிக்கில், ஒரு மாயை - ஒப் பற்ற மாயை, உலகுக்கு முதல் ஆகும் - பிரபஞ்சத்திற்கு காரண மாகும், ஞன் உருவம் ஆன எனை- ஞான ரூபமா யுள்ள என்னை, அன்றி - அல்லாமல், அது - அந்த மாயை யானது, நாளும் தன் இயல்பினுல் - எப் பொழுதும் தன் னுடைய சுதந்தர மாக, நிகழ்வுறத் தகுவது அன்று - விளங்குவது அன்று. (எ—று) ஆல் - அசை. (2)

யாதொன் ஞெருருவ ராலேனு மறியப் படாத வியல்பா மென்,
னுதி முடிவின் றியசத்தி யந்த மாயை யதனுலே,



பேத வுலக முண்டாகிப் பிறங்கு மதனுற் பிறர்க்கென் றும்,
போதப் படாத வென்னுலா யுள்ள பொருளிப் பொரு ளெல்லாம். (3)

(இ—ள்) யாது ஒன்று - எந்த வஸ்த்து வானது, ஒருவராலேனும் - ஒருவராலும், அறியப்படாத - உணர முடியாத, இயல்பு ஆம் - தன்மையன வாக இருக்கின்றனவோ அது, என் - எனது, ஆதி முடிவு இன்றிய - உற்பத்தி நாசம் இல்லாத, சத்தி - சத்தி யாம், அந்த மாயை அதனுலே - அந்த மாயா சத்தியினுலே, பேத உலகம் - நானா கூறுபாடுடைய பிரபஞ்சம், உண்டாகிப் பிறங்கும் - உற்பத்தி யாகி விளங்குகின்றது, அதனுல் - அந்த தன்மை யினுல், பிறர்க்கு - அந்நியருக்கு, என்றும் போதப் படாத- எப் பொழுதும் உணர முடியாத, இப் பொருள் எல்லாம் - இந்த வஸ்த்துக்கள் யாவும், என்னுல் ஆய் உள்ள பொருள் - என்னுலே உண்டாக்கப்பட்ட வஸ்த்துக் களாம். (எ—று) ஏ-அசை. (3)

சோதியா நந்த மாகுந் தோன்றிடா வேறே தொல்லை,
யாதிகா ரணமா மென்றே யறைவர்க ளறிய வொன்
னீதியாய்ப பரமா நந்த நிமலமாம் பிரம நானே, [ருய்,
பேதியா வென்னில் வேறுண் டாவது பிறிதொன றில்லை. (4)

(இ—ள்) சோதி ஆநந்தம் ஆகும் - பிரகாச ரூப மான ஆநந்த சொரூப மாம், வேறு தோன்றிடா - அந்நிய மாக (ஒன்றும்) காணமாட்டாது, தொல்லை - முதன்மை

யான, ஆதி காரணம் ஆம் - உற்பத்திக்கு ஏது வாம், என்று அறைவர்கள் - என்று கூறுவார்கள், அறிய ஒன்று ஆய் - அறியில் அத்வைத ரூப மாய், நீதி ஆய் - நியதி யாக உள்ள, பரம ஆநந்த- மே லான ஆநந்த மாய், நிமலம் ஆம் - நிர்மல மான, பிரமம் நானே - பிரமம் நா னுகின் றேன், பேதியா என்னில்-அபேதமா யுள்ள என்னிடத்தில், வேறு உண்டாவது - அந்நிய மாக உற்பத்தி யாவது, பிறிது ஒன்று இல்லை - வேறே ஒன்றும் இல்லை யாம். (எ-று) ஏ-ஏ-அசை. (4)

அன்றி யின்மைய றிந்தவ ராதலா,
லென்று மிச்சகந் தானது மியானென,
வொன்று மாகியு லப்பில னைத்துமாய்,
நிற்றல் கண்டிவர் நிச்சயித் தாாகளால். (5)

(இ—ள்) அன்றி - (பரமேசுர னுகிய என்னை) அன்றி, இன்மை அறிந்தவர் - (வேறே) இல்லாமையை உணர்ந்தவர்கள், ஆதலால் - ஆனபடியினுல், என்றும் - எப்பொழுதும், இச் சகம் தானதும் - இந்தப் பிரபஞ்ச ரூபமா யிருப்பதுவும், யான் என - யானே எனவும், ஒன் றும் ஆகி - ஏக மாகியும், உலப்பு இல் - நாச மில்லாத, அனைத்தும் ஆய் - சர்வாந்மக மாயும், நிற்றல் கண்டு - இருத்தலைப் பார்த்து, இவர் - இந்த ரிஷிகள், நிச்சயித்தார் கள் - நிச்சயம் செய்தார்கள். (எ—று) தான் ஆல்-அசை,(5)

சிந்ம யாநந்த மாய்த்திகழ் கின்றதோர்,
தன்மை யாய்ப்பர மாகிய சாந்தமாய்த்,
தொன்மை யானசு டரால்வி காரமொன்,
றின்மை யாமெனக் கேதமொன் றில்லையால் (6)



(இ—ள்) சிந்மய ஆநந்தம் ஆய்- சித் ரூப ஆநந்த மாய், திகழ்கின்றது - விளங்குகின்றது, ஓர் தன்மை ஆய்- ஒரே தன்மையன வாக, பரம் ஆகிய - மேலாகிய, சாந் தம் ஆய் - சாந்த மாய், தொன்மை ஆன - அநாதியா யுள்ள, சுடரால் - ஞாநப் பிரகாசத்தினுல், ஒன்று விகாரம்- ஒரு விகாரமும், இன்மை ஆம்-இல்லாதவ னுகிய, எனக்கு- எனக்கு, ஒன்று ஏதம் இல்லை - ஒரு தோஷமும் இல்லை. (எ—று) ஆல் - அசை. (6)

எனந்த மற்ற வேக மேனி
யெண்ணில் பேத மாக்கவற்,
றநந்த சத்தி யென்னி லேய
வற்றின் மாயை யாதியா,
வனைந்த வந்த மாயை யான
வானி லேம நத்தினு
னினைந்தி டப்ப டாத வவ்வி
யத்த மாகி நிற்பனுன். (7)

(இ—ள்) என் அந்தம் அற்ற - என் னுடைய நித் தியமா யுள்ள, ஏகமேனி - ஏக சரீரத்தில், எண்ணில் - அள வில்லாத, பேதம் ஆக்கவற்று - நாநா கூறுபா டாகப் பிரிந்து, என்னில் - என்னிடத்தில், அநந்த சத்தி - அநேக சத்திகள் (பொருந்த). அவற்றில் - அந்த சத்திகளிடத்தில், மாயை ஆதியா வனைந்த - மாயை முதலன வாகச் செய்த, அந்த மாயை ஆன - அந்த மாயை ஆன, வானிலே - ஆகா யத்திலே, மநத்தினுல் - மநதினுல், நினைந்திடப்படாத - கருத முடியாத, அவ்வியத்தம் ஆகி - அவ்வியத்தம் ரூப மாகி, நான் நிற்பன் - நான் இருப்பேன். (எ—று) ஏ—அசை. (7)

சத்தியொன் ருலே யானுந்
　　தக்கசா யுச்ச மான,
முத்தியுண் டாகு மொன்ருன்
　　முழுதுசெல் வமுமுண் டாகுஞ்,
சித்தியா நிற்ப தெல்லாஞ்
　　சிதையுமொன் ருலே யெல்லா,
நித்திய மாக வென்ற
　　னியமத்தா னிகழு மன்றே. (8)

(இ—ள்) ஒன்று சத்தியாலே - ஒரு சத்தியினுலே, யான் ஆம் - எனது சொருப மாகிய, தக்க சாயுச்சம் ஆன - தகுந்த சாயுச்ச மான, முத்தி உண்டாகும் - மோக்ஷ முண்டாகும், ஒன்ருல் - மற ெருரு சத்தியினுல், முழுது செல்வமும் உண்டாகும் - எல்லா ஐசுவரியங்களும் உண்டாகும், ஒன்ருல் - வே ெருரு சத்தியினுல். எல்லாம் சித்தியாநிற்பது - எல்லாம் கிடைப்ப தாகும், எல்லாம் சிதையும் - கிடைத்த யாவும் (வே ெருரு சத்தியினுல்) நாசத்தை யடையும், என் நியமத்தால் -என் னுடைய ஆக்ஞையினுலேயே, நித்திய மாக - (சகல வஸ்த்துக்களும்) நியம மாக, நிகழும் - உண்டாகும். (எ—று) தன் அன்று-ஏ-ஏ-அசை. (8)

மத்தியமாய்ப் பரஞ்சுடரா மண்டலத்தான் மண்டிதமா,
யத்தகுமக் கரமாகி யறிவரிதா மநாதியாம்,
வித்தகமாம் விட்டுவின்மெய்ப் பரமபதம் விச்சை
　　　　　　　　　　　　யெனுஞ்,
சத்தியினு னிகழுமிது தக்கோர்க ளறிவர்களால் (9)

(இ—ள்) மத்தியம் ஆய் - (ஆதி) மத்திய(ாந்த ரகித) மாய், பரஞ் சுடர் ஆம் - மே லான பிரகாச மாம், மண்டலத்தால் - (பூமி யாகிய) மண்டலங்களினுல், மண்டிதம் ஆய் - அலங்கரிக்கப்பட்டதா யுள்ள, அத் தகும் - அந்த தகுதி யான, அக்கரம் ஆகி - பிரணவ ரூப மாய், அறிவு அரிது ஆம் - உணர முடியாததா யுள்ள, அநாதி ஆம் - முதன்மை யான, வித்தகம் ஆம் - வித்தை யாகிய, விட்டுவின் - விஷ்ணுவின், மெய் பரம பதம் - உண்மை யான பிரம பதம், விச்சை எனும் - வித்தை என்கின்ற, சத்தியினுல் - (எனது) சத்தியினுலே, நிகழும் - உண்டாகும், இது - இதனை, தக்கோர்கள் அறிவர்கள் - பெரியோர்கள் உணருவார்கள். (எ—று) ஆல் அசை. (9)

உடுக்கு மாடை யினைப்போல
　　வுலக மியாதொன் றிற்குருக்கு,
நெடுக்கு மாகு நிகிலமுமாய்
　　நினைத்தற் கரிதா மியாதொன்றின்,
மடக்கும் வாக்கு மநஞ்செலல
　　மாட்டா மையினுற் பவக்கடலைக்,
கடக்கும் பிரம வாநந்தங்
　　கண்டா னடுக்கங் காணுனல் (10)

(இ—ள்) உடுக்கும் ஆடையினைப் போல - கட்டிக் கொள்ளுகின்ற வஸ்த்திரத்தில் (நூல் குருக்கு நெடுக்குமா யுள்ளது) போல, உலகம் - இந்தப் பிரபஞ்ச மானது, யாது ஒன்றில் - எந்தப் பிரமத்தில், குருக்கு நெடுக்கும் ஆகும் - ஓதப் புரோத பாவ மாக இருக்கின்றதோ, நிகிலமும் ஆய் - (அது) சகல வஸ்த்துக்க ளாய். நினைத்தற்கு அரிது ஆம் - (மநதினுல்) நினைக்க முடியாத, யாது

ஒன்றில் - எந்த வஸ்துவினிடத்தில், வாக்கு மநம் - வாக்கும் மநமும், செல்லமாட்டாமையினுல் மடக்கும் - போய் மீண்டும் திரும்புகின்றனவோ, பவக் கடலே - ஜநந மாகிய சமுத்திரத்தினே, கடக்கும் - கடக்கின்ற, பிரம ஆநந்தம் - பிரமாநந்தத்தினே, கண்டான் - அடைந்தவன், நடுக்கங் காணுன் - (ஜந்மத்திற்கு) பீதி யடையான், (எ—று) ஆல்- அசை. குருக்கு நெடுக்கு - ஓதப் புரோதம் என்ப தாம்.(10

ஈநஞ் செய்யு மஞ்ஞாந
விருளேக் கடந்து மேலான,
பாநந் தனக்கே யுளதான
பரம வொளியாம் பரம்பரனே,
ஞாநந் தன்னுல் வேறறவே
நானென் றறிந்த நல்லோனவ்
வாநந் தமதாம் பிரமமய
மாகி வீடே யடைகின்ருன், (11)

(இ—ள்) ஈநஞ் செய்யும் - (அதி) இழிவதைத் தருகின்ற, அஞ்ஞாந இருளே கடந்து - அஞ்ஞாந அந்தகாரத்தை தாண்டி தனக்கே - (கூடஸ் த ஞகிய) தனக்கே, மேல் ஆன பாநம் - உயர் வான விளக்குந் தன்மை, உளது ஆன - உடைய தான, பரம ஒளி யாம் - பிரமப் பிரகாச மாம், பரம் பரனே - பரத்துக் கெல்லாம் பரமா யுள்ளவனே ஞாநம் தன்னுல் - (ஆத்ம) ஞாநத்தினுல், வேறு அற - அபேத மாக, நான் என்று அறிந்த - அஹம் என்று உணர்ந்த, நல்லோன் - மகான், அவ் ஆநந்தமது ஆம் - அந்த பிரமாநந்த மாகிய, பிரம மயம் ஆகி - பிரம சொருப மாகி, வீடே அடைகின்ருன் - மோக்ஷத்தினேயே அடைகின்ருன். (எ—று) ஏ - அசை, 'ஞாநம் தன்னுல்' என்பதில், தன் - அசை. 'ஆநந்தமது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி (11)



ஒப்பதுமிக் கதுகுறைந்த வொன்றுதனே யொழித் தில்லா,
தெப்பொருளெவ் வொளிகட்கு மெவ்வொளிதா னொளியாகுஞ்,
சிற்பரமா காயத்தே திகழ்கின்ற வதுதெளிந்த
வப்பெரியோ னாநந்த மாய்ப்பிரம மாகின்ருன். (12)

(இ—ள்) தனே ஒழித்து - தன்னே அன்றி, ஒன்று - ஒரு வஸ்து, ஒப்பது மிக்கது குறைந்த - சம மானதும், உயர் உடையதும், தாழ் வானதும், இல்லாது - இல்லாத, எப் பொருள் - எவ் வஸ்து. எவ் வொளிகட்கும் - எல்லாப் பிரகாசங்கட்கும், எவ் வொளி ஒளி ஆகும் - எந்தப் பிரகாச மானது பிரகாசிக்கின்றதோ, சித் பரம ஆகாயத்தே - சித் ரூப ஆகாயத்திலே, திகழ்கின்ற - விளங்குகின்ற, அது தெளிந்த - அதனே தெளி வாக உணர்ந் துள்ள, அப் பெரியோன் - அந்த மகாநுபாவன், ஆநந்தம் ஆய் - ஆநந்த சொருப மாகிய, பிரமம் ஆகின்ருன் - பிரமம் ஆகின்ருன். (எ—று) தான் - அசை. (12)

உலகங்கண் முழுதுந்த னுளதென்ன வுளதா,
யலகின்றி யழிவின்றி யறிவின்றி யமிதா,
யெலேயொன்று மறநின்ற பரவினப மிதிலே,
நிலேநின்ற வவனிநற நிலேயென்று மழியான். (13)

(இ—ள்) உலகங்கள் முழுதும் - பிரபஞ்சங்கள் எல்லாம், தன் - தன்னிடத்தில், உளது என்ன - இருக்கின்றது

என்று, உள தாய் - உள்ள தாய், அலகு இன்றி - குறைவு படுதலில்லாமல், அழிவு இன்றி - நாச மில்லாமல், அறிவு இன்றி - (சுட்டி) யறித லில்லாமல், அமிர்து ஆய் - அமிர்த மாய், ஒன்றும் எலை அற நின்ற - ஒரு அளவும் இல்லா திருக்கின்ற, பர இன்பம் - பிரமாநந்தம், இதிலே - இந்த பிரமாநந்தத்திலே, நிலை நின்ற அவன் - லயித்து இருக்கப் பட்டவன், நின்ற நிலை - இருக்கும் தன்மையினின்றும், என்றும் அழியான் - எப் பொழுதும் நாசத்தை அடை யான். (எ—று) (13)

புன்மய கோசமுள் புக்கொ ளிக்குளே,
நன்மைய தாகிய ஞானக் கண்ணினுற்,
சிந்மய மாய்த்திகழ் தேசை நோக்கிய,
தன்மையால் வியோமநற் ருமங் காண்பரால். (14)

(இ—ள்) புல் மய கோச முள் - இழிவு பொருந்திய அந்நமய கோசத்தினுள், புக்கு - (தீரர்கள்) பொருந்திய, ஒளிக்குளே - சைதந்யத்தில், நன்மைஅது ஆகிய - நன் மையா யுள்ள, ஞானக் கண்ணினுல் - ஞான சக்ஷுவினுல், சிந் மய மாய் திகழ் - சித் ரூப மாக விளங்குகின்ற, தேசை- சைதந்யத்தினை. நோக்கிய - சாக்ஷாத்கரித்த, தன்மையால் - தன்மையினுல், நல் வியோம தாமம் - பரமாகாய மாகிய இடத்தை, காண்பர் - பார்ப்பார்கள். (எ—று) ஆல் அசை, (14)

அப்பரந் தன்னைத் தன்பா லநுபவித் தநுப வித்தா,
ரெப்படிக் கண்டா ருள்ளத் திலங்குமா முனிவ ரந்தச்,



செப்பரு மின்ப மாய்த்தன் றேசினுற் றிகழ்ந்து தன்னுே,
டொப்பறு மவனே யார்க்கு மும்பனென் றுணரப் பட்டான், (15)

(இ—ள்) இலங்கும் மா முனிவர் - விளங்காநின்ற சௌனகாதி ரிஷிகள், அப் பரம் தன்னை - அந்த பிரமத்தினை, உள்ளத்து - மநதில், எப்படிக் கண்டார் - எப்படி எப்படி பார்த்தார்களோ, தன்பால் - (அப்படி அப்படியே) தன்னி டத்து, அநுபவித்து அநுபவித்தார் - அநுபவித்து அநு பவித்தார்கள், அந்த செப்ப அரும் - அவ் வாறு சொல் வதற்கு அருமை யான, இன்பம் ஆய் - ஆநந்த மாய், தன் தேசினுல் - தனது சைதந்ய ரூபத்தினுல், திகழ்ந்து - விளங்கி, தன்னுேடு - தனக்கு, ஒப்பு அறும் அவனே - சமாந ரகிதமா யுள்ளவனே, யார்க்கும் - எல்லார்க்கும், உம்பன் என்று - தலைவன் என்று, உணரப்பட்டான் - அறியப்பட்டான். (எ—று) 'அப்பரம் தன்னை' என்பதில், தன் அசை, ஒடு அசை. (15)

எங்குமுள னுயிறைய யேகனு யெல்லாப்பூ,
தங்கடொறு மறைந்திருக்குந் தன்மையனுய்ச் சரா சரங்கட்,
கிங்குயிரா யுள்ளாகு மிறைவனொரு வனையுமறிந்.
தங்கடைவார் சாந்தியினை யடைவரலலா தவரடை யார். (16)

(இ—ள்) எங்கும் உளன் ஆய் - சர்வ வியாபி யாய், இறை ஆய் - தலைவனுய், ஏகன் ஆய் - அத்வைத ரூப னுய், எல்லா பூதங்கள் தொறும் - சர்வ பூதங்களிலும்,

மறைந்து இருக்கும் - மறைந்து இருக்கின்ற, தன்மையன் - ஆய் - தன்மையினை உடையவ ளுய், சர அசரங்கட்கு - சர அசரங்களுக்கு, உயிர் ஆய் - பிராண ளுய், உள் ளாகும் - ஆந்தரமா யிருக்கின்ற, இறைவன் - பரமேசுவரனே, ஒருவனையும் - ஏக ரூபனை, அறிந்து அடைவார் - உணர்ந்து (அதனை) அடைந்தவர்கள், சாந்தியினை அடைவர் - சாந்தியை அடைவார்கள், அல்லாதவர் - (இவ் வாறு) உணர்ந்து அதனை அடையாதவர்கள், அடையார் - (சாந்தியை) அடைய மாட்டார்கள். (எ—று) உம், இங்கு, அங்கு - அசை. (16)

முகமொடு கிரிவந்தன் முடிபத முடிவின்ருய்க்,
குகைமுழு தினுநின்றே குறைவற வுலகெல்லா,
மகமொடு புறமேவுற் றழிவறு நிலையாகும்,
பகவனி லயலாகப் படுவதொர் பொருளின்ருல். (17)

(இ—ள்) முகமொடு - முகமும், கிரிவம்- கழுத்தும், முடி - சிரசும், பதம் - பாதங்களும், முடிவு இன்று ஆய் - அள வில்லாத தாய் குகை முழுதினும் நின்று - எல்லா சரீரங்களிலு மிருந்து, குறைவு அற - பூரண மாய், உலகு எல்லாம் - எல்லா உலகங்களிலும், அகம் ஒடு புறம் மேவுற்று - உள்ளும் புறம்பும் பொருந்தி, அழிவு அறும் - நித்தியமா யுள்ள, நிலை ஆகும் - தன்மையினை உடைய, பகவனில் - பரமேசுரனுக்கு, அயலாகப்படுவது - அந்நியமாக இருப்பது, ஓர் பொருள் இன்று - ஒரு வஸ்த்துவும் இல்லவே இல்லை. (எ—று) ஏ - தன் - ஆல் - அசை. (17)

மாசுடை மநத்தர் தம்மின் மறைப்பதாய் மாசி லாத,
தேசுடை யோகி கட்குந் தெரிந்திடப் படாத தான,



வீசனு னெனதா ஞாந மிப்படி யருளி னுலே,
பேசின னுங்கட் கென்று பெருந்தகை யருளிச்
செய்தான். (18)

(இ—ள்) மாசு உடை - (பாப மாகிய) மல தோஷங்களை உடைய, மநத்தர் தம்மில் - அந்தக் கரணம் உடையவரிடத்து, மறைப்பது ஆய் - அறிய முடியாத ரகசியமா யுள்ள தாய், மா சிலாத - குற்ற மற்ற, தேசுடை யோகிகட்கும் - பிரகாசம் பொருந்திய யோகிகளுக்கும், தெரிந்திடப்படாதது ஆன - அறியக்கூடாததா யுள்ள, ஈசன் நான் - பரமேசுரன் நான், எனது ஆம் - என் னுடைய, ஞாநம் - ஞாநத்தினை, இப்படி - இவ் வாறு, அருளினுலே - கிருபையினுலே, உங்கட்கு பேசினன் - உங்களுக்கு உபதேசித்தேன், என்று - என, பெரும் தகை - பெருமை பொருந்திய தன்மையினை உடைய பரமேசுரன், அருளிச் செய்தான் - கூறினுன். (எ—று) 'மநத்தர் தம்மின்' என்பதில், தம் - அசை. (18)

9. மாயா விகார அத்தியாயம் முற்றிற்று.
ஆக விருத்தம் (237)

---

## 10. *தத்துவ தரிசந அத்தியாயம்.*

துக்கரங் குறியில்குறி சூக்கசூ சனைதெரியி,
லக்கணஞ் சகலவுல கத்தினங் குரமுமதவ்,
வக்கரம் பரமபத மப்பரஞ் சுடர்பிரம,
நிர்க்குணம் பரவெளியி னிச்சயம் பெறநிகழும். (1)

(இ—ள்) துக்கரம் - அங்க மல்லாத, குறியில்-அலிங்கத்திலும். சூக்க சூசனே குறி - அவ்வியத்த லிங்கத்திலும், தெரியில் - விசாரிக்கில், அக் கணம் - அப் பொழுது, அது-அந்த அவ்வியத்த லிங்க மானது, சகல உலகத்தின் - சர்வ பிரபஞ்சங்களினது, அங்குரமும் - பீஜமு மாகும், அவ் அக்கரம் - அந்த அக்ஷர ரூப பீஜ மானது. பரம பதம் - மே லான பதமு மாகும், அப் பரஞ் சுடர்-அந்த மே லான பிரகாசம், பிரமம் - பிரமமு மாம், நிர்க்குணம் - நிர்க்குணமும் ஆம், பர வெளியில் - பர ஆகாயத்தில், நிச்சயம் பெற - நிச்சய மாக, நிகழும் - (அந்தப் பிரமம்) விளங்கும். (எ—று) (1)

ஒப்ப ரும்பர தத்துவத் தொப்பி டுஞ்சுரு திக்கலே,
கப்ப றும்படி புத்தியிற் கற்பி தங்கள்க ழற்றிமெய்த்,
தப்ப ருந்தவர் சித்தமெய் தற்ப ரந்தனி லற்றதிங்,
கப்ப ரம்பிர மத்தினுக் கத்தை லிங்கமெ னப்படும். (2)

(இ—ள்) ஒப்பு அரும் - சமாந ரகித மான, பர தத்துவத்து - பிரம தத்துவத்தில், ஒப்பிடும் - சமான மாகச் சொல்லுகின்ற, சுருதி கலே - வேதங்களும் கலேகளும் கப்பு அறும்படி - நாநா பேதங்கள் நாச மாகும்படி, புத்தியில் - புத்தியின்கண் உள்ள, கற்பிதங்கள் கழற்றி - பாவனேகளே நீக்கி, மெய் தப்பு அரும் தவர் - உண்மை யான ஒழுக்கத்தினே யுடைய தவத்தை உடையோர்களால், சித்தம் - மந மானது, மெய் - சத்திய மான, தற் பரந்தனில் - அந்த பிரமத்தில், அற்றது - பொருந்தி யுள்ள தான, அத்தை - அதனே, அப் பரப் பிரமத்தினுக்கு - அந்தப் பரம் பிரமத்திற்கு, லிங்கம் எனப்படும் - லிங்க (அடை யாளம்) மென்று சொல்லப்படும். (எ—று) இங்கு - அசை. (2)



அறிவினிற் பிறிதெல்லா மறிவென லறிவாகும்,
பெறவரி திதிலல்லாற் பிறிதினில் வெளிநில்லேன்,
பிறவிய தறுஞாநம் பெறவரி ததனலே,
மறவிய துறுமாயா மயலல திலேயெல்லாம். (3)

(இ—ள்) அறிவினில் - ஆத்மாவில், பிறிது எல்லாம்-வே ருயுள்ள யாவும், அறிவு எனல் - ஆத்மாவே என்று கருதுதலே. அறிவு ஆகும் -(ஆந்ம) ஞாந மாம். இது பெற அரிது-இந்த ஞாநம் உண்டாவது மிகத் துர்லப மாம், இதில் அல்லால்- இந்த ஆத்ம ஞாநத்தினு லல்லாமல், பிறிதினில் - மற்றவற்றில், வெளி நில்லேன் - வெளி யாக யான் உணரப் படேன், பிறவியது அறும்-ஜெந்மத்தினே நாசம் செய்கின்ற, ஞாநம் - (ஆந்ம) ஞாநத்தினே, பெற அரிது - அடைவது மிகவும் அருமை யாகும். அதனலே - ஆகையினுலே, எல்லாம் - யாவும், மறவியது உறும் - அஞ்ஞாநத்தினே பொருந்திய, மாயா மயல் - மாயையின் மயக்கமே, அல்லது இலே - அல்லாமல் வே றில்லே, (எ—று) 'பிறவியது' 'மறவியது' என்பவற்றில், அது, பகுதிப் பொருள் விகுதி. (3)

நின்மல மாகிநி ரஞ்சந மாய்வே,
றின்மைய தாயவி காரமி தாமித்,
தொன்மைய தாகிய சூக்கும ஞாந,
மென்மல மிலலுரு வென்பர றிந்தோர். (4)

(இ—ள்) அறிந்தோர் - (ஆந்ம ஞாநத்தினே) உணர்ந்தவர்கள், நின் மலம் ஆகி - மல தோஷ மற்ற தாய், நிரஞ்

சநம் ஆய் - களங்க மற்ற தாய், இது வேறு விகாரம் - இது யாதொரு விகாரமும். இன்மையது ஆய ஆம் - இன்றிய தாயும் இருக்கின்ற, இத் தொன்மையது ஆகிய - இந்த அநாதி யான, சூக்கும ஞாநம் - சூக்ஷ்ம மான பிரம ஞாநம், என் மலம் இல் உரு - எனது மல மற்ற ரூப மாம், என்பர் - என்று கூறுவார்கள். (எ-று) 'இன்மையது' 'தொன்மையது' என்பவற்றில், அது பகுதிப் பொருள் விகுதி. (4)

யோகினி லுளமென்பா லொருபடி யுறவைத்தே,
யேகவெ னிலைகண்டா ரவரென தியல்கண்டார்,
பாகம தறுமொன்றும் பலவுரு வமுநானே,
யாகவு மெனையன்பா லறிஞரு மயலன்றால். (5)

(இ—ள்) யோகினில் - யோகத்தில், உளம் - மநதை, என்பால் - என்னிடத்து, ஒரு படி - ஏக மாக, உற வைத்து - பொருந்தும்படி செய்து, ஏக என் நிலை - அத்வைத ரூப னான என் னுடைய தன்மையை, கண்டார் அவர் - உணர்ந்தவர்கள் யாவரோ அவர், எனது இயல் - என் னுடைய சுவாப சொருபத்தை, கண்டார் - அறிந்தவ ராவார்கள், பாகமது அறும் - அபேத மாக வுள்ள, ஒன்றும் பல உருவமும் - ஏகமும் நாநா ரூபமும், நானே ஆகவும் - நானே யாக இருக்கின்றேன், எனை - (பரமேசுர னாகிய) என்னை, அன்பால் - பக்தியினாலே வழிபடுகின்ற. அறிஞரும் - ஞாநிகளும், அயல அன்று - எனக்கு அந்நிய மல்ல. (எ-று) 'பாகமது' என்பதில், அது (பகுதிப் பொருள் விகுதி.) ஏ-ஆல்-அசை. (5)

பேறுறு பிரமாநந் தமுமது பெறுதாமும்,
வேறுற வறிகின்றா ரவர்விழி மறைகின்றார்,



கூறற வவிகாரங் கூடிய விறைதாமா,
யூறற வுணர்கின்றா ருண்மையை யுணர்கின்றார் (6)

(இ—ள்) பேறு உறு - பிரயோஜநத்தைத் தரத்தக்க, பிரமாநந்தமும் - பிரமாநந்தத்தினையும், அது பெறு - அதனை அடைகின்ற, தாமும் - தம்மையும், வேறு உற - வேறாக, அறிகின்றார் அவர் - உணர்கின்றவர்கள் யாவரோ அவர்கள், விழி மறைகின்றார் - அஞ்ஞாநிக (அறிவிலிக) ளாகின்றார்கள், கூறு அற - வேறுபாடுகள் நீங்கி, அவிகாரம் கூடிய - நிர்விகாரத்தினைப் பொருந்திய, இறை தாம் ஆய் - பரமேசுரன் தா னாக, ஊறு அற - குற்றம் யாவும் நீங்கி, உணர்கின்றார் - அறிகின்றவர்கள் யாவரோ அவர்கள், உண்மையை-சத்தியமா யுள்ள பிரமத்தினை, உணர்கின்றார்- அறிகின்றார்கள். (எ—று) (6)

பங்கமில்சீர் பரனுடைய தாதித்தன் பான்மையினை,
யிங்கொருவர்க் கறிவரிய தாகியதவ் வியத்தத்தை,
யெங்குமுள தாய்த்தம்பா லிலங்கியபே ரின்பத்தைத்,
தங்களிலே நிலைபெற்ற சாந்தரடைந் திருப்பர்களால (7)

(இ—ள்) பங்கம் இல் சீர் - குற்ற மின்றிய சிறப் பினை யுடைய, பர னுடையது - பிரமத்தினுடைய தாகிய, ஆதித்தன் பான்மையினை - சூரியனது தன்மையினை, இங்கு ஒருவர்க்கு - இவ்விடத்தில் ஒருவருக்கும், அறிவு அரிது ஆகிய - அறிய முடியாத தான, அவ்வியத்தத்தை - அவ் வியத்த ரூபத்தினை, எங்கும் உளது ஆய் - சர்வ வியாபக மாய், தம்பால் இலங்கிய - தம் மிடத்து விளங்குகின்ற, பே ரின்பத்தை -பிரமாநந்தத்தினை, தங்களிலே நிலை பெற்ற-

தம்மிடத்து ஸ்திர மாகப் பொருந்தி யுள்ள, சாந்தர்-சாந்தர்கள் (மகான்கள்), அடைந்திருப்பர்கள் - அடைந்திருப்பார்கள். (எ—று) 'பர னுடையது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி ஆல் - அசை. (7)

மெய்த்தக வீடிது விமல மாய்ப்பரி,
சுத்தம தாகிநிர்த் தொந்த மாயொரு,
பெத்தமில் பிரமரூ பத்திற் பேதியா,
உத்தம மெனதுசா யுச்ச மென்பரால். (8)

(இ—ள்) இது - இந்த ஆத்ம ஞாந மானது, மெய்தக வீடு - உண்மை யான மோக்ஷ மாம், விமலம் ஆய் - நின்மல மாய், பரிசுத்தமது ஆகி - பரிசுத்த மாய், நிர்த்தொந்தம் ஆய் - (சுக துக்கங்க ளாகிற) துவந் துவ மற்றதாய், ஒரு பெத்தம் இல் - யா தொரு பந்தமு மின்றிய, பிரம ரூபத்தில் - பிரம்ம சொருபத்தில், பேதியா - வேறுபடாத, உத்தமம் - உத்தமமா யுள்ளது, எனது - என்னுடைய, சாயுச்சம் என்பர் - சாயுச்ச பதவி என்று சொல்லுவார்கள். (எ—று) ஆல் - அசை. 'பரிசுத்த மது' என்பதில், 'அது' பகுதிப் பொருள் விகுதி (8)

ஆதியு நடுவுமந் தமுமி லாததொன்,
றேதது வெனிற்பா மீச னனநா,
னீதியி லெனையறி நிமல நிததனும்,
பேதமி லெனைப்பெறும் பிறவி பின்பெருன். (9)

(இ—ள்) ஆதியும் - முதன்மையும் (உத்பத்தி), நடுவும் – மத்தியமும் (திதி) , அந்தமும் – இறுதியும் (நாசம்), இலாதது - இல்லா திருப்பது, ஒன்று - ஒரு



பொருள், ஏது எனில் - யா தென்று கேட்கில், பரம் ஈசன் ஆன நான் - பரமேசுர னுகிய நா னுவேன், நீதியில் - கிரம மாக, எனை அறி - என்னை உணருகின்றவன், நின்மலன் - நின்மல மாகியும், நித்தன் ஆம் - நித்திய னுகியும், பேதம் இல் எனை- அபேத மாயும் உள்ள என்னை, பெறும் - அடைவன், பின் - (அதன்) பின்னர், பிறவி - ஜநநத்தினை, பெருன் - அடையான். (எ—று) (9)

தபநனெளி பெருகிரவி சசியுடுமி னடையச்,
சிவனிகழ்வி னிகழ்வுபெற சிறிதுமிவர் நிகழா,
ரவனுடைய வொளிகொடொரு வொளிதிகழு மசையா,
விவனதொளி சிறிதுபெறி லிவர்நிகழ்வு பெறுவார். 10

(இ—ள்) தபநன் – அக்நி, ஒளி பெருகு இரவி - மிகுந்த பிரகாசத்தினை உடைய சூரியன், சசி உடு - சந்திரன் நக்ஷத்திரங்கள், மின் அடைய - மின்ன லாகிய இவைகள். சிவன் நிகழ்வு இல் - பரமேசுரனுடைய விளக்க மில்லாமல், நிகழ்வு பெற - விளங்கும்படி யாக, இவர் சிறிதும் - இவர்கள் கொஞ்சமும், நிகழார் - பிரகாசஞ் செய்யமாட்டார்கள், அவ னுடைய - அந்த பரமேசுர னுடைய, ஒளி கொடு - பிரகாசத்தைக் கொண்டே. ஒரு ஒளி திகழும் - ஒன் றென்றற்கும் பிரகாச முண்டாகும், அசையா - சலந மின்றிய, இவனது ஒளி - இந்த பரமேசுர னுடைய பிரகாசத்தை, சிறிது பெறில்-கொஞ்சமேனு மடையில், இவர் - இந்த அக்நி சூரியன் சந்திரன் நக்ஷத்திரம் மின்னல் ஆகிய இவர்கள், நிகழ்வு பெறுவார் - விளக்கத்தினை யடைவார்கள் (எ—று) 'இவனது' என்பது ஆரும் வேற்றுமை விரி. (10)

உதியாம லென்று மொழியாமை நின்ற
வொளியாகி யென்று முளதாய்த்,
திதியாய்நி றைந்து தெளிவாகி யங்கோர்
செயலான தின்றி யருளான்.
மதியாளர் தங்க ளகமேய கண்ட
வடிவாய்நி கழ்ந்த வடிவே,
பதியாகி யென்று மழியாமை நின்ற
படியாகி நின்ற பரனுன். (11)

(இ—ள்) உதியாமல் - உற்பத்தியாகாமல், என்றும்- எப் பொழுதும். ஒழியாமை நின்ற - நாச மில்லா திருக்கின்ற, ஒளி ஆகி - பிரகாசத்தோடும், என்றும் உளது ஆய் - எப் பொழுதும் இருப்ப தாய், திதி ஆய் - ஸ்த்திர மாகி, நிறைந்து - பூரண மாய், தெளிவு ஆகி - விளக்கத் தினை உடைய தாய், ஓர் செய லானது இன்றி - ஒரு வித கிரியையும் அற்று, அருளால் - கிருபையினுலே, மதியாளர் தங்கள் - புத்திமான்களது, அகம் ஏய் - மநதில் பொருந் திய, அகண்ட வடிவு ஆய்- அகண்ட சொருப மாக, நிகழ்ந்த வடிவே - விளங்குகின்ற சொருபமே பதி ஆகி - தலைவ னுகி, என்றும்-எப் பொழுதும், அழியாமை நின்ற படி - நித்தியமா யிருந்த பிரகாரமே, ஆகிநின்ற - இருக் கும், பரன் நான் - பரமேசுரன் நா னுகின்றேன். (எ—று) அங்கு - அசை. 'செயலானது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. 'மதியாளர் தங்கள்' என்பதில், தம் அசை. (11)

நித்தம நந்த நிட்கள மின்ப நிமலஞ்சற்
சித்தமு தந்தற் சிவமெனும் வேதத் திரளெல்லாஞ்,



சுத்தனை யந்தச் சுருதியி னந்தத் துணிநெஞ்சத்,
துத்தமர் தந்த முளமது ணர்ந்தா ரோமென்றே. (12)

(இ—ள்) நித்தம் - நித்தியம், அநந்தம் - அநந்தம், நிட்களம் - நிஷ்களம், இன்பம் - இன்பம், நிமலம் - நின் மலம், சத் சித்து அமுதம் - சச்சிதாநந்தம், தது - அது வென்றும், சிவம் - மங்கள ரூபம், எனும் - என்று கூறும், வேதத் திரள் எல்லாம் - வேதத்தின் தொகுதிகள் யாவும். சுத்தனை - பரிசுத்த னை பரமேசுரனை, அந்த சுருதியின் அந்தம் - முன் சொல்லப்பட்ட வேதத்தின் முடிவினை, துணிவு-நிச்சயித்த, நெஞ்சத்து உத்தமர் - மநதினை உடைய ரிஷிகள், தம் தம் - தங்கள் தங்களது, உளமது - உள்ளத் தின்கண்ணும், ஓம் என்று - ஓங்கார சொருபம் என்று, உணர்ந்தனர் - அறிந்தார்கள். (எ—று) ஏ அசை. 'உள மது' என்பதில்- அது பகுப் பொருள் விகுதி, (12)

தாரா காயம் பவநம்புத் தானந லல்லனீ ராதார,
னோரா தானபி ராணு தியெல்லா வாயுவி னுருவல்ல,
னோரா காசன் மநம்புத் தியுறுமொ ருசேதந மவனல்
லன்,
பாரா காச யோகத்திற் கேவல னுகும் பரமீசண். (13)

(இ—ள்) தார் - பிருதிவி, ஆகாயம் - ஆகாயம், பவநம் - வாயு, புந்தம் - எல்லாவற்றையும் தகிக்கின்ற, அநல் - அக்கினி, நீர் அல்லன் - அப்பு ஆகிய பஞ்ச பூதங் களும் யா னல்லன், ஆதாரன்-இந்த பஞ்ச பூதங்கட்கும் ஆதாரமா யுள்ளவன், ஓராது ஆன-சட மான, பிராணுதி- (உசுவாச நிசுவாசஞ்) செய்வ தான, பிராணன் முதல்,

எல்லா வாயுவின்-கூர்ம நிருதியாக வுள்ள எல்லா வாயுக் களினது, உருவு அல்லன் - ஸ்வரூபமு மல்லன், ஓர் - ஒப் பற்ற, ஆகாசன் - மே லான ஆகாய ரூபத்தை யுடைய வன், மநம் - மநமும், புத்தி - புத்தியும், உறு-பொருந்திய, ஒரு சேதநம் - ஒப் பற்ற சைதந்யமும், அவன் அல்லன். அவன் ஆகான், பாராகாச யோகத்தில் - பரமாகாச யோக த்தின்கண், கேவலன் ஆகும் - கேவல ஸ்வரூப முடைய, பரம் ஈசன் - பரமேசுரன் நா னுகின்றேன். (எ—று) புத் தான் என்பதில் ஆன்-விகுதி. தரை என்பது தாரா-ஐ காரம் குருகி, தானன நீட்டல் விகார மாயிற்று. (13)

எல்லாவே தத்துமறைந் திருப்பதுவா யாவர்க்குஞ்,
சொல்லாத பரஞாந முங்களுக்குச் சொன்னேனு,
னல்லானிப் பரயோக ஞாநத்தா லேநலிவொன்,
றில்லாத விடத்தடைவா னெனவியம்பி யருளினுன் 14

(இ—ள்) எல்லா வேதத்தும்- நான்கு வேதங்களி லும், மறைந்து இருப்பது ஆய் - ரகசிய மாக இருக்கின்ற தாகும், யாவர்க்கும் - எப்படிப்பட்டவர்க்கும், சொல் லாத-சொல்லக் கூடாத காகிய, பர ஞாநம் - பிரம ஞாநத் தினை, நான் - (பரமேசுர னுகிய) நான், உங்களுக்கு - (சௌநகாதி ரிஷிக ளாகிய) உங்களுக்கு, சொன் னேன் - உபதேசஞ் செய்தேன், நல்லான் - சிரேஷ்ட முடைய வித்வான், இப் பர யோக ஞாநத்தாலே - இந்தப் பிரம யோக ஞாநத்தினுலே, ஒன்று நலிவு - ஒரு வித துன் பமும், இல்லா இடத்து - இல்லாத ஸ்தாநத்தை, அடை வான் - அடைவான், என - என்று, இயம்பி அருளினுன்- திரு வாய் மலர்ந் தருளினுன். (எ—று) (14)

10 தத்துவ தரிசந அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் (251)



## 11. யோக அத்தியாயம்

இடர்ப்படு பிறவி தீர்க்கு மியார்க்குமெட் டாத தாகி,
யுடைத்தன தொளியி னுலே யொளிர்வதா யுள்ள ஞாநச்
சுடர்த்திரு வுருவ மான சொரூபனை யாதொன் றுலே,
கிடைத்திடு மந்த யோகங் கேண்மினென் றருளிச் செய்தான். (1)

(இ—ள்) இடர்ப்படு - துன்பத்தில் மூழ்கி யிருக் கும், பிறவி - ஜன்மத்தினை, தீர்க்கும் - நிவிர்த்திப்ப தாயும், யார்க்கும் - எப்படிப்பட்டவர்கட்கும், எட்டாதது ஆகி - அறிய முடியாத தாயும், உடை - உள்ள, தனது - தன்னு டைய, ஒளியினுலே - (பூரணப்) பிரகாசத்தினுலே, ஒளிர் வது ஆய் உள்ள - விளங்கிக் கொண்டிருக்கின்ற, ஞாந சுடர்-ஞாநப் பிரகாச மாகிய. திரு உருவம் ஆன - திவ்ய மங்கள ரூப மான, சொருபனை - சொருபாநந்த ஸ்வாமிக ளென்னும் (சேதந சொரூபத்தை), யாது ஒன்றுலே- எந்த ஞாநத்தினுலே, கிடைத்திடும் - அடையப்படுமோ அந்த யோகம் - அந்த யோகத்தினை, கேண்மின் என்று - கேட் பீர்க ளாக என, அருளிச் செய்தான் - (பரமேசுரர் சௌ நகாதி ரிஷிகட்கு) உபதேசித்தார். (எ—று) 'ஒளிர்வது' 'எட்டாதது' என்பவற்றில், அது பகுதிப் பொருள் விகுதி. (1)

யோக வெரியோ ரிமைப்பிலே
யாது வினையுமெ ரிப்பதாம்,
தேக மொழியுமிம் முத்தியே
சேரு முணர்வு சேிப்பதா,

மியோக முணர்வை யொழித்துரு
யோக மொழியவு ணர்ச்சிதா,
ஞகு தலவீது ளத்துளா
னியாவ னவனே யளிப்பஞன். (2)

(இ—ள்) யோக எரி - யோக அக்கினியானது, ஓர் இமைப்பிலே - ஒரு க்ஷணத்திலே, யாது வினையும் - எப்படிப்பட்ட பாப புண்ணிய கன்மங்களையும், எரிப்பது ஆம் - பஸ்பஞ் செய்வ தாம், தேகம் ஒழியும் - (அதனுல்) சரீரம் நாச மாம், இம் முத்தியே சேரும் - இந்த மோக்ஷத்தையே அடையாகின்ற, உணர்வு - ஞாந மானது, செனிப்பது ஆம் - உண்டாவ தாம், யோகம் - யோக மானது, உணர்வை - ஞாநத்தை, ஒழித்து - விட்டு, உரு - இராது, யோகம் ஒழிய - யோகத்தை விட்டு, உணர்ச்சி - ஞாநம், ஆகுது அல - இராது, ஈது உளத்து உளான் யாவன் - இவ் விரண்டையும் மநதின்கண் அறிந்திருப்பவன் யாவனே, அவனே - அவனே, நான் அளிப்பன் - நான் இரக்ஷிப்பேன். (எ—று) தான் அசை. (2)

ஒருகா லிருகான் முக்கான்மற்
றுள்ள கால முள்ளத்தை,
வருகா தலினு லியோகத்தே
வைப்பார் மகேச ரெனப்படுவா,
ரரிதா மிதனை மாயோக
மவாப யோக மெனவறிஞ
ரிருபா லாக வியம்புவரவ்
விரண்டு மிருக்கும் படிகேண்மோ, (3)

(இ-ள்) வரு காதலினுல்-உண்டாகின்ற பிரியத்தினுல், ஒரு கால்-ஒரு காலமாகிலும், இருகால்-இரு காலமாகிலும், முக்கால் - மூன்று கால மாகிலும், மற்று உள்ள காலம்-சதா காலமும், உள்ளத்தை - மநத்தினை, யோகத்து - யோகத்தில், வைப்பார் - அப்யாசிப்பவர்கள், மகேசர் எனப்படுவார் - மகேசுவர ரென்று சொல்லப்படுவார்கள், அரிது ஆம் இதனை - அருமை யான இந்த யோகத்தினை, மா யோகம் என - மஹா யோகம் என்றும், அபாவ யோகம் என - அபாவ யோகம் என்றும், அறிஞர் - மஹான்கள், இருபால் ஆக - இரண்டு பிரிவாக, இயம்புவர் - கூறுவார்கள், அவ் விரண்டும் - அந்த இரண்டு வித யோகமும், இருக்கும்படி - இருக்கின்ற தன்மையை, கேண்மோ - கேட்பீர்க ளாக. (எ—று) ஏ-அசை. (3)



தானினையு மாறரிய தத்துவமி யாதொன்,
றுனிகழ்வ தாகுமத பாவமெனு மியோகம்,
வானியல தாகியொரு வத்துவுமி லாதாஞ்,
சூனிம தாகவறி கின்றனர்க டூயோர். (4)

(இ—ள்) தான் நினையும் ஆறு - தான் ஸ்மரித்த பிரகாரம், அரிய - அருமை யான, தத்துவம் - தத்துவமானது, யாது - எந்த வஸ்த்து, ஒன்றுல் - ஏக பாவனையினுல், நிகழ்வது ஆகும் - விளங்குகின்றனவோ, அது - அதனை, அபாவம் எனும் யோகம் - அபாவ யோகமென்று சொல்லப்படும், வான் இயலது ஆகி - ஆகாயம் போன்ற சொருப முடைய தாய், ஒரு வத்துவும் - யாதொரு வஸ்த்துவும், இலாது ஆம் - பிரதீதியாகாததாயுள்ள, சூநியமது ஆக - சூநிய மாய், தூயோர் - பரிசுத்த முடைய மகான்கள், அறிகின்றனர்கள் - உணருகின்றூர்கள். (எ—று) 'இயலது' 'சூநியமது', என்பவற்றில், அது பகுதிப் பொருள் விகுதி. (4)

மயலிலா யாதிலொரு மலமிலா தானசுக
வடிவதா மாசி லொளியா,
மயலிலா வேகவெனே யயலெனு தேகமென
வறிகைமா யோக மதுவா,
முயலுமா ருசையென முடிவிலா நூல்கள்பல
மொழியுமியோ காட வியெலா,
மியலுரு தாமரிய விதனிலோர் சோடசியு
மிசையுரு தாகு மியல்பால். (5)

(இ—ள்) மயல் இலா - மயக்கம் இன்றிய, யாதில் - எதனில், ஒரு -ஒரு வித, மலம் இலாது ஆன - தோஷமும் இல்லாத தாகிய, சுக வடிவது ஆம் - ஆநந்த ரூப மான, மாசு இல் - குற்ற மின்றிய, ஒளி யாம்- பிரகாசமா யுள்ள, அயல் இலா — அந்நிய மின்றிய, ஏக எனே - ஏக மான என்னே, அயல் எனுது - அந்நிய மாகக் கருதாது, ஏகம் என அறிகை - ஏக ரூப மாக உணர்தல், மா யோகமது ஆம் - மஹா யோகம் என்று சொல்லப்படும், ஆசை என- விருப்பத்தோடு, முயலும் ஆறு - முயர்ச்சி செய்யும்படி யாக, முடிவு இலா - அளவிடகூடாத, பல நூல்கள் மொழியும் - (அநேக யோக) சாஸ்திரங்கள் கூறும், யோக- அடவி - யோகக் கூட்டங்கள், எலாம் - யாவும், அரிய - அருமை யான, இதனில் - இந்த ஞானத்திற்கு மே லாக, இசை உருது ஆகும் - பொருந்தாதன வாகிய, இயல்பால் - தன்மையினுல், ஓர் சோடசியும் - ஒரு பதி னுறில் ஒரு பாகமும், இயல் உருது ஆகும் - சம மாகச் சொல்ல முடி யாத தாகும். (எ—று) 'சுகவடிவது', மாயோகமது' என் பவற்றில், அது பகுதிப் பொருள் விகுதி. (5)

சுத்தமா யென்னேக் கண்டெத்
தோற்றமுந் தோன்ரு தான,



வுத்தம யோக மெல்லா
யோகிலும் பரம யோக,
மத்திர மின்றி யென்னே
யாயிரங் கோடி காலஞ்,
சித்தம தொருக்கி நாளுஞ்
சிந்தையிற் றிகழ்க் காணுர். (6)

(இ—ள்) என்னே - (பரமேசுர னுகிய) என்னே, சுத்தம் ஆய் - பரிசுத்த மாய், கண்டு, பார்த்து, எத் தோற்றமும் - எப்படிப்பட்ட பிரதீதியும், தோன்ருது ஆன - உண்டாகாத, உத்தம யோகம் - உத்தம மான யோகம், எல்லா யோகிலும் - எல்லா வித மான யோகத்திலும், பரம யோகம் - மே லான யோக மாம், அத்திரம் இன்றி - அவ் வாறு உணராது, என்னே - என்னே, ஆயிரம் கோடி காலம் - அநேக காலம், நாளும் - சதா, சித்தமது ஒருக்கி- மனதை அடக்கினுலும், சிந்தையில் - சித்தத்தின்கண், திகழக் காணுர் - சாக்ஷாத்கரியார்கள். (எ—று) 'சித்தமது' என்பதில், -அது-பகுதிப் பொருள் விகுதி. (6)

அயர்வறு யோகலா தறிகை யாதந,
மயலற விந்திய மடக்கல் வாயுவின்,
சயமிகு தியாநதா ரணேச மாதியு,
மியமமு நியமமு மெட்டு மங்கமாம்' (7)

(இ—ள்) அயர்வு அறு - துக்கம் இன்றிய, யோகு அலாது - ஞாநம் அல்லாமல், அறிகை - (ஞாநத்தை) அடைதற்கு சாதநம், ஆதநம் - ஆசநமும், மயல் அற - மயக்க மின்றி, இந்தியம் அடக்கல்-பிரத்யாகாரமும், வாயு வின் சயம் - பிராணுயாமமும், மிகு தியாநம் - மிகுதி

யான தியானமும், தாரணை - தாரணையும், சமாதியும் - சமாதியும், இயமமும் - இயமமும், நியமமும் - நியமமும், எட்டும் - (ஆகிய) எட்டும், அங்கம் ஆம் - ஞானத்திற்குப் (பகிரங்க) சாதனங்க ளாம், (எ—று) (7)

தருக்கி லாதபி ரமச்ச ரியமெய்,
வுரைக்கை கள்ளமொ ழிகையின் னுசெயா,
திருக்கை யாதொன்று மேருமை யென்றிவை,
சுருக்க மாகய மமென்று சொல்வரால். (8)

(இ—ள்) தருக்கு இலாத - (யாராலும்) ஆக்ஷேபிக்கப்படாத, பிரமசரியம் - பிரமசரியமும், மெய் உரைக்கை- சத்தியமும், கள்ளம் ஒழிகை - அஸ்தேயமும், இன்னு செயாது இருக்கை - அகிம்சையும், யாது ஒன்றும் எருமை - அபரிக்கிரகமும், என்ற இவை - என்று சொல்லப்பட்ட இவ் வைந்தையும், சுருக்கம் ஆக - சங்கிரகமாக, யமம் என்று சொல்வர் - இயமம் என்று சொல்லுவார்கள். (எ—று) ஆல் - அசை. (8)

மநத்தால் வாக்காற் காயத்தால்,
வாதை யாவ தியாதேனு
மனைத்தா ருயிர்க்குஞ் செய்யாத
தகிஞ்சை யாக வறிகவிது,
தனிற்றான் பரமாந் தருமமிலை
சாரு மின்பந் தானுமிலை,
யெனைத்தாம் விதியி லுயிர்க்கின்னு
செயினு மதுவு மினிதேயாம். (9)

(இ—ள்) மநத்தால் - மநத்தினாலும், வாக்கால் - வாக்கினாலும், காயத்தால் - காயத்தினாலும், யாதேனும் - எப்படிப்பட்ட, வாதையாவது - வாதையையும், ஆர் - நிறைந்த, அனைத்து உயிர்க்கும், சர்வ ஜீவர்கட்கும், செய்யாதது - செய்யாதிருப்பதுவே, அகிம்சை ஆக அறிக - அகிம்சை யாகும் என்று உணருவா யாக, இதுதனில் - இதைப் பார்க்கிலும், பரம் ஆம்-மே லான, தருமம் இலை- தருமம் இல்லை யாம், சாரும் - அடையாநின்ற, இன்பம் தானும் இலை - ஆநந்தமும் (வேறு) இல்லை, உயிர்க்கு- ஜீவருக்கு, விதியில் - (வேதத்தில் கூறி யுள்ள) விதி பூர்வமாக, எனைத்து ஆம் - எப்படிப்பட்டது ஆகிய, இன்னு செயினும் - இம்சை செய்யினும். அதுவும் இனிதே யாம் - அதுவும் அஹிம்சையே யாம். (எ—று) தன் தான் "தானும்" என்பதில், தன் தான் - அசை, (9)



உளவா றுரை செயரு னுரை
செயுமா றொழு குதருன்,
வளவாய் மைய தென நாடினர்
மதியான் மிகு முதியா,
ரளவா ரகி லமும் வாய்மையி
லுளதா தலி னதுதா,
னுளவா சக வினையா லுடை
யவனியா வையுமு டையான். (10)

(இ—ள்) உள ஆறு உரை செயல் - சத்திய மாகச் சொல்லுதலும், உரை செயும் ஆறு - சொல்லியபடியே, ஒழுகுதல் - நடந்து வருதலும், வள - வளமை பொருந்திய, வாய்மையது - சத்தியம் ஆம், என - என்று, மதியான் மிகும் - புத்தியில் சிரேஷ்ட மான, முதியார் - மேதாவிகள், நாடினர் - கருதினர்கள், அளவு ஆர் - பிரமாணங்களினாலே நிறைந் துள்ள, அகிலமும் - சர்வ பிரபஞ்சமும்,

வாய்மையில் - சத்தியத்திலேயே, உளது - இருக்கின்றது, ஆதலின் - ஆகையால், அது - (கூறிய) சத்தியத்தை, உள- உள்ள, வாசக வினையால் - வாக்கின் செயலினுலே, உடையவன் - உடையவன் (யாவனே), அவன் - அவன், யாவையும் - எல்லாவற்றையும், உடையான் - அடைந்தவ னுகின்றுன். (எ—று) தான் தான் தான்- அசை. 'வாய்மையது', அது பகுதிப் பொருள் விகுதி. (10

மறைவினி லாகினும் வலியினி லாகினும்,
பிறர்பொருள் வவ்வுதல் பெரிய கள்ளமாம்,
கறையுறு மரிவையர் திறங்க ளுவிலும்,
பிறழ்வற மறப்பது பிரம சாரமாம். (11)

(இ—ள்) மறைவினில் ஆகினும் - காணும லாயி னும், வலியினில் ஆகினும் - பலாத்காரத்தா லாயினும், பிறர் பொருள் - பிற ருடைய வஸ்த்துவை, வெளவுதல் - அபகரித்துக் கொள்ளுதல், பெரிய கள்ள மாம் - பெரிய ஸ்தேயமாம் (அஃதின்றியிருத்தல் அஸ்தேய மாம்), கறை யுறும் - குற்றம் பொருந்திய, அரிவையர் திறம் - ஸ்த்திரி களினது தன்மையினை (மந வாக்கு காயங்களினுல்,), கனுவி லும்-சொப்பநத்திலும், பிறழ்வு அற (மீண்டும் மீண்டும்) பிறட்சி இன்றி. மறப்பது - மறந்து விட்டு விடுவது, பிரம சாரம் ஆம் - பிரமசரியம் ஆகும். (எ—று) (11)

அரந்தைமுழுந் திடவாபத் தடைந்திடினு மன்பாலே,
யிரந்தொருவ னீந்திடினு மேராமை யேராமை,
வருந்திமநத் தாசையற மடக்குவான் மாசற்ற,
நிரந்தரமா மியமமிவை நியமமினி நிகழ்த்திடுவாம். (12)



(இ—ள்) அரந்தை - துன்பத்தின்கண்ணே, முழுந் திட - மூழ்தும்படி யாக, ஆபத்து-தரித்திரத்தினை, அடைந் திடினும் - உடையவனு யிருப்பினும், ஒருவன் - ஒரு வன், அன்பாலே - பிரியத்தினுலே, இரந்து-விரும்பி, ஈந்தி டினும் - கொடுப்பினும், ஏராமை -(திரவியத்தை) வாங்கா திருத்தல், ஏராமை (ஆம்) - அபரிக்கிரகம் ஆம், வருந்தி - வருத்த முற்று, மநத்து - மநதின்கண், ஆசை யற -ஆசை இன்றி, மடக்குவான் - தன் வய மாக்குதற் பொருட்டு, மாசு அற்ற - குற்ற மற்ற, நிரந்தரம் ஆம் - இடையீடின்றி செய்யத்தக்க தாம், இவை இயமம் - இவைகளே இயமம் என்று சொல்லப்படும், இனி - மேல், நியமம் - நியமத்தினை, நிகழ்ந்திடு வாம்-சொல்லு வாம். (எ—று) (12)

படர்தவம் வேதநூல் பயிறல் பத்தியாற்,
கடவுளை வழிபடல் கருதி நெஞ்சினே,
டுடலுறு தூய்மைசந் தோட மோங்கிய,
சுடர்மிகு நியமமாய்ச் சுருங்கச் சொல்வரால். (13)

(இ—ள்) படர் தவம் - விரிவாக உள்ள தவமும், வேத நூல் பயிறல் - சுவாத்தியாயமும், பத்தியால் - பத்தி யினுல், கடவுளை வழிபடல்-ஈசுவரப் பிரணிதாநமும், கருதி உறு - நினைக்கின்ற, நெஞ்சின் ஒடு - மநத்தினும், உடல் - சரீரத்தினதும், தூய்மை - செளசமும், ஓங்கிய - சதா கால மும் விளங்குகின்ற, சந்தோடம் - சந்தோஷமும். சுடர் மிகு - பிரகாசம் பொருந்திய, நியமம் ஆய் - (இவ் வைந் தையும்) நியமம் ஆக, சுருங்க சொல்வர் - சங்கிரக மாகச் சொல்லுவார்கள். (எ—று) ஆல் - அசை. (13)

பவமார் நோவு கெடநோன்பு
பலவா லாக்கை மெலிவிக்கை,
தவமா குவது வேதாந்தஞ்
சதருத் திரியந் தாரகமாஞ்,
சிவமா கியமந் திரம்பலவின்
செபமத் தியாயஞ் சிறந்துள்ள,
வவமா னதிலா வதன்பேத
மறிவா ரறையும் படிகேண்மோ. (14)

(இ—ள்) பவம் ஆர் - பிறவிக்கு ஏது வாகப் பொருந்தி உள்ள, நோவு கெட - வியாதி நாச மடைய, நோன்பு பல ஆல் - (கிருச்சிர சாந்திராயண முதலிய) அநேக விரதங்களினால், ஆக்கை மெலிவிக்கை - சரீரத்தைச் சுருங்கச் செய்தல், தவம் ஆகுவது - தவம் என்று சொல்லப் படும், வேதாந்தம் - வேதாந்த சாஸ்திரங்களையும். சதருத்திரியம் - நூறு ருத்திர ஸ்லோகங்களையும், தாரகம் ஆம், ஜந்மத்தினை கடத்தற்கு ஏதுவா யுள்ள பிரணவம். சிவம் ஆகிய மந்திரம் - பஞ்சாக்ஷரம் ஆகிய மந்திரங்கள், பலவின் - பலவற்றை, செபம் - செபித்தல். அத்தியாயம் - ஸ்வாத்தியாய மாம். சிறந்து உள்ள - (அந்த ஸ்வாத்தியாயத்தில்) மேன்மை பொருந்தி யிருக்கின்ற, அவம் ஆனது இலா - கெடுதல் இல்லாத, அதன் பேதம் - அந்த ஜெபத்தின் ஒன்றற் கொன் றுள்ள வேறுபாட்டை, அறிவார் - உணர்ந்தவர்கள், அறையும்படி - சொல்லு கின்ற பிரகாரம் (யாம் கூற), கேண்மோ - (நீங்கள்) கேட்பீர்க ளாக. (எ—று) 'ஆகுவது', ஆனது, என்பவற்றில், அது, பகுதிப் பொருள் விகுதி. (14)



வாசிக முபாஞ்சு மாநத மென்று
மதிலொரொவ் வொன்றினுக் கொன்று.
தேசுடைத் தென்று செப்பினா பிறர்க்குத்
தெரியவே செபித்திடுஞ் செபந்தான்,
வாசிக முபாஞ்சு வாயித ழடித்தன்
மாத்திர மாந்த மடங்கி,
யாசறச் சிந்தை செய்தலொன் றினுக்கொன்
றுயிர மடங்குநல் லனவாம். (15)

(இ—ள்) வாசிகம் - வாசிகம் என்றும், உபாஞ்சு - உபாஞ்சு என்றும், மாநதம் என்றும் - மாநதம் என்றும் மூன்று வித மான பேதமுடைய தாகச் சொல்லுவார்கள், அதில் - அம் மூன்றில், ஒரு ஒவ் ஒன்றினுக்கு ஒன்று - ஒப் பற்ற ஒன்றற்கு ஒன்று, தேசு உடைத்து என்று - உயர்வு உடையது என்று, செப்பினர் - சொன்னார்கள், பிறர்க்கு - பக்கத்தில் உள்ளவர்களுக்கு, தெரியவே - கேட்கும்படி யாக, செபித்திடும் - உச்சரிக்கின்ற, செபம் -செபமானது, வாசிகம் - வாசிக செபம் என்று சொல்லப்படும், வாய் இதழ்-வாயி லுள்ள உதடுகள், அடித்தல் மாத்திரம்- ஒன்றோ டொன்றுபட செபித்தல் மாத்திரம், உபாஞ்சு - உபாஞ்சு செபம் என்று சொல்லப்படும்- ஆசு அற -குற்றமற. சிந்தை - மநதினுள்ளேயே. அடங்கி செய்தல் - அடக்கத்தோடு செபித்தல். மாநதம் - மாநத செபம் என்று சொல்லப்படும், ஒன்றினுக்கு ஒன்று - (வாசிக செபத்தைப் பார்க்கிலும் உபாஞ்சு செபம் உயர்வுடையதும். உபாஞ்சு செபத்தைப் பார்க்கிலும் மாநத செபம் உயர் உடையதும். ஆகையால்) ஒன்றற்கு ஒன்று, ஆயிர மடங்கு - ஆயிரம் பங்கு, நல்லன ஆம் - விசேஷ முடைய தாகும். (எ—று) தான் - அசை. (15)

கூடின கொண்டலம் பாவங் கூடல்சந்
தோடமென் றறிஞராற் சொல்லப் பட்டதா,
லாடுறு தூய்மைதா னகம்பு றம்புள,
தோடம திரண்டையுந் துடைத்த லென்பரால். (16)

(இ—ள்) கூடின கொண்டு - பிராரத்த வசத்தால் கிடைத்தது கொண்டு, அலம் பாவங் கூடல் - போது மென்னும் திருப்தியோ டிருத்தல், சந்தோடம் என்று - சந்தோஷ மென்று (யதிருச்சா லாப சந்துஷ்டி) என்று, அறிஞரால் - புத்திமான்களால், சொல்லப்பட்டது - கூறப் பட்டிருக்கின்றது, அகம் - மநத்தும், புறம்பு உள - சரீரத் தும் உள்ள, தோடமது இரண்டையும் - மநத்தின்கண் ணுள்ள மலிந வாசனைகளையும், சரீரத்தின்கண் ணுள்ள வியர்வை துர் நாற்றம் முதலியவற்றையும், துடைத்தல் போக்குதல், ஆடு உறு தூய்மை – பொருந்தா நின்ற (பாஹ்ய ஆந்தர) சௌச மாம், என்பர் - என்று சொல்லுவார்கள், (எ—று) தான் - ஆல், ஆல் - அசை. 'தோடமது', அது, பகுதிப் பொருள் விகுதி. (16)

தோயமு மண்ணுமாக் கொண்டு சுத்தமாக்,
காயமே வியமலங் கழுவப் பட்டதாம்,
வாய்மைய மூதலதா மாநத்தி னுற்செயுந்,
தூய்மையை யுள்ளநற் றூய்மை யென்பரால. (17)

(இ—ள்) காயம் மேவிய - சரீரத்தின்கண் பொருந் திய, மலம் - மலத்தை, தோயமும் மண்ணும் ஆ(க) - ஜல மும் மண்ணும் ஆக, கொண்டு - கொண்டு, சுத்தம் ஆக - பரிசுத்தமாக, கழுவப்பட்டது ஆம் - கழுவுகின்றது (சரீர சௌச)மாம், வாய்மைய - சத்தியம், முதலது ஆம் - முத



லியவற்றைக் கொண்டு, மநத்தினுல் - மநத்தினலே, செயும் - செய்கின்ற, தூய்மையை - பரிசுத்தத்தினை, நல் - நல்ல, உள்ளம் - மநத்தினது, தூய்மை என்பர் - சௌசம் என்று சொல்லுவார்கள். (எ—று) ஆல் - அசை. (17)

கந்தநன் மலர்கொடு காய பூசனை,
வந்தனை செயல்புகழ் வாக்கின் பூசனை,
பந்தனை யறமநம் பத்தி யாற்செயுஞ்,
சிந்தனை நியதமுஞ் சிவன்றன் பூசையே. (18)

(இ—ள்) கந்தம் - சுகந்த வஸ்துக்களையும், நல் மலர் கொடு - உயர்ந்த புஷ்பங்களையும் கொண்டு, காய பூசனை - காயத்தால் செய்யப்படும் காயபூசையும், வந்தனை - தோத்திரம் முதலிய வழிபாடுகளை, செயல் - செய்வ தாகிய, புகழ் வாக்கின் பூசனை - புகழ்கின்ற வாக்கினுலே செய்யப் படும் வாக்கின் பூசையும், பந்தனை அற - பந்தம் நீங்க, பத்தியால் - பத்தியினுலே, நியதமும் - சதா காலமும், மநம் - மந மானது, சிந்தனை செயும் - சிந்தித்துக் கொண் டிருக்குத லாகிய மாநத பூசையும் ஆகிய இவைகள், சிவன் பூசையே (காயிக வாசிக மாநசிக மான) ஈசுவரப் பிரணிதா நம் என்று சொல்லப்படும். (எ—று) தன்-ஏ-அசை. (18)

புராதநரோ தியவியம நியமங்கள் புகன்றனமேற்,
பிராணனதின் யாமமது பேசுபிரா ணயாமம்,
விராவியுட லுறும்வாயு விளம்புவர்கள் பிராணனென,
நிரோதநமே செயலதனை நித்தலுமா யாமந்தான். (19)

(இ—ள்) புராதநர் - முதியோர்கள், ஓதிய - கூறிய, இயம நியமங்கள் - இயமம் ஐந்து வித மெனவும் நியமம்

ஐந்து வித மெனவும், புகன்றனம் - முன்னர் சொன்னேம், மேல் - இனி, பிராண னதின் யாம் மது - பிராண னுடைய நிரோதம், பேசு - சொல்லாநின்ற, பிராணுயாமம் - பிராணுயாம மாம், உடல் விராவி உறும் - சரீரம் முழுதும் வியாபித் துள்ள, வாயு- வாயுவை. - பிராணன் என- பிராணன் என்று, விளம்புவர்கள் - சொல்லுவார்சுள், அதனை - அந்த வாயுவை, நித்தலும் - சதா காலமும், நிரோதநம் செயல் - அடக்குதல் செய்வது, ஆயாமம்- ஆயாமம் என்று சொல்லப்படும். (எ—று) தான்-ஏ-அசை 'யாமமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி, 'பிராணனதின்' அது, பகுதிப் பொருள் விகுதி. ஆயாமம்- அடக்கல். (19)

மந்த முத்தம மத்திம மென்றுமிங்,
கந்த நல்லுயிர் யாமம றிபவர்,
சந்த முற்றச கற்பவ கற்பமாய்ச்,
சிந்தை யுற்றிரண் டாகவுஞ் செப்பினர். (20)

(இ—ள்) மந்தம் - மந்தப் பிராணுயாம மென்றும், உத்தமம் - உத்தமப் பிராணுயாம மென்றும், மத்திமம் என்றும் - மத்திமப் பிராணு யாமம் என்றும், இங்கு - இவ் விடத்து. அந்த நல் - அத் தகைய சிரேஷ்டம் பொருந்திய, உயிர் யாமம் - பிராணு யாமத்தை, அறிபவர்-உணர்ந்தவர்கள் (மூன்று பிரகார மாகக்) கூறினர்கள், சந்தம் உற்ற - (அதனை) சதா காலமும் பொருந்திய, சகற்ப - சகற்ப பிராணுயாம மென்றும், அகற்பம் ஆய் - அகற்பப் பிராணுயாம மென்றும், சிந்தை யுற்று - சித்தத்தின் கண் அறிந்து, இரண்டு ஆகவும் - இரு பேதமாகவும், செப்பினர் - (சிலர்) சொன்னர்கள். (எ—று) இங்கு அசை. 20



மந்த மாறிரு மாத்திரை மத்திமோத் தமங்க,
ளந்த வெல்லிரட் டிரண்டுடன் மாத்திரை யடக்கல்,
கந்த வேர்ப்புறுங் கம்பநங் கிளம்புகை யிவையா,
னந்த மாச்செயு மொன்றினுக் கொன்றுநன் மையதாம். (21)

(இ—ள்) இரு ஆறு மாத்திரை அடக்கல் - பனிரெண்டு மாத்திரை யளவு உச்சரித்து அடக்குதல், மந்தம் - மந்தப் பிராணுயாமம் என்று சொல்லப்படும், அந்த எல்(லை) — அந்தப் பனி ரெண்டு மாத்திரை யளவிலிருந்து, இரட்டு - (இரட்டிப் பாகிய இரு பத்தி நாலு மாத்திரை யளவு உச்சரித்து) அடக்குதல். மத்திமம் - மத்திமப் பிராணு யாமம் என்று சொல்லப்படும், அந்த எல்(லை) - அந்த பனிரெண்டு இரு பத்தி நுலு மாத்திரையி லிருந்தும், இரண்டுடன் மாத்திரை-இரட்டித்தலாகிய முப் பத்தியாறு மாத்திரை யளவு உச்சரித்து, அடக்கல் - (பிராணனை) அடக்குதல், உத்தமம் - உத்தமப் பிராணுயாம மென்று சொல்லப்படும், கந்தம் வேர்ப்பு - (மந்தப் பிராணுயாமத்தினுல்)கழுத் தடி வெயர்வை, உறும் - உண் டாகும், கம்பநம் - (மத்திமப் பிராணு யாமத்தினுல் சரீர நடுக்கம்) உண்டாகும், கிளம்புகை - (உத்தமப் பிராணுயாமத்தினுல் உடல்) மேலே எழும்புதல் உண்டாகும், இவை-இவைகள், ஆநந்தம் ஆ செயும் - ஆநந்தத்தினை உண்டாக்கும், ஒன்றினுக்கு ஒன்று - (மேற் கூறியவைகள்) ஒன்றுக் கொன்று, நன்மையது ஆம் - உயர்வு உடையன வாம். (எ—று) 'நன்மையது' அது பகுதிப் பொருள் விகுதி. 21

அகற்ப மல்லதா மந்திர மகத்திலே
யானவா யாமந்தான்,

சகற்ப மாம்வியா கிருதியோங்
காரஞ்சா வித்திரி தனைமுக்கால்,
வகிக்கு மெல்லையா மிடம்வலம்
வழங்கிய வாயுவை வலமாக,
முகக்க வென்றறிந் தவரியோ
கத்திலே முயன்றிட மொழிந்தாரால். (22)

(இ—ள்) அல்லது அகற்பம் ஆம் - பிரணவ முதலிய மந்திர செபம் அல்லாத தாகியது அகல்ப பிராணாயாமம், மந்திரம் - (பிரணவ முதலிய) மந்திரத்தினால், அகத்திலே ஆன - மநதின்கண் உண்டான, ஆயாமம் - நிரோதநமே, சகற்பம் ஆம் - சகற்பப் பிராணாயாமம் என்று சொல்லப்படும், வியாகிருதி - வியாகிருதியோடும். ஓங்காரம் - பிரணவத்தினோடும், சாவித்திரிதனை - (சிரசொடு கூடிய) சாவித்திரி மந்திரத்தினை, முக் கால் -மூன்று முறை, வகிக்கும் - செபிக்கும் (மாத்திரையின்), எல்லை ஆம் - அளவு கூறி இருக்கிற தாக, இடம் - ரேசக மாக, வலம் - வழங்கிய வாயுவை - பூரக மாக வழங்குகின்ற பிராணனை, வலம் ஆக முகக்க - கும்பகஞ் செய்க, என்று - என, அறிந்தவர் - (பிராணாயாமத்தை) உணர்ந்தவர்கள், யோகத்திலே - யோகத்தின் கண், முயன்றிட - அப்யாசிக்கும்படி, மொழிந்தார் - கூறினார்கள். (எ—று) தான் -ஆல்-அசை. 'சாவித்திரி தனை? என்பதில், தன் அசை. (22)

ஏசது ருமலிடத்தில்வ ழங்குகை,
மாசது ருமல்வ லத்தினில் வாங்குகை,
யாசத றத்திதி யாகவ டக்குகை,
ரேசக பூரக கும்பக மென்றார். (23)



(இ—ள்) ஏசது உருமல்-(யா தொரு) குற்றமு மில்லாது, இடத்தில் வழங்குகை - இடது நாசியில் பிராணனை விடுதல், ரேசகம் - ரேசகப் பிராணாயாமம் ஆகும், மாசது உருமல் - குற்ற மில்லாமல், வலத்தினில் - வலது நாசியில், வாங்குகை - (இடது நாசியில் விட்ட பிராணனை) வலது நாசியில் இழுத்தல், பூரகம் - பூரகப் பிராணாயாம மாம், ஆசு அது அற - குற்ற மற, திதி யாக - நிலை யாக, அடக்குகை- (ரேசக பூரக மாகச் செய்த பிராணனை) ஸ்தம்பிக்கச் செய்தல், கும்பகம் - கும்பகப் பிராணாயாம மாம், என்றார்- என்று கூறினார்கள். (எ—று) 'மாசது' ஆசுஅது, அது, பகுதிப் பொருள் விகுதி. (23)

இந்திய மீட்சி தானே யிசைந்திடும் பிரத்யா காரங்,
கந்தர மிதய நெற்றி கபாலநா பிகளி லொன்றிற்,
சந்ததஞ் சிந்தை வைக்கத் தாரனை தரித்த தேக,
சிந்தனை யொழுங்கொன் றேடே சேர்ந்தது தியாந
மாமே. (24)

(இ—ள்) இந்தியம் - இந்திரியங்களை, மீட்சி தானே- விஷயங்களில் செல்ல (ஒட்டாது) திருப்புதலே. இசைந்திடும் - பொருந்தாநின்ற பிரத்யாகாரம் - பிரத்யாகரம் என்று சொல்லப்படும், கந்தரம் - கழுத்தி லாவது, இதயம்- இருதயத்தி லாவது, நெற்றி - நெற்றியி லாவது, கபாலம் - சிரசி னுச்சியி லாவது, நாபிகளில் - நாபி ஸ்த்தாநத்தி லாவது, ஒன்றில் சந்ததம் - ஓர் லக்ஷியத்தில் சதா காலமும், சிந்தை வைக்க - சித்தத்தை நிறுத்தி, தரித்தது - பொருந்தி யிருத்தல், தாரணை - தாரணை என்று சொல்லப் படும், ஒழுங்கு-கிரம மாக, ஏக சிந்தனை-ஏக மாகிய வஸ்த்

துவைச் சிந்தித்து, ஒன்றோடு சேர்ந்து - அபேத மாக இருத்தல், தியானம் ஆம் - தியானம் என்று சொல்லப்படும். (எ—று) ஏ-ஏ-அசை 'மீட்சி தானே' என்பதில், தான் - அசை. (24)

ஓதுமா லம்பந மொன்று மின்றியே,
போதமும் போதகப் பொருளு மென்றுணர்,
பேதம தன்றியே யிருந்த பெற்றிநற்,
சாதந மாகிய சமாதி யென்பரால். (25)

(இ—ள்) ஓதும் - சொல்லாநின்ற, ஒன்றும் - ஒரு வித மான, ஆலம்பநம் - பற்றுக்கோடும், இன்றி - இல் லாது, போதமும் - ஞாநமும், போதகப் பொருளும் - (ஞாதுருவும்) ஞேயமும், என்று உணர் - என அறி கின்ற, பேதமது அன்றி - பேத பாவனை இன்றி, இருந்த பெற்றி - (அபேத மாக) இருக்குந் தன்மையை, நல் - சிரேஷ்டம் பொருந்திய, சாதநம் ஆகிய - சாதந மாகிய, சமாதி என்பர் - சமாதி என்று சொல்லுவார்கள். (எ-று) ஏ-ஏ ஆல்-அசை. 'பேதமது', அது, பகுதிப் பொருள் விகுதி. (25)

தாரணை யாயா மத்திற்
றகுதிபன னிரும டங்காந்,
தாரணை தன்னிற் றியாநந்
தானுமப் படியே நன்றுந்,
தாரணி தன்னின் ஞாந
சாதந மாஞ்ச மாதி,
யேரணி தியாநந் தன்னி
லேறறமிப் பரிசே யென்பர். (26)



(இ—ள்) தாரணை - தாரணை யானது, ஆயாமத்தில்- நிரோதத்தைக் காட்டிலும், பன்னிரு மடங்கு - பன் னிரெண்டு பங்கு, தகுதி யாம் - உயர் வுடைய தாகும், தாரணை தன்னில் - தாரணையைக் காட்டிலும். தியாநந் தானும் - தியாநமும், அப்படியே - அவ் வாறே (பன் னிரண்டு மடங்கு), நன் றும் - உயர் வுடைய தாகும், தாரணிதன்னில் - பூமியின்கண், ஞாந சாதநம் ஆம் - ஞாநத்திற்குச் சாதந மாகிய, சமாதி - சமாதி யானது. ஏர் அணி - உயர்வு பொருந்திய, தியாநந்தன்னில் - தியாத் தைப் பார்க்கிலும். இப் பரிசே-இவ் வாறே பன் னிரண்டு மடங்கு, ஏற்றம் என்பர் - உயர் உடையது என்று சொல் லுவாகள், (எ—று) 'தாரணை தன்னில்' என்பதில், தன், "தியாநந்தானும்" என்பதில், தான், "தாரணி தன்னில்" என்பதில், தன், 'தியாநந்தன்னில்' என்பதில், தன்-அசை, தரணி, தாரணி என நீட்டல் ஆயிற்று. (26)

விவத்தி தம்பெற்றி ருக்கைவி ரைந்தெழுங்.
கவறறி தீர்வுறக் கற்பித்த வாதந
மவற்றி னெலலேய றைவரி தந்தநற்,
சுவத்தி கம்பத்ம மியாதுனுந் தூய்யவாம். (27)

(இ—ள்) விவத்திதம் - விவஸ்த்தை யாக, பெற்று இருக்கை - பொருந்தி இருந்து, விரைந்து - அதி விரை வாக, எழும் - உண்டாகின்ற, கவற்றி - சலநங்கள். தீர் வுற - நிவிர்த்தியாகும்படி, கற்பித்த - கற்பிக்கப்பட்டுள்ள, ஆதநம் - ஆசநங்க ளாம், அவற்றின் - அந்த ஆசநங்களின், எல்லை - அளவை, அறைவு அரிது - சொல்ல முடியாது (ஆகையால்), அந்த - அந்த ஆசநங்களில். நல்-உயர்ந்த,

சுவத்திகம் - ஸ்வஸ்த்திகாசநம், பத்மம் - பத்மாசநம் (அர்த்த ஆசநம் என்னும், மூன்றும்), யாதினுல் - எல்லா ஆசநங்களிலும், துய்ய ஆம்-பரிசுத்தமான தாம் (எ—று) (27)

இருதுடை மேலே யீரடி யேறும்,
பரமவி ருப்பது பதுமம தாகு,
மொருபத மேலே யொருபதம் வைக்க,
மருவவி ருப்பது மத்திம மாகும். (28)

(இ—ள்) இரு துடை மேல் - இரண்டு துடைகள் மீதும், ஈர் அடி யேறும் - இரண்டு பாதங்களேயும் ஏற வைத்து, பரம இருப்பது - பொருந்தியிருத்தல், பதுமமது ஆகும் - பத்மாசநம் என்று சொல்லப்படும், ஒரு பதம் மேல் - ஒரு பாதத்தின் மீது, ஒரு பதம் வைக்க - மற்ருெரு பாதத்தினே வைத்து, மருவ இருப்பது - பொருந்தியிருப்பது, மத்திமம் ஆகும் - அர்த்த ஆசநம் (அரை ஆசநம்) என்று சொல்லப்படும், (எ—று) 'பதுமமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி, ஏ-ஏ-அசை, (28)

தடித்த வூருசா நுக்களின் சந்துற
மடித்த வந்தாத் துள்ளேம றையவைத்
தடித்த லங்கள்செவ் வேசெல வாங்குறத்,
தொடுத்தி ருத்தல்சு வத்திக மாவதே (29)

(இ—ள்) தடித்த ஊரு - பருமனை தொடை, சா நுக்களின் - முழங்கால்க ளினது மத்தியில், சந்து உற - இடம் இருக்கும்படி யாக, மடித்த - மடிப் பாக உள்ள, அந்தரத்துள் - ஆகாயத்தில், அடித் தலங்கள் பாதங்கள், செவ்வே செல - நன்ருகப் பொருந்த, மறைய வைத்து - மறையும்படி செய்து, ஆங்கு உற தொடுத்திருத்தல் - அவ் விடத்து அமர்ந்திருத்தல், சுவத்திகம் ஆவது - ஸ்வஸ்த்தி காசநம் என்று சொல்லப்படும். (எ—று) ஏ-ஏ-அசை. (29)



நீரினுற் செழும்ப தானவவ் விடங்க
ணெருப்பினுல் வெந்தவவ் விடங்க,
ளூருசெந் துக்க டுற்சநர் துரால
ருதிர்ந்திடு சருகுபுற் றிடங்கள்.
கோரமாம் பயங்க ளுள்ளிட மிடிந்த
கோயினுற் சந்திகண் மயாந,
மாரவா ரங்க ளுள்ளிட மசுத்த
மலக்கணு மாகத்தினுக் கதனுல். (30)

(இ—ள்) நீரினுல் - ஜலத்தினுலே, செழும்பது ஆன - செழுமை யாக உள்ள, அவ் விடங்கள் - (குளிர்ச்சி பொருந்திய) அந்த விடத்திலும், நெருப்பினுல் - அக்நியால், வெந்த அவ் விடங்கள் - (வெந்து வெப்பமா யுள்ள) அந்த விடத்திலும், ஊரு செந்துக்கள் - சதா ஊர்ந்து திரிகின்ற (பாம்பு தேள் எரும்பு முதலிய) உள்ள இடத்திலும், துர்ச்சநர் - கெட்ட சநங்கள் வசிக்கப்பட்ட இடத்திலும், துராலர் - துரும்புகள் குவிந் துள்ள இடத்திலும், உதிர்ந்திடு சருகு - உதிர்ந்து கிடக்கின்ற வெண்மை யான சருகு க ளுள்ள இடத்திலும், புற்று இடங்கள் - புற்றுக்கள் உள்ள (பாம்புகள் இருக்கின்ற) இடத்திலும், கோரம் ஆம் - கோர ரூப மா யுள்ள புலி கரடி சிம்மம் முதலிய, பயங்கள் உள் ளிடம் - பீதிக்கு ஏதுவா யுள்ள இடத்திலும் - இடிந்த கோயில் - இடிந்து கிடக்கின்ற பாழுங்

கோயில்களிலும், நால் சந்திகள் - நான்கு பாதைகள் சேரு மிடத்திலும், மயாநம் - மசாநத்திலும், ஆரவாரங்கள் உள் ளிடம், - சதா சந்தடி யாக உள்ள இடத்திலும், அசுத் தம் - அசுத்த மான இடத்திலும், மநத்தினுக்கு - மநதிற்கு, அதனுல் - அவ் விடங்களினுல் (யோகாப்யாசஞ் செய்யும் காலத்து), அலக்கண் ஆம் - துக்கம் உண்டாகும். (எ—று) துராலம் - துரும்பு-துராலர் என வந்தது. (30)

வருத்தமா யுடல வாதையைப் பற்று
மநமது நடுநடுங் கிட்டுப்,
பொருப்பினிற் குகைகள் புண்ணிய தேசங்
கோயில்க ணதிகளின் கரைக,
ளிருப்பறு மனைதா ணூர்வது கடிப்ப
தின்றியே காந்தமா யுள்ள.
வொருத்தரு மறியா விடத்திலே யென்னை
யுன்னுவான் மநனெருப் படுவான். (31

(இ—ள்) உடலம் - சரீரம், வருத்தம் ஆய் - வருத் தத்தோடு, வாதையை பற்றும் - தொந்திரவைப் பொருந் தும், மநமதும் - மந மானதும், நடு நடுங்கிட்டு - நடுக்கத் துடன் பீதியையும் அடையும் (ஆதலால் இப்படிப்பட்ட விடங்கள் சமாதிக்கு யோக்கியமாகா). பொருப்பினில் - மலைகளின்மீதும், குகைகள் - குகைகளிலும், புண்ணிய தேசம் - (குரு க்ஷேத்திர முதலிய) புண்ணிய பூமியிலும், கோயில்கள் - (பரிசுத்த மான) ஆலயங்களிலும், நதிகளின் கரைகள் - நதி தீரங்களிலும், இருப்பு அறும் மனை - ஒருவரும் இல்லாது தனியா யுள்ள வீட்டிலும், ஊர்வது - கரையான் எரும்புகள் இல்லாத இடங்களிலும், கடிப்பது



இன்றி - (பன்றி நாய் நரி முதலியன) கடிக்கப்பட்ட பிராணிகள் இல்லாத இடத்திலும், ஏகாந்த மா யுள்ள - ஏகாந்த ஸ்த்தாநத்தில், ஒருத்தரும் - ஒருவரும், அறியா இடத்தில் - பார்க்கக்கூடாத இடத்தில், என்னை - (பரமேசுர னுகிய) என்னை, உன்னுவான் - தியாநித்தற் பொருட்டு, மநன் - மநத்தின், ஒருப்படுவான் - (ஏகரக்கிர மாகிய) சமாதியை அடைவான்- (எ—று) தான் - ஏ - அசை. 'மநமதும்' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. (31)

உன்னரு மியோகொருப் படுவன் முன்னரே,
யென்னருள் பெற்றயோ கீசர் தம்மையுஞ்,
சென்னியால் விநாயகன் றனையுந் தேசிகன்.
றன்னையு மென்னையும் வணங்கிச் சாருவான். (32)

(இ—ள்) உன்ன அரும் - (மநதால் இத் தன்மைத் தென்று) கருத முடியாத, யோகு - யோகத்தினை, ஒருப்படுவன் - (செய்ய) முயர்ச்சிப்பவன், முன்னர் - முதலில், என் அருள் பெற்ற - எனது கிருபையை அடைந் துள்ள, யோகீசர் தம்மையும் - யோகீசர்களையும், விநாயகன்தனையும் - (விக்கிந கர்த்தா வாகிய) கணேசரையும், தேசிகன் தன்னையும் - (தனது) குரு மூர்த்தியையும், என்னையும் - (பரமேசுர னுகிய) என்னையும், செந்நியால் - சிரசின்மீது இரு கைகளையும் கூப்பி, வணங்கி - நமஸ்கரித்து, சாருவான் - (ஆரம்பிப்பான்) பொருந்துவான். (எ—று) ஏ-யோகீசர் தம்மையும்', என்பதில், தம். 'விநாயகன் தனையும், என்பதில் தன். 'தேசிகன் தன்னையும்' என்பதில், தன் அசைகள். (32)

தனியி லிருந்து பயமின்றிச்
சாந்த னுகித் தனக்கிசையு,

முநிவர் மொழியு மாதநங்கண்
மூன்றி னுென்றி லேமுக்கி,
னுநியைச் சிறிதே கண் விழித்து
நோக்கி யாது நோககாதே,
யினிய தன்பா லேயிருந்த
வென்னைப் பாவிப் பதியோகம். 33

(இ—ள்) தனியில் இருந்து - எகாந்த ஞகை இருந்து, பயம் இன்றி-நிர்ப்பய ஞய், சாந்தன் ஆகி - (மநதில்) சாந் தியை உடையவ ஞய், முநிவர் மொழியும் - மகான்களால் சொல்லப்பட்ட, ஆதநங்கள் மூன்றில் - பத்மாசநம் ஸ்வஸ்த்திகாசநம் அர்த்தாசநம் ஆகிய மூன்றில், தனக்கு இசையும் - தனக்கு கைவந்த, ஒன்றில் - ஓர் ஆசநத்தில் அமர்ந்து, சிறிது கண் விழித்து, கொஞ்ச மாக கண்களைத் திறந்து, மூக்கின் நுனியை - நாசியின் நுனியை, நோக்கி - பார்த்து, யாதும் நோக்காது - மற்றவற்றைப் பாராது, இனிய தன்பால் - ஆநந்த சொரூப ஞகிய என்னிடத்து, இருந்த - இருக்கப்பட்ட, என்னை - என்னை. பாவிப்பது - தியாநிப்பது, யோகம் - யோகம் என்று சொல்லப்படும். (எ—று) ஏ-ஏ-ஏ-ஏ அசை. (33)

பங்கயந் தலைக்கு மேலே பன்னிரு விரலிற் கற்பிதத்,
தங்கதற் கறமென் மூல மறிவது நாள மாகுந்,
தங்கிடுஞ் செல்வ மெட்டுத் தளநிறந் தவள மாகு,
மிங்குதன் வலிவை ராக்கிய மெனப்படு தாதி தன்கண், 34

(இ—ள்) தலைக்கு மேலே-சிரசிற்கு மேலே, பன்னிரு விரலில் - பன் னிரண் டங்குல அளவில், பங்கயம் கற்பித்து - தாமரைப் புஷ்பத்தை கற்பனை செய்து, அங்கு அதற்கு - அவ்விடத்து அந்ததாமரை புஷ்பத்திற்கு, அறம் என் மூலம் - தர்ம மென்னும் கிழங்காம், அறிவு அது நாள மாகும் - ஞாந மாகிய கொடியாம், தங்கிடும் - (புண்ணிய வசத்தால்), பொருந்தி யுள்ள, செல்வம் - ஐசுவரியம், எட்டுத் தளம் - அஷ்ட இதழ்களாம், நிறம் தவளம் ஆகும் - அதன் வர்ணம் வெண்மை நிற மாம், இங்கு - இவ் விடத்து, தன் வலி-தன் னுடைய வலிமை பொருந்திய, வைராக்கியம் - வைராக்கியம், எனப் படும் - என்று கூறுவது. தாது - கர்னிகை யாம், இதன் கண் - இந்த தாமரை மலரில். (எ—று) 'அறிவது', அது, பகுதிப் பொருள் விகுதி. (34)



சகலசத் தியுமு டைத்தாய்த்
தமநிய மயமாய்த் தாரம்,
புகலுமெப் பொருளா யென்றும்
பொன்றுரு தாகி யெங்குந்,
திகழொளித் திரளா யுள்ள
தெய்வமாய்த் தெரிக்கொ ணுதாய்,
நிகழுதற் பரத்தி னேரே
நித்தலு நெஞ்சை வைப்பான். (35)

(இ—ள்) சகல சத்தியும் - சகல சத்திகளையும், உடைத்து ஆய் - உடைய தாய், தமநிய மயம் ஆய் - ஸ்வர்ண மய மாய், தாரம் புகலும் - பிரணவத்திற் சொல்லும், எப் பொருள் ஆய் - எல்லா வஸ்த்து வாகவும், என்றும் - காலத் திரயத்திலும். பொன்றுது ஆகி - நாச

மில்லாத தாய், எங்கும் - எல்லா இடங்களிலும், திகழ் - விளங்காநின்ற, ஒளித் திரள் ஆய் உள்ள - பிரகாசக் கூட்ட ரூபமா யுள்ள, தெய்வம் ஆய் - தெய்வ மாக, தெரிக்க - (அஞ்ஞாநிகளால்) அறிய, ஒண்ணாது ஆய் - முடியாத தாய், நிகழ - விளங்காநின்ற, தற் பரத்தில் - அந்தப் பிரமத்தினிடத்தில், நித்தலும் - நா டோறும், நேரே - சாக்ஷாத் தாக, நெஞ்சை - மநதை, வைப்பான்-வைத்துச் சிந்திப்பான். (எ—று) (35)

மிக்கபரஞ் சுடரான விமலனை யும் விளம்புற்ற
வக்கமலத தேதனையு மயலாகா வகைநினைவா,
னக்கரமாம் பரமாகா சத்துவனைத் தானெங்கு,
மொக்கநினைந் தேபின்னை யொன்றுநினை யாதொழிவான், (36)

(இ—ள்) விளம்புற்ற அக் கமலத்து - (முன்னர்க்) கூறிய அந்த தாமரை மலரில், மிக்க - உயர்வினை உடைய, பரம் சுடர் ஆன - பூரணப் பிரகாச மான, விமலனையும் - பிரமத்தினையும், தனையும் - (கூட்ஸ்த்த னாகிய) தன்னையும், அயல் ஆகா வகை - வேறுபா டின்றி, நினைவான் -(அபேத மாக) ஸ்மரிப்பவன், அக்கரம் ஆம் - அக்ஷர மாகிய, பரம் ஆகாசத்துவனை - சிதாகாச ரூபனை, எங்கும் - எல்லா விடங்களிலும், ஒக்க நினைந்து - வியாபக மாகப் பார்த்து, பின்னை - பின்பு, ஒன்றும் - யா தொன்றும், நினையாது - சிந்திக்காது, ஒழிவான் - அதிலேயே லயித்து இருப்பான். (எ—று) ஏ-தான்-ஏ-அசை, (36)

யாவரு மறிவரி தாய பாவனை,
மேவுற விளம்பினன் வேறு மின்னமோர்,



பாவனை கேண்மின்முன் பன்னு பங்கயப்,
பூவினை யுன்னியப் பூவி னுள்ளதாம். (37)

(இ—ள்) யாவரும் - ஒருவரும், அறிவு அரிது ஆய - உணர முடியாத தாகிய, பாவனை மேவுற - பாவனையைப் பொருந்த, விளம்பினன் - (உங்களுக்கு) கூறினேன், இன்னம் - மேலும், வேறும் ஓர் - வேறு ஒரு, பாவனை - பாவனையை, கேண்மின் - (யாம் கூறக்) கேளுங்கள், முன் பன்னு - முன்னற் கூறிய, பங்கயப் பூவினை - தாமரை மலரை, உன்னி - பொருந்தி, அப் பூவின் - அந்த தாமரை மலரில், உள்ள தாம் - உள்ள தாம்- (எ—று) (37)

அநிய மறவநலோனைக் காட்டிய,
பன்னிய புருடனும் பஞ்ச விஞ்சகன்,
றன்னையே சகலகத் தாவாத் தன்னுரு,
வன்னியின் சிகையதா மதித்து நோக்குவான், (38)

(இ—ள்) அநியம் அல - (அதில்) வேறுபாடு நீங்க, அநலோனை - அக்நி ரூப மாக, காட்டிய - தெரிசிப்பித்த, பன்னிய - முன்னர்க் கூறிய, புருடன் ஆம் - புருஷ னாகிய. பஞ்ச விஞ்சகன் - இரு பத் தைந் தாவது தத்துவ மாகிய, தன்னையே -(பிரம மாகிய) தன்னையே, சகல கத்தா வா(க) - சர்வத்திற்கும் கர்த்தா வாக, தன் உரு – தன்னுடைய சொருபத்தை, வன்னியின் - அக்கிநியினது, சிகையதா(க) - சிகை யாக, மதித்து - பாவித்து, நோக்குவான் - பார்ப்பான். (எ—று) 'சிகையது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. (38)

அவமறு புருடன்ற னகமுற வறநன்ருய்ச்
சிவமம லமதாகித் திகழ்தரு பரமாந்மா,

வுவமையில் பரனுமென் னுரையினி லுணருந்தத்,
துவநிலை குலையாவச் சுதமென மநம்வைப்பான். (29)

(இ—ள்) அவம் அறு - குற்ற மற்ற, புருடன் - புருஷனது, அகம் உற - மநதில் பொருந்தி, அறநன் ருய்- மிகவும் செவ்வை யாக, சிவம் - சிவ மானது, அமலமது ஆகி - நின்மல மாய், திகழ் தரு - விளங்காநின்ற, பரம ஆன்மா - பரமாத்மா வாய், உவமையில் - சமாந ரகித மான, பரன் ஆம் - பரமேசுர னுகிய, என் உரையினில் - என் வாக்கியத்தில், உணரும்-அறிந் துள்ள, தத்துவ நிலை- தத்துவத்தின் தன்மை, குலையா - கெடாத, அச்சுதம் என- அச்சுதம் என்று, மநம் வைப்பான் - மநதில் சிந்தித்துக் கொண் டிருப்பான். (எ—று) தன்-அசை. 'அமலமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. (39)

அப்பர மான்மா வுள்ளே யதனுக்கா தார மாகி,
நிற்பதாய்ப் பரம மாகி நிரஞ்சந மாகி யுள்ள,
வொப்பரு மகேச னேக வுருவனு யுன்னி யந்தத்,
தற்பரந் தன்னே டொன்றுந் தன்மைய னுகிச்
சார்வான். (40)

(இ—ள்) அப் பரமான்மா - அந்தப் பரமான்மா வானது, உள்ளே - உள்ளே, அதனுக்கு — ஜீவனுக்கு, ஆதாரம் ஆகி நிற்பது ஆய் - ஆதார மாகி இருந்து, பர மம் ஆகி - உயர்வினை உடைய தாய், நிரஞ்சநம் ஆகி உள்ள - களங்கம் இன்றி இருக்கின்ற. ஒப்பு அரும் - சமாந ரகித மான, மகேசன் - பரமேசுரனை, ஏக உருவன்- ஆய் - அத்வைத ரூப னுக, உன்னி - சிந்தித்து, அந்தத் தற் பரம் - அந்த பிரமத்தை, தன்னேடு - கூடஸ்தனேடு,



ஒன்றும் - அபேத மாகும், தன்மையன் ஆகி - தன்மையை உடையவ னுய், சார்வன்- ஐக்கிய மாவான். (எ—று) 40

சொன்னதத் துவங்க ளெல்லாஞ்
சோதனை பண்ணிப் பின்னைப்,
பிந்நதத் துவமொன் றில்லாப்
பிரமநா னெனநி னைந்து,
பன்னரு மோங்கா ரத்தாற்
பரமமாம் பரமா யுள்ள,
வென்னிலே தன்னை வைத்திங்
கென்மய மாகி யுள்ளான். (41)

(இ—ள்) சொன்ன தத்துவங்கள் - கூறிய தத்துவங் கள். எல்லாம் - யாவற்றையும், சோதனை பண்ணி - பிரித் துச் சோதித்துப் பார்த்து, பின்னை-பின்னர், ஒன்று-ஒரு, பிந்ந தத்துவம்-பிந்ந தத்துவமும், இல்லா-இல்லாத, பிர மம்-பிரமமே, நான் என நினைந்து - அஹம் என்று கருதி, பன்னரும் - சொல்லுதற்கு அரிய, ஓங்காரத்தால் - பிரண வத்தினுல், பரமம் ஆம் பரம் ஆய் உள்ள - மேலுக் கெல்லாம் மே லாய் உள்ள, என்னில் - (பிரம ரூப மாகிய) என்னில், தன்னை வைத்து - கூடஸ்த்தனை ஐக் கியஞ் செய்து, இங்கு - இவ் விடத்து, என் மயம் ஆகி - எனது சொருப மாய், உள்ளான் - இருப்பன். (எ—று) ஏ - அசை. (41)

நலங்கொள் ஞாநநீ ராடிநல் லாகுதி,
துலங்கு நீற்றையுத் துளித்து மந்திர,
மிலங்கு மங்கிமு தனினைந் தீசனைப்
புலங்கொள் சோதியின் புஞ்சமா யுன்னுவான். (42)

(இ—ள்) நலங் கொள் - நன்மையைக் கொடுக்கின்ற, ஞானம் நீர் ஆடி - ஞான மாகிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, நல் ஆகுதி துலங்கும் - நல்ல அக்நிஹோத்திரத்தில் விளங்குகின்ற, நீற்றை - விபூதியை, இலங்கும் - விளங்காநின்ற, அங்கி முதல் - 'அக்கிரி ராத்திய' என்பதாதி யான, மந்திரம் நினைந்து - மந்திரத்தைச் சொல்லி, உத்தூளித்து - (சரீர முழுமையும்) உத்தூளந மாகப் பூசி, ஈசனை - பரமேசுரனை, புலம் கொள் - (அந்தக் கரணத்தில்) அறிவிற் கொள்ளும்படி யான, சோதியின் புஞ்சம் ஆய் - பிரகாசக் கூட்ட மாய், உன்னுவான் - சிந் திப் பா ன். (எ—று) (42)

ஆசிரம மேலிலதி யாசிரம மாகத்,
தேசுதரு மாமறையி னீறுகடெ ரிந்தே,
பாசுபத யோகுபசு பாசமற நேரே,
பேசினனி தாருமறி யப்பெறும தன்றால். (43)

இ—ள்) ஆசிரமம் மேல் இல் - இதற்கு மேல் ஆசிரமம் இல்லாத, அதி ஆசிரமம் ஆக - அத்யாசிரம மாய், தேசு தரு - பிரகாசம் பொருந்திய, மா மறையின் - பெரிய வேதங்களினது. ஈறுகள்-முடி வாக உள்ள வேதங்களால், தெரிந்து - அறிந்து, பாசு பத யோகு - பாசு பத யோகத்தினால், பசு - ஜீவனு(க்)குள்ள, பாசம் அற - பாசம் எல்லாம் நீங்க, நேரே - (உங்களுக்கு) நேரே, பேசினன் - (நான்) உபதேசித்தேன், இது ஆரும் - இதனை எவரும், அறியப் பெறுமது அன்று - அறியத் தக்க தன்றாம். (எ-று) ஏ-ஆல்-அசை, 'அறியப் பெறுமது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. (43)



பிறிதறு மெனதுசா யுச்சம் பேறதா,
மறைபொருள் கேவலம் வழங்கி டாரிது,
வறமுய லந்தணர் தம்மி லன்பரிற்,
றுறவுறு பிரமசா ரிகட்குஞ் சொல்லலாம். (44)

(இ—ள்) பிறிது அறும் - பேத பாவனைகள் நீங்கிய, எனது சாயுச்சம்-என் னுடைய சாயுச்ச மாகிய, பேறது ஆம் - பிரயோஜநம், மறை பொருள் - (இது) இரகசிய மான, அர்த்த மாம், கேவலம் வழங்கிடார் - கேவலம் (எல்லாருக்கும்) சொல்லமாட்டார்கள், இது - இதனை, அறம் முயல் - தர்மத்தில் பிரவிர்த்திக்கின்ற, அந்தணர் தம்மில் - பிராமணர்கட்கும், அன்பரில் (எனது) பத்தர்கட்கும், துறவு உறும் - துறவினை யடைந் துள்ள, பிரமசாரிகட்கும் - பிரமச்சாரிகளுக்கும், சொல்லல் ஆம் - உபதேசிக்க லாம். (எ—று) 'அந்தணர் தம்மில்' என்பதில், தம், அசை. 'பேறது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. (44)

பரியும கிஞ்சைப் பழிதீர் பிரம,
சரியந் தவந்தரு சந்தோட முண்மை,
யுரியபொ றைதூய்மை யுண்டென்றி ருக்கை,
யரியவி ரதத்துக் கங்கங்க ளாமால். (45)

(இ—ள்) பரியும் - விரும்பத் தக்க, அகிம்சை-அகிம்சையும், பழி தீர் - குற்ற மற்ற, பிரமசரியம் - பிரமசரியமும், தவம் - தவமும், தரு - உண்டாகின்ற, சந்தோடம் - சந்தோஷமும், உண்மை - சத்தியமும், உரிய - உரிய தாயுள்ள, பொறை - க்ஷமையும், தூய்மை - (சரீர மநோ) சௌசமும், உண்டு என்று இருக்கை - ஆஸ்திக்யமும்

(தபமும்) ஆகிய இவை, அரிய - அருமை யான, விரதத்துக்கு - தவத்திற்கு, அங்கங்கள் ஆம் - அங்கங்க ளாம், (எ—று) ஆல்-அசை. (45)

எண்ணிய விவற்றிலொன் றீந னுனவன்,
றண்ணிய னுதலாற் றுன்ன முவினுன்,
புண்ணிய வினையினேர் பொருந்த வென்னையே,
கண்ணிய விரதமெஞ் சாமற் கைக்கொள்வார். (46)

(இ—ள்) எண்ணிய - கருதப்பட்ட, இவற்றில் - இவ் வொன்பதில், ஒன்று - ஒன்று, ஈநன் ஆனவன் - குறைந்தவன், தண்ணியன்-தாழ்ந்தவன், ஆதலால் - ஆகையால். நமுவினுன் - (இந்த விரதத்தை) அடையாதவ னுகின்றுன், புண்ணிய வினையினேர் - மிகுந்த புண்ணிய முடையவர்கள், என்னை - (பரமேசுர னுகிய) என்னை, பொருந்த - (முன் சொல்லிய ஒன்பது சாதநங்களை) உடையவ ராய், கண்ணிய-கந மான, விரதம் - தவத்தினை, எஞ்சாமல் - குறைவுபா டின்றி, கைக் கொள்வார், நன்கு அடைவார்கள். (எ—று) தான்-ஏ-அசை. (46)

ஏசி லிந்தவி யோகாலெ னையடைந்,
தாசை கோபம்ப யமற்ற வான்மராய்ப்,
பாச மற்றெனைப் பாவித்த பாவத்தா,
லாசி லென்மய மானுர நேகரால். 47

(இ—ள்) ஏசுஇல்-நிந்தனை இல்லாத, இந்த யோகால்- இந்த யோகத்தினுல், எனை அடைந்து - (பரமேசுர னுகிய) என்னை அடைந்து, ஆசை-ஆசையும், கோபம்-கோபமும் பயம் - பயமும், அற்ற ஆன்மர் ஆய் - இன்றியவர்க ளாய்,



பாசம்அற்று-பந்தம் நீங்கி, எனை-என்னை, பாவித்த பாவத்தால் - பாவனை செய்த தன்மையினுல், ஆசு இல் - குற்ற மற்ற, என் மயம் - எனது சொருப மாகவே, அநேகர், அநேகம் பேர், ஆனுர் - ஆனுர்கள். (எ—று) ஆல் -அசை (47)

எப்படி யார்நினைந் தடைவ ரியானவர்க்,
கப்படி யானிகழ்ந் திடுவ னுதலா,
லொப்பரு ஞானமெய் யோகு ளத்தெனைத்,
தப்பரும் பூசனை செயவே தக்கதாம். 48

(இ—ள்) யான் - (பரமேசுர னுகிய) என்னை, யார் எப்படி - யாவர் எவ்வாறு, நினைந்து - ஸ்மரித்து, அடைவர் - அடைவார்களோ, அப்படி - அவ் வாறே, யான் - நானும், அவர்க்கு - அவர்களுக்கு, நிகழ்ந்திடுவன் - விளங்குவேன், ஆதலால் - ஆகையினுல், ஒப்பு அரும் - சமாந ரகித மான. மெய் ஞாந-உண்மை ஞாந மாகிற, யோகு உளத்து - யோகத்தினை உடைய மநதில், எனை - என்னை, தப்பு அரும் - நிர்த்தோஷ மாக, பூசனை - பூசை, செய தக்கது ஆம்-செய்யத் தக்க தாம். (எ—று) ஏ-அசை. 'யான்' என்னும் முதல் வேற்றுமைச் சொல், 'என்னை' என, இரண் டாம் வேற்றுமை யாக மாற்றியது- வேற்றுமை மயக்கத்தால் என உணர்க. (48)

பொய்யில் பத்தி யாற்றுவாற்
போதம் பொருந்தும் புந்தியினுற்,
செய்யும் பூசை யேபூசை
செய்யுந் தொழிலக ளெல்லாம்விட்,

டய்யம் பண்ணி யுண்டொன்று
மாசைப் படாதா ரெனையடையு,
முய்யும் பரிசு மறைந்தபொரு
ளுங்கட் கிரங்கி யுரைத்தனனால். (49)

(இ—ள்) பொய்யில் - உண்மை யான, பத்தியால்-பத்தியினாலும், துறவால் - (சர்வ சங்கப் பரித்தியாக மாகிய) சந்நியாசத்தாலும், போதம் பொருந்தும் - ஞான முடைய, புந்தியினால் - புத்தியினாலும், செய்யும் பூசையே-செய்கின்ற பூசையே. பூசை - (ஞான) பூசை யாகும், செய்யும் - (மனோ வாக்கு காயங்களால்) செய்யப்பட்ட, எல்லாம் தொழில்கள் - சர்வ கிரியைகளையும், விட்டு-ஒழித்து, ஐயம் பண்ணி - (கர தலத்தில்) பிச்சை யேற்று, உண்டு-புசித்து, ஒன்றும் - ஒன்றிலும், ஆசைப்படாதார் - ஆசையில்லாதவர்கள். எனை அடையும் – என்னை அடைவார்கள், மறைந்த பொருள் - (இந்த) இரகசியார்த்தத்தை, உங்கட்கு இரங்கி - உங்களிடத்தில் கிருபை கூர்ந்து, உய்யும் பரிசு - மோக்ஷத்தினை அடையும்படி யாக, உரைத்தனன் - (நான்) உபதேசித்தேன். (எ—று) ஆல்-அசை-(49)

பத்தியையென் பாலுடையா
னெவ்வுயிர்க்கும் பரிவுடையா,
னொத்தநலந் தீங்கடையா
னொடுங்கியவுள் ளமதுடையான்,
புத்திமன மென்பாலே
பொருந்தியபா வனையுடையா,
னெத்தனையும் பொறையுடையா
னியாவரினு மெனக்கினியான். (50)



(இ—ள்) என்பால்-(பரமேசுர னாகிய) என்னிடத்து, பத்தியை உடையான் - பக்தியை உடையவனும், எவ் உயிர்க்கும் - சர்வ ஜீவர்களிடத்தும், பரிவு உடையான்-பிரிய முடையவனும், ஒத்த - பொருந்தாநின்ற, நலம் தீங்கு - சுகமும் துக்கமும், அடையான் - அடையாதவனும், ஒடுங்கிய - அடக்கத்தோடு கூடிய, உள்ளமது - மனதினை, உடையான் - உடையவனும், புத்தி மனம் - புத்தியும் மனமும், என்பால் - என்னிடத்து, பொருந்திய - பொருந்தி யுள்ள, பாவனை உடையான் - பாவனையை உடையவனும், எத்தனையும் - எதனிடத்தும், பொறை உடையான் - திதிக்ஷை உடையவனும் யாவனோ வவன், யாவரினும் - எல்லாரிலும், எனக்கு - எனக்கு, இனியான்-விரும்பத் தக்கவ னவன். (எ—று) 'உள்ளமது', அது, பகுதிப் பொருள் விகுதி. ஏ-அசை. (50)

பன்னியயோ கொழிவில்லான்
பற்றிலான் பாவகத்தோ,
ரின்னலிலா னாரம்பித்
திடுவதூஉ மொழிவதிலான்,
றன்னைவெரு வுதலொன்றாற்
றான்வெருவ னுனில்லா,
னென்னதியா னெனவில்லா
னென்றுமெ னக்கினியான். (51)

(இ—ள்) பன்னிய - (முன்னர்) கூறிய. யோகு - யோகத்தின்கண், ஒழிவு இல்லான் - (நிரந்தரம்) அப்யாசிப்பவனும், பற்று இலான் - யாதொரு பந்தமு மில்லாதவனும், பாவகத்து - பவித்திர முடையவனும், ஓர் இன்னல்

இலான் - ஒரு துன்ப மில்லாதவனும், ஆரம்பித்திடு வதுவும்- (ஒன்றைச் செய்ய) பிரயத்தநம செய்வதும், ஒழிவதுவும் - செய்யாதிருப்பதும். இலான் - இல்லாதவனும், ஒன்றால் - ஒரு ஜந்துவால், தன்னை வெருவுதல் - தன்னை பயப்படச் செய்வதும், தான் - தான் ஒன்றினாலே, வெருவல் - பயப்படுவதும், இல்லான் - இல்லாதவனும், யான் என்னது என - அகந்தா மமதா ரூப மான அபிமாநம், இல்லான் - இல்லாதவனும், என்றும் - எப்பொழுதும், எனக்கு இனியான் - எனக்கு பிரிய முடையவனுவன், (எ—று) தான் - அசை (51)

துயரு றுதசந் தோட மேவியே,
செயலெ லாமுதா சீந னாகியே,
யயல ராயின ரன்ப ரின்றிவா,
ழியல்பி னானெனக் கினிய னாயினான். (52)

(இ—ள்) துயர் உறுத - துன்ப மின்றிய, சந்தோடம் - சந்தோஷத்தினை, மேவி - பொருந்தி, செயல் எலாம்- கருமங்கள் எல்லாவற்றிலும், உதாசீநன் ஆகி - உதாசீநத் தன்மை உடையவனாகி, அன்பர் - அன்பன் ஆய், அயலர் ஆயினர் - தனக்கு அந்நியமா யுடையவர்கள், இன்றி - இல்லாது, வாழ் இயல்பினான் - வாழுகின்ற தன்மையினை யுடையவன் யாவனோ வவன், எனக்கு - எனக்கு, இனியன் ஆயினான் - பிரிய முடையவ னாயினன். (எ—று) ஏ-ஏ-அசை. (52)

துதியி னிந்தையிற் றுல்லிய னாயெனிற்,
றிதிய டைந்துசி னஞ்செருக் கின்றியே,
மதியி னான்றினும் வாஞ்சையு றாதுள,
வதிக வானெனக கென்றுமெய் யன்பினான். (53)



(இ—ள்) துதியில் - புகழ்ச்சியிலும், நிந்தையில் - நிந்தனையிலும், துல்லியன் ஆய் - சம முடையவனாயும், எனில் - (பரமேசுர னாகிய) என்னிடத்தில், திதி அடைந்து - நிலைபெற்று, சிநம் - கோபமும், செருக்கு - கர்வமும், இன்றி - இல்லாதவனாயும், மதியின் - புத்தியினால், ஒன்றினும் - ஒரு பொருளிடத்தும், வாஞ்சை உறாது உள - பிரியமின்றி உள்ள, அதிக வான் - மேன்மை பொருந்தியவன் யாவனோ வவன், என்றும் - எப் பொழுதும், எனக்கு - எனக்கு, மெய் அன்பினான் - உண்மை யான பிரிய முடையவனுவன். (எ—று) ஏ-அசை. (53)

வாடலின் முகமது மலர்ச்சியு மவுநமற்,
பீடுறு வித்தகம் பெற்ற தோடலங்,
கூடுத லினியவை கூறலி யாவரு,
நாடரு நிலையுடை யவர்க்கு நல்லனான். (54)

(இ—ள்) முகமது - முக மானது, வாடல் இல் - வாட்ட மின்றி, மலர்ச்சியும் - சந்தோஷ முடையவனாகியும், மவுநம் - மௌந முடையவனாகியும் பீடு உறு - பெருமை பொருந்திய, நல் வித்தகம் - நல்ல ஞாந முடையவனாகியும், பெற்றதோடு - கிடைத்ததைக் கொண்டு, அலம் கூடுதல் - திருத்தியோ டிருத்தலும், இனியவை கூறல் - இன் சொல் பேசுதலும், யாவரும் - எப்படிப்பட்டவரும், நாடு அரும் - கருதுதற்கு அரிய, நிலை உடைவர்க்கு - தன்மையினை உடையவருமா யுள்ள அவருக்கு, நான் நல்லன் - நான் பிரீதி உடையவனுவேன். (எ—று) 'முகமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி, (54)

எத்தொழில்க ளுஞ்செயினு மென்னருளி னலென்,
பத்தர்பர மப்பதம டைந்திடுவ ராலே,
தத்துவமும் வைத்தெனிலெ னேச்சரண மாக,
நித்தமுநி ராசையைய டைந்துநினை கிற்பார். (55)

(இ—ள்) என் பத்தர் - என் னுடைய பத்தர்கள். எனில் - (பரமேசுர னுகிய) என்னிடத்தில், தத்துவமும் வைத்து - ஸ்த்திர புத்தியினை வைத்து, எனே சரணம் ஆக- என்னை அடைக்கல மாக (அடைந்து), நித்தமும் - நாடோறும், நிராசையை - ஒன்றிலும் ஆசை அற்றவராய், அடைந்து - இருந்து, நினைகிற்பார் - தியாநிப்பவர்களாய், எத் தொழில்களும் - எப் படிப்பட்ட கருமங்களையும், செயினும் - இயற்றின ராயினும், என் அருளினல் - என் னுடைய கிருபையினுல், பரமபதம் - (அவர்கள்) பிரம பதத்தை, அடைந்திடுவர் - அடைவார்கள் (எ—று) ஆல்- ஏ-அசை. (55)

அடங்கு மனனய்ப் பயனென்றி
லாசைப் படாதா னளவற்ற,
விடங்கொள் வினைகள் செய்தாலும்
வீடே யெய்து மாதலினு,
லுடம்பு காணு நல்யோகி
யுண்டாம் வினையா லொருகாலு,
மிடும்பை யடையா னசைப்பா
டில்லா னெனேயே யடைந்திடுமால், (56

(இ—ள்) அடங்கு மனன் ஆய் - ஒடுங்கிய மனதுடையவ னய், பயன் ஒன்றில் - (செய்யப்பட்ட கர்மங்களின்) பலன் ஒன்றிலும், ஆசைப்படாதான் - அபேக்ஷை யற்றவன், அளவு அற்ற - கணிக்கக் கூடாத, விடம் கொள் - விஷத்திற்குச் சமமான கெட்ட, வினைகள் - கருமங்களை, செய்தாலும் - செய்யினும், வீடே யெய்தும் - மோக்ஷத்தினையே அடைவன், ஆதலினுல் - ஆனபடியினுல், உடம்பு காணு - சரீரத்தில் (அபிமானம்) இன்றிய, நல் யோகி - மேன்மை பொருந்திய யோகி யானவன், உண்டாம் - செய்யாநின்ற, வினையால் (புண்ணிய பாப) கர்மங்களினுல், ஒரு காலும் - ஓர் பொழுதும், இடும்பை அடையான் - துன்பத்தை அடையான், ஆசைப்பாடு இல்லான் - நிராசை யுடையவ னய், எனேயே அடைந்திடும்-என்னையே அடைவன், (எ—று) ஆல்-அசை. (56)

துற்றுவரு தொந்துவம யக்கவைது டைத்துப்,
பெற்றதொட மைந்தெனருள் பேறுறநி னேந்தே,
யுற்றகரு மங்கள்வினை யென்னவுரை செய்யார்,
கற்றவர்கள் வீடதென வேகருது கின்ருர். (57)

(இ—ள்) துற்று வரு - (ஒன்ருே டொன்று) சம்பந்தித்து வருகின்ற, தொந்துவ - இரண் டிரண் டாகிய (சுக துக்கம் புண்ணிய பாவம் ஜநந மரண முதலிய), மயக்கவை - மயக்கங்களை, துடைத்து - நீக்கி, பெற்றதொடு அமைந்து - (பிராப்த வசத்தால்) கிடைத்ததைப் பொருந்தித் திருப்பத னய், என் அருள் - எனது கிருபை யாகிய, பேறு உற நினேந்து - பிரயோஜநத்தைப் பொருந்த ஸ்மரித்து உற்ற கருமங்கள் -செய்யப்பட்ட கருமங்களை, கற்றவர்கள் - வித்வான்கள், வினை என்ன - கருமம் என்று, உரை செய்யார் - சொல்லார்கள், அது - (பிராரத்த வசத்தால் செய்யும்) அக் கருமங்களை, வீடு-மோக்ஷம், எனவே - என்றே, கருதுகின்ருர் - நினைக்கின்ருர்கள். (எ—று) ஏ-அசை. (57)

என்னை யேநினைந் தெனைப்பணிந் தெனையருச் சித்தென்,
றன்னை யேயறிந் தவனெனை யன்றியே சாரான்,
பின்னி யாதுமப் பெருந்தகை யிருந்திடந் தனிலென்,
சென்னி யாற்சுமந் தவர்க்குவேண் டுவதுசெய்

குவனால், (58)

(இ—ள்) என்னையே நினைந்து — (மநதில்) என்னையே தியானித்து, எனைப் பணிந்து - (காயத்தால்) என்னையே நமஸ்க்கரித்து, எனை அருச்சித்து- (வாக்கால்) என்னையே அர்ச்சனை செய்து, என்னை - அறிந்தவன் - எனது பிரம சொருபத்தை உணர்ந்தவன், எனை அன்றி - (பரமேசுரனாகிய) என்னைத் தவிர, சாரான் - (வேறு க்ஷுத்ர தேவதைகளை) அடையான், பின்-பின்னர், அப் பெருந் தகை - அந்த மேன்மை பொருந்திய மகான், இருந்த இடந்தனில்- இருக்கு மிடத்திலேயே, அவர்க்கு - அந்த ஞானிக்கு, வேண்டுவது யாதும் - வேண்டுவது எவற்றையும், என் சென்னியால் - எனது சிரசில், சுமந்து - தாங்கிக் கொண்டு போய், செய்குவன் - கொடுப்பேன். (எ—று) ஏ-ஏ-ஆல்-அசை. 'என் தன்னை' என்பதில், தன், 'இடந்தனில்' என்பதில், தன் அசை. (58)

என்ப தத்தைவிட் டிதரதே வதைகளைக் காமித்,
தின்பம் வேண்டுநர் தாமுமிங் கிதனையெய் துவரா,
லன்பி னாலருண் மூர்த்திவேண் டுநர்களு மவர்பாற்,
பின்பு வந்தெனை யறிந்துநன் முத்தியே பெறுவார். (59

(இ—ள்) என் பதத்தை விட்டு - என்னுடைய சாயுச்ச பதவியை நீங்கி, இதர தேவதைகளை - வேறு தேவதைகளை, காமித்து - வழிபாடு செய்து, இன்பம் வேண்டுநர் தாமும் - சுகத்தை விரும்புகின்றவர்களும், இங்கு இதனை எய்துவர்- இவ் விடத்து இந்த சுகத்தை அடைவார்கள், அன்பினால் - பக்தியினால், அருள் - அநுக்கிரகத்தினை, மூர்த்தி வேண்டுனர்களும் - அந்த தேவதைகளிடத்து விரும்பியவர்களும், அவர்பால்- அவர்களிடத்து (அடையப் படாவிடின்), பின்பு - பின்னர், எனை வந்து - என்னிடத்து பத்தி செய்து, அறிந்து - (எனது சொருபத்தை) உணர்ந்து, நல் முத்தியே - உயர்வினை யுடைய மோக்ஷத்தினையே, பெறுவார் - அடைவார்கள். (எ—று) 'தாமும்' என்பதில், தாம்-ஆல்-அசை. (59)



சாமவ ரெந்தக் கடவுள ருஞ்சா வில்லாதென்,
றாமம தாமென் றென்னையொ ழிந்தார் தமைவிட்டன்,
பாமக வாதிச் சுற்றமும் விட்டென் பாலன்பா,
யாமர ணந்தத் தளவுமி லிங்கத் தருச்சிப்பான். (60

(இ—ள்) எந்த கடவுளரும் - எல்லாத் தெய்வங்களும், சாமவர் - (காலாந்தரத்தில்) நாச மடைவார்கள், என் தாமமது - என்னுடைய பழமை யான ஸ்தானமானது, சா வில்லாது ஆம் - நாச மின்றிய தாம், என்று - என உணர்ந்து, என்னை - (பரமேசுரனாகிய) எனக்கு வேறா யுள்ள, ஒழிந்தார் தமை- அந்நிய தேவதைகளை, விட்டு - ஒழித்து, அன் பாம் - பிரியமா யுள்ள, மகவு ஆதி- பிள்ளை முதலிய, சுற்றமும் விட்டு - சுற்றத்தையு நீங்கி என்பால் என்னிடத்து, அன்பு ஆய் - பக்தியோடு, இலிங்கத்து - (எனது) லிங்கத்தினிடத்தில், ஆம்- (கர்ம வசத்தால்) உண்டாகின்ற, மரண அந்தத்து அளவும்-மரண மாகிய அந்திய

காலம் வரையும், அருச்சிப்பான் - பூசித்து எனது பத வியை அடைவான். (எ—று) 'தாமமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி, 'ஒழிந்தார்தமை' என்பதில், தம்- அசை. (60)

எந்தப் பதமுங் காதலி லாதே லிங்கத்தே,
வந்திப் பவன்ஞா னாத்மக மாகிம யலற்றேன்,
சிந்தைக் குளதா யெங்குந் தானுஞ் சிவலிங்க,
மந்தச் செநநந் தனிலே யறிவா லடைகின்றான். (61)

(இ—ள்) எந்தப் பதமும் - எப்படிப்பட்ட உயர்ந்த பதவியினையும், காதல் இலாது - அபேக்ஷியாது, லிங்கத்து - (என் னுடைய) லிங்கத்தை, வந்திப்பவன் -(மநோ வாக்கு காயத்தால்) வழி பாடு செய்பவன், ஞாந ஆத்மகம் ஆகி - ஞாந சொரூப மாய், மயல் அற்றேன் - மயக்கம் நீக்கிய வன், சிந்தைக்கு - (தன்) சித்தத்தில், உளது ஆய் - பொருந்திய தாய், எங்கும் - எவ் விடங்களிலும், தான் ஆம் - தனது ரூப மாகிய, சிவ லிங்கம் - சிவ லிங்கத்தினை, அந்தச் செநநந்தனிலே - அந்த ஜெந்மத்திலேயே, அறிவால்- ஞாநத்தினுல், அடைகின்றான் - அடைந்தவ னுகின்றான். (எ—று) ஏ-அசை. 'செநநந்தனில்' என்பதில், தன் அசை. (61)

பங்கமில் பத்தி யோகுமற் றெவரும்
பாவனை யாலிலிங் கத்தே,
யிங்கெனை யிறைஞ்சி யின்பமெய்ஞ் ஞாந
மெங்குமா மிலிங்கமெய் துவரா,
லங்கியிற் புனலி லம்பரந் தன்னி
லருக்கனி லனிலனிந் துவினி,



லிங்கிவை யிலிங்க மாரண தியிலே
யெனைநினைந் திறைஞ்சிடப் படுவான். (62

(இ—ள்) பங்கம் இல் - குற்ற மற்ற, பத்தியோடும்- பக்தியினேடும், எவரும் - யாவரும், பாவனையால் - பாவ னையினுலே, இங்கு எனை - இவ் விடத்து (பரமசிவ னுகிய), என்னை, லிங்கத்து - லிங்கத்தின்கண்ணே, இறைஞ்சில் - (நமஸ்க்காராதி) வழிபாடு செய்யில், இன்பம் - ஆநந்தத் தினையும், மெய்ஞ் ஞாநம் - உண்மை ஞாநத்தினையும், எய் துவர் - அடைவார்கள், எங்கும் ஆம் - சர்வ வியாபகமா யுள்ள, இலிங்கம் - லிங்க மாகிய என்னை, அங்கியில் - அக்நி யிலும், புனலில் - ஜலத்திலும்- அம்பரந் தன்னில் - ஆகா யத்திலும், அருக்கனில் - சூரியனிலும், அநிலன் - வாயுவி லும், இந்துவினில் - சந்திரனிலும், ஆரண ஆதியில் - வேதம் முதலியவைகளிலே (சொல்லியிருத்தலின்), இவை- இவைகளை, லிங்கம் - லிங்கம் என்று, எனை - (பரமேசுர னுகிய) என்னை, நினைந்து - பாவனை செய்து, இறைஞ்சிடப் படுவான் - வணங்கிடுவான். (எ—று) 'அம்பரந்தன்னில்' என்பதில்-தன்- மற்று-ஆல்-ஏ-ஏ-அசை. (62)

ஈதே லாம்வெறும் லிங்கம யமதா,
மீதெ லாமிலிங் கத்துளி ருப்பதா,
மாத லாலந்த லிங்கமெங் கேயங்கே,
காத லாற்றெழ வேகட னுகுமால். (63

(இ—ள்) ஈது எலாம்—இப் பொழுது கூறிய யாவும், வெறும் லிங்க மயமது ஆம் - கேவலம் லிங்க சொரூப மாகும், ஈது எலாம் - இந்தப் பிரபஞ்சம் யாவும், லிங்கத் துள் - (எனது) லிங்கத்துள்ளே, இருப்பது ஆம் - இருப்ப

தாகும், ஆதலால் அந்த - ஆகையினுல் அத் தகைய, லிங்கம் எங்கே அங்கே - லிங்கம் எங்கே அவ் விடத்து. காதலால் - பிரியத்தோடு, தொழவே - வணங்குவதே, கடன் ஆகும் - கடமை யாகும். (எ—று) ஆல் அசை. 'இலிங்கமயமது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி, (63)

கருத்திலா மூடர் காட்டமா திகளிற்
காண்பர்கற் றவர்களா காயத்.
தருக்கனிற் புனலிற் காண்ப ராகுதியி
லருச்சனை செய்யுமந் தணரவ்,
வெரிக்கணே காண்ப ரெங்குமாய் நின்ற
வெனதுலிங் கத்தினை நேரே,
யொருக்கிய பரம யோகிக ளென்று
மொழிவறக் காண்பர்தம் முளத்தே. (64

(இ—ள்) எங்கும் ஆய் நின்ற - சர்வ வியாபக மாக யிருக்கின்ற, எனது லிங்கத்தினை - என் னுடைய லிங்கத் தினை, கருத்து இலா மூடர் - தாத்பரியத்தினை அறியாத மூடர்கள். காட்டம் ஆதிகளில் - மரம் முதலியவற்றில், காண்பர் — பார்ப்பார்கள், கற்றவர்கள் - படித்த விவேகி கள், ஆகாயத்து - ஆகாயத்திலும், அருக்கனில் - சூரிய னிடத்தும், புனலில் - ஜலத்திலும், காண்பர் - பார்ப்பார் கள், ஆகுதியில் - ஆகுதியில் அருச்சனை செய்யும் - அருச் சிக்கின்ற, அந்தணர் - பிராமணர்கள், அவ் எரிக்கணே - அந்த அக்கிஹோத்திர அக்கியில், காண்பர் - பார்ப்பார்கள், ஒருக்கிய - (மனோ) நிக்ரகஞ் செய் துள்ள, பரம யோகி கள் - மேலான யோகிகள், என்றும் - எப் பொழுதும், தம் முளத்து - தமது இருதயத்திலேயே, ஒழிவு அற -



இடையீடின்றி, நேரே - சாக்ஷாத் தாக, காண்பர் - பார்ப் பார்கள். (எ—று) ஏ-அசை, (64)

நீங்காத காதலினு னின்மலபோ தம்பயக்கு,
மோங்கார மாதலினல் லுருத்திரியந் தானுதல்,
பாங்காக வத்தியயன வானுகிப் பரித்தவுடல்,
போங்காலத் தளவுநிரந் தரயோகம் புரிந்திடுவான்.
(65

(இ—ள்) நீங்காத காதலினுல் - மாறுத பத்தியினுல், நின்மல போதம் - நின்மல மாகிய ஞானத்தை, பயக்கும் - கொடுக்கின்றது, ஓங்கார மாதலின் - பிரணவ மானபடி யால் (அதனை ஆதல்), நல் உருத்திரியம் ஆதல் - சிரேஷ்டம் பொருந்திய ஏகா தச ருத்திரியம் ஆதல், பாங்கு ஆக - உயர்வு ஆகிய, அத்தியயனவான் ஆகி - அத்தியயனத்தை உடையவ னுய், பரித்த உடல் - தாங்கப்பட்ட சரீரம், போம் காலத்து அளவும் - வியோக மாகும் பரியந்தம், நிரந்தரம் - இடையீ டின்றி, யோகம் புரிந்திடுவான் - யோகத்தை அநுஷ்டித்துக் கொண் டிருப்பான். (எ—று) தான்-அசை. (65)

காமர மெங்குங் காமர கன்ருர் காசிக்கே,
யாமா ஞுந்தத் தளவுமி ருப்பா ரங்காவி,
போமள வுற்ருர் போய்வர வுற்ருர் புரையற்ருேர்,
காமரை வென்ருர் தாமரை வென்ருர் கழல்கணடே.
(66

(இ—ள்) எங்கும் - எவ் விடங்களிலும், காமரம் - சோலைகள், அகன்ருர் - விரிவா யுள்ள, காமர் - அழகு பொருந்திய காசிக்கு - காசிக் க்ஷேத்திரத்தில், ஆம் - உண்

டாகின்ற, மரண அந்தத்து அளவும் - மரணம் வரும் அள வும், அங்கு இருப்பார் - அக் காசியிலேயே வசிப்பவர் களும், ஆவி போம் அளவு - பிராணன் நீங்குகிறவரை, உற்ருர் - பொருந்தி யிருப்பவர்களும், போய் வர உற்ருர்- (காசி க்ஷேத்திரத்திற்கு) போய் திரும்பினவர்களும், புரை அற்ருேர் - குற்ற மற்றவர்க ளாக இருந்து, தாமரை வென்ருர் - தாமரை மலரை வென்ற பரம சிவத்தினது, கழல் கண்டு - திரு வடியைப் பார்த்து, காமரை வென் ருர் - மன்மதனை செயித்தார்கள் (ஜன்ம நிவிர்த்தி யானுர்கள் என்றபடி) (எ—று) ஏ-ஏ-அசை. (66)

பொல்லா தவரு மங்காவி
போகி லென்னை விடப்போகார்,
நல்லா ரென்னை யடைவரென
நவில வேண்டு வதுமுண்டோ,
வெல்லா வுயிர்க்கும் வீடளிப்ப
னென்ருல் வினையா லிரங்காத,
வல்லா வகைகூ டினுமுயிர்விட்
டகல்வா னல்ல னறிவுடையான். (67

(இ—ள்) பொல்லாதவரும் - பாவிகளும், அங்கு ஆவி போகில் - அவ் விடத்து பிராணன் நீங்கு மாயின், என்னை விடப் போகார் - என்னை விட்டு நீங்கார்கள் (என் னையே அடைவார்கள்), நல்லார் - புண்ணியவான்கள், என்னை அடைவர் என - என்னைப் பொருந்துவ ரென்று, நவில வேண்டுவதும் - சொல்ல வேண்டுவதும், உண்டோ- உளதா, எல்லா உயிர்க்கும் - சர்வ ஜீவர்களுக்கும், வீடு அளிப்பன் - (நான்) மோக்ஷத்தைக் கொடுப்பேன், என் ருல் - என்னின், வினையால் - கருமத்தினுல், இரங்காத -



இரக்க மின்றி, அல்லா வகை-செய்யக்கூடாத இம்சையினை ஜீவர்கட்கு, கூடினும் - செய்தா முயினும், அறிவுடை யான் - ஞாநி யானவன், உயிர் விட்டு - பிராணனை விட்டு, அகல்வான் - நீங்குபவன், அல்லன் - அல்லன் (பிராணன் போன பின் வேறு தேகம் அடையான் என்றபடி.) (எ—று) (67)

அரிய மறையி லரியமறை
யாகும் பொருளீ தறிஞர்களாற்,
றெரிய நினைந்த படியெவர்க்குஞ்
செப்பப் படாது செய்தவத்தா,
லுரிய விரத முயறமற்
றொடுங்கு முள்ளத் தொடுபிரம,
சரிய முடைய பத்தனுக்கு,
நேரே சாற்றத் தகுவதாம். (68

(இ—ள்) ஈது பொருள் - இந்த வஸ்த்து (அர்த்தம்), அரிய - (அநதிகாரிகளால்) அறிய முடியாத, மறையில் - வேதங்களில், அரிய மறை ஆகும் - அதி இரகசிய மாக மறைந்து யிருப்ப தாம், அறிஞர்களால் - புத்திமான்களால் தெரிய நினைந்தபடி - தெரிந்து நினைத்த பிரகாரம், எவர்க் கும் - யாவர்க்கும், செப்பப்படாது - சொல்லக்கூடாது, செய் தவத்தால் - பூர்வஞ் செய்த புண்ணிய தவத்தால், உரிய விரதன் ஆய்-உரியதா யுள்ள கிருச்சிர சாந்தராயணுதி விரதங்களை அநுஷ்டித்தவ னுய், அறம் - தர்ம முடையவ னுய், ஒடுங்கும் உள்ளத்தொடு- ஒடுங்கிய மநதோடு விரக்த னுய, பிரமசரிய முடைய-பிரமசாரியா யுள்ள, பத்தனுக்கு- பத்தனுக்கு. நேரே - சாக்ஷாத் தாக, சாற்றத் தகுவது ஆம்-உபதேசிக்கத் தக்க தாம். (எ—று) மற்று-அசை. (68

இவணமே தனதி யோக
மியம்பித்தன் னிடத்தி ருந்த,
வுவணகே தனனை நோக்கி
யுத்தமர்க் குரைத்த யோக,
மிவனுரை செய்யத் தக்க
திலங்கிய சாந்தி நெஞ்சிற,
சிவணிய புதல்வர்க் கென்றே,
சிவனருள் செய்ய லுற்றான், (69

(இ—ள்) இவணம் - இந்தப் பிரகாரம், தனது யோகம் - தன் னுடைய யோகத்தை, இயம்பி - உரைத்து, தன் இடத்து இருந்த - தன் பக்கத்தி லமர்ந்திருந்த, உவண கேதனனை (கருடக் கொடியோ னாகிய) மஹா விஷ்ணுவை, நோக்கி - பார்த்து, உத்தமர்க்கு - (சௌநகாதி) உத்தம ரிஷிகட்கு, உரைத்த - உபதேசித்த, யோகம் - யோகத் தினை, இலங்கிய - விளங்காநின்ற, சாந்தி - உபசாந்தியை, நெஞ்சில் - மநதில், சிவணிய - பொருந்தி யுள்ள, புதல் வர்க்கு - (உங்கள்) புத்திரர்க ளாகிய மாணாக்கர்கட்கு, இவண் - இந்தப் பிரகாரம், உரை செய்யத் தக்கது . (பரம் பரை யாக) உபதேசிக்கத் தக்கது, என்று - என, சிவன் - பரம சிவன், அருள் செய்ய லுற்றான் - அநுக்கிரகஞ் செய் தனன். (எ—று) ஏ-ஏ-அசை. (69)

முனிவரே யுங்கட் கெல்லா
மொழிந்திடப் பட்ட ஞானம,
புனிதராய்ப் புதலவர்க் காகப்
பூசுர ராஞேர் கேட்ப,
வினிய நும் வாயி னலே
யிப்படி யிறப்பு மீண்டு,



செனியமு மொழிய நீருஞ்
செப்புமென் றருளிச் செய்தான் (70

(இ—ள்) முனிவரே - (சௌநகாதி) ரிஷி களே, உங்கட்கு எல்லாம் - உங்கள் யாவருக்கும், மொழிந் திடப்பட்ட - உபதேசிக்கப்பட்ட, ஞானம் - (பிரம) ஞானத்தை, புனிதர் ஆய் - பரிசுத்த மானவர்க ளாய் பூசு ரர் ஆனோர் - பிராமணர்க ளாய், புதல்வர்க்கு ஆக - மாணுக்க ராய புத்திரர்கட்கு (உபதேசித்தற் பொருட்டு,) கேட்ப - கேட்கும் பொழுது, இனிய - விரும்பத் தகுந்த, நும் வாயினாலே - உம் முடைய வாக்கினாலே, இப்படி - (யாம் உபதேசித்த) பிரகாரம், இறப்பும் - மரணமும், மீண்டு - மறுபடியும், செனியமும் - பிறப்பும், ஒழிய - நீங்க, நீரும் செப்பும் - நீங்களும் உபதேசியுங்கள், என்று - என, அருளிச் செய்தான் - (பரம சிவன்) திரு வாய் மலர்ந் தனன். (எ—று) (70)

இந்த நாரண னீச னாகிய
வென்னில் வேறல னென்றுதஞ்,
சிந்தை யானினை வார்க ளுக்குரை
செய்த யோகிது செப்பலா,
மெந்த வாருயிர் கட்கு மின்னுயி
ராகு நாரண னென்பதோ,
ரந்த மாதியி லாவெ னக்கரு
ளான தோர்வடி வாகுமால், (71)

(இ—ள்) இந்த நாரணன் - இந்த நாராயணன். ஈசன் ஆகியஎன்னில் - பரமசிவ னாகிய என்னில், வேறு அலன்

என்று-பேத மல்லன் என, தம் சிந்தையால், தமது மநதில், நினைவார்களுக்கு-நினைப்பவர்கட்கு, உரை செய்த- (பரமேசுவரனால்) சொல்லப்பட்ட, இது யோகு - இந்த யோகத்தை, செப்ப லாம் - சொல்லல் ஆகும், எந்த ஆர் உயிர்கட்கும்- எப்படிப்பட்ட நிறைந்த ஜீவர்கட்கும், இன் உயி ராகும் - விரும்பத் தக்க பிராண பூத னாகிய, நாரணன் என்பது - நாராயணன் என்று சொல்லுவது, ஓர்- ஒப் பற்ற, அந்தம் ஆதி யில்லா - உற்பத்தி நாச மில்லாத, எனக்கு - (பரமேசுர னாகிய) எனக்கு, அரு ளானது - கிருபை யாகிய, ஓர் வடிவு ஆகும் - ஓர் உருவ மாகும். (எ—று) ஆல்-அசை. (71)

ஏதமுற நாரணனை யென்னிலயல் காணும்,
பேதவிழி யாளர்பிற விப்பிணிய ருரே,
மாதவனை யானென மநத்தினினை கிற்கும்,
போதவிழி யாளர்பரி பூரணம டைந்தார். (72)

(இ—ள்) ஏதம் உற -குற்றம் பொருந்த, நாரணனை- நாராயணனை, என்னில் - (ஈசுவர னாகிய) என்னில், அயல் காணும் - அந்நிய மாகப் பார்க்கின்ற. பேத விழியாளர்- பேத புத்தி யுடையவர்கள், பிறவி பிணி - ஜநந மாகிய வியாதியி னின்றும். அருர் - தப்பார்கள், மாதவனை - மகா விஷ்ணுவை, யான் என - (ஈசுர னாகிய) நானே என்று, மநத்தில் - மநதின்கண், நினைகிற்கும் - (அபேத மாக சிந்திக்)கும், போத விழியாளர்- ஞாந மாகிய கண்ணை உடையவர்கள், பரிபூரணம் - பரிபூரண பரமாத்மா வாகிய என்னை, அடைந்தார் - அடைந்தவ ராவார்கள். (எ—று) ஏ-அசை. (72)

ஆதலில ருச்சிமினிவ் வாதியரி யானுய்த்,
காதலொடு காண்மின்மய லாகியயல் காண்பார்,



தீதுதரு மா நரகு சேர்வுறுவர் தீதா,
நீதியுறு நீசரிடை யானும்வெளி நில்லேன். (73)

(இ—ள்) ஆதலில் - ஆகையினால், இவ் ஆதி அரி - இந்த முதன்மை யான மகா விஷ்ணுவை, யான் ஆய் - (ஈசுர னாகிய) எனது சொரூப மாகவே, அருச்சிமின் - அருச்சனை செய்யுங்கள், காதலொடு - பிரிய மாக, காண்மின் - (கண்ணால்), பாருங்கள், மயல் ஆகி - (அஞ்ஞாநத்தினால்) மயக்கத்தினை அடைந்து, அயல் காண்பார் - (எனக்கு) அந்நிய மாகப் பார்ப்பவர்கள், தீது தரு - துன்பத்தைத் கொடுக்கின்ற, மா நரகு - பெரிய நரகத்தை, சேர்வுறுவர் - அடைவார்கள், தீது ஆம் - குற்றம் பொருந்திய, நீதி யுறும் - தன்மையை உடைய. நீசரிடை - இழிவு பொருந்தியவர்களிடத்து, யானும் - (பரமசிவனாகிய) நானும், வெளி நில்லேன்-வெளி யாகப் புலப்படேன். (எ—று) (73)

நான்மறை யந்தணர் நாய்வதை செய்தத,
னூன்மிசை கின்றவ ரோதினர் மூடப்,
பான்மைய ரும்மரி யைப்பழி யாதம்,
மேன்மைசெய் பத்தரை வீடுறு விப்பன. (74)

(இ—ள்) நால் மறை அந்தணர் - நான்கு வேதங்களையு முணர்ந்த பிராமணர்களும், நாய் வதை செய்து - நாயைக் கொன்று, அதன் ஊன் - அதன் மாமிசத்தை, மிசைகின்றவர் - புசிப்பவரும், ஓதினர் - படித்தவர்களும், மூடப் பான்மையரும் - மூடத் தன்மை உடையவரும், அரியை - விஷ்ணுவை, பழியாது - நிந்திக்காது. அம் மேன்மை - அந்த மேன்மையினை, செய் - செய்கின்ற,

பத்தரை - (அந்த) பத்தர்களை, வீடு உறுவிப்பன் - மோக்ஷ மடையச் செய்வேன். (எ—று) (74)

மருவற் கென்னை மனம்வைத்தோன்
மாலா மிவனென் வடிவென்றே,
பரவிப் பணிவா னென்றேசெம்
பவளத் திருவாய் மலர்ந்தருளி,
யரவிற் றுயிலச் சுதனுக
மழுந்தத் தழுவ வவ்விடத்தே,
கரவுற் றருள வதிசயமாய்க்
கண்டார் மேனி கண்டிலரால். (75)

(இ—ள்) என்னை - (பரமேசுர னுகிய) என்னை, மருவற்கு - அடைதற்கு, மனம் வைத்தோன் - மனம் வைத்தவன், மா [லாம் இவன் - மகா விஷ்ணு வாகிய இவனே, என் வடிவு என்று - எனது ரூப மென்று, பரவிப் பணிவான் - தோத்திரம் செய்து வணங்குவோன், என்று-என, செம் - சிவந்த, பவள திரு வாய் - பவளம் போன்ற அதரத்தை யுடைய பரம சிவன். மலர்ந்தருளி - சொல்லி, அரவில் துயில் - சேஷ சயனத்தில் நித்திரை செய்கின்ற, அச்சுதன் - மகா விஷ்ணுவினது, ஆகம் - சரீரத்தை, அழுந்தத் தழுவ - கட்டி ஆலிங்கனம் செய்ய, அவ் விடத்தே - அந்த விடத்திலேயே, கரவுற் றருள - மறைந்து விட, அதிசயம் ஆய் - ஆச்சரிய மாக, கண்டார் - பார்த்தார்கள், மேனி கண்டிலர் - (அவர்க ளுடைய) திரு மேனியை காணவில்லை. (எ—று) ஏ-ஏ ஆல்-அசை, (75)

தன்ப ராபர மாகிய வடிவினைத்
தவிர்ந்தொரு தவனுகி,



முன்பு தோன்றிய வடிவதாய் முகுந்தனு
முனிவரை முகநோக்கித்,
துன்ப வேரற வருளினு லுமக்கிறை
சொன்னவிச் சுடர்ஞான,
மன்ப ராயற மறிபுதல் வர்க்கறி
வியுமென வருள்செய்தான், (76)

(இ—ள்) முகுந்தனும் - மகா விஷ்ணுவும், தன் பராபரம் ஆகிய - தனது பரத்துக் கெல்லாம் பர மாகிய, வடிவினை தவிர்ந்து - ரூபத்தை விட்டு, முன்பு தோன்றிய - பூர்வம் சௌனகாதி ரிஷிகளுக்கு தோன்றிய, வடிவது ஆய் - வடி வாகவே, ஒரு தவன் ஆகி-ஒரு தவ முனி யாய்த் தோன்றி, முனிவரை - சௌனகாதி ரிஷிகளது, முகம் நோக்கி - முகத்தைப் பார்த்து, துன்ப வேர் அற - துன்ப மூலம் நாச மடைய, அருளினுல் - கிருபையினுல், உமக்கு - உங்களுக்கு, இறை சொன்ன - பரம சிவன் திரு வாய் மலர்ந் தருளிய, இச் சுடர் ஞானம் - இந்த பிரகாசம் பொருந்திய ஞானத்தை, அன்பர் ஆய் - பக்தர்களா யுள்ள. அறம் அறி - தருமத்தை உணருகின்ற, புதல்வர்க்கு - மாணுக்கர்கட்கு, அறிவியும் - உபதேசஞ் செய்யுங்கள், என-என்று, அருள் செய்தான் - அநுக்கிரகஞ் செய்தான். (எ—று) 'வடிவது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. (76)

ஈசன தாய வந்த திலங்கிய பரம ஞான
மாசிலந் தணனு மாகி யாகித வலனுகி,
நேசனு யடங்கி யுள்ள நெஞ்சனு நிமல னுக்குப்,
பேசலா மென்று கண்ணன் பினனரு மருளிச்
செய்தான் (77)

(இ—ள்) கண்ணன் - மகா விஷ்ணு வானவர், ஈச னது ஆய வந்தது - ஈசுவர னுடைய தாய் வந்த, இலங்கிய- பிரகாசம் பொருந்திய, பரம ஞானம் - பிரம ஞானத்தை, ஆசு இல் - குற்ற மற்ற, அந்தண னும் ஆகி - பிராமண னுயும், ஆகித அநலன் ஆகி - அக்கினி ஹோத்திர முடை யவ னுயும், நேசன் ஆய் - பக்தி உள்ளவ னுயும், அடங்கி உள்ள நெஞ்சன் ஆம் - ஒடுங்கிய மன துடையவ னுயும், நிமலனுக்கு - (உள்ள) நின்மலனுக்கு, பேச லாம் என்று - உபதேசிக்கலாம் என, பின்னரும்-மீண்டும், அருளிச் செய் தான் - திரு வாய் மலர்ந்தருளினுன். (எ—று) 'ஈசனது' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. (77)

யோகிக ளியாவ ருக்கு முத்தம யோகி தானே,
யாகிய முகுந்த னிவ்வா றருளியங் கவரை நீங்க,
வேகவீ சனையு நாரா யணனையு மிறைஞ்சி யெல்லா,
மோகவே தனையு மாறி முனிவர்முற் பதிய டைந்தார். (78)

(இ—ள்) யோகிகள் யாவருக்கும் - யோகிகள் எல் லாரிலும், தானே உத்தம யோகி யாகி, தானே உத்தம மான யோகி யாகிய, முகுந்தன் உம் - மகா விஷ்ணுவும், இவ் வாறு அருளி - இந்தப் பிரகாரம் திரு வாய் மலர்ந் தருளி, அங்கு - அவ் விடத்தி லிருந்து. அவரை - அந்த (சௌனகாதி) ரிஷிகளை, நீங்க - (விட்டு தமது வைகுண் டத்திற்குச்) செல்ல, ஏக - அபேத ரூப மான, ஈசனையும் - பரம சிவனையும், நாராயணனையும் - மகா விஷ்ணுவையும், இறைஞ்சி - நமஸ்கரித்து- மோக வேதனை - மயக்க ஏது வான ஜநந துக்கம், எல்லாம் மாறி - யாவும் ஒழிந்து. முனிவர் - சௌனகாதி ரிஷிகள், முன் பதி அடைந்தார் -



முன்னே தாங்க ளிருந்த ஊரை அடைந்தார்கள். (எ—று) உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. (78)

சனற்கு மாரன்சம் வத்தகற் குரைத்தனன்
சநந்தனன் புலகற்குப்,
புனிற்றி தீர்முநி கௌதமன் பொருட்டிது
புகன்றனன் புகன்றுனிங்,
கநித்த மற்றுள விதுபாத் துவாசனுக்
கங்கிரா வளித்தானேர்.
செநிப்பி லாவிது கபிலமா முநிபஞ்ச
சிகற்குரைத் தனன்முன்னே. (79)

(இ—ள்) சநத் குமாரன் - சநத் குமார முநி யான வர், சம்வத்தகற்கு - சம்வத்தக முநிவருக்கு, உரைத்தனன்- (இந்த பிரம ஞான மாகிய ஈசுர வாக்கியத்தை) உபதேசித் தார், சநந்தநன் - சநந்தந முநிவ ரானவர், புலகர்க்கு - புலக முநிவருக்கு, புகன்றனன் - (இதனை) உபதேசித்தார், புனிற்றிதீர் முநி - பரிசுத்த ரான (புலக) முநி யானவர், கௌதமன் பொருட்டு - கௌதம ரிஷிக்கு, இது புகன் றுன் - இதனை உபதேசித்தார், இங்கு- இவ் விடத்து, அநித் தம் அற்றுள இது - நித்தியமா யுள்ள இந்த (ஞானத்தினை) பரத்து வாசனுக்கு - பரத்வாச முநிவருக்கு, அங்கிரா - அங்கிரா ரிஷி யானவர், அளித்தான் - உபதேசித்தான், ஓர் செநிப்பு இலா இது - ஒரு வித பிறப்புக்கு மேது வில் லாத இதனை, மா கபில முநி - பெரியகபில முநி யானவர், பஞ்சசிகற்கு - பஞ்சசிக முநிவருக்கு, முன்னே - முதலில். உரைத்தனன் - இந்த (ஞானத்தை) உபதேசித்தான் (எ—று) (79)

எந்தை யாகிய பராசரன்
சநகனா லிலங்கிடப் பெற்றானென்,
றந்தை பாலருந் தவஞ்செய்வான்
மீகியுந் தானறிந் திடப்பெற்றா,
னந்த கோபனன் மனையினின்
மதலையாய் நடித்தநா ரணன்குந்தி,
மைந்த னாகிய பார்த்தனுக்
கருளினான் வழங்கினன் மான்றேர்மேல்(80)

(இ—ள்) எந்தை யாகிய - எமது பிதா வாகிய, பராசரன் - பராச ரானவர், சநகனால் - சநக மகரிஷியால் இலங்கிடப் பெற்றான் - உபதேசிக்கப் பெற்றனன், என் தந்தைபால் - என் தந்தை யாகிய பராசரிடத்து, அரும் தவஞ் செய் -அருமை யான தபத்தைச் செய்கின்ற, வான் மீகியும் - வான் மீகி ரிஷியும், அறிந்திடப் பெற்றான் - உபதேசிக்கப் பெற்றனன், நந்தகோபன் - நந்தகோபரது. நல் மனையினில் - நல்ல கிரகத்தில், மதலை ஆய் - குழந்தை யாக, நடித்த - விளை யாடிய, நாரணன் - மகா விஷ்ணு வானவர்; குந்தி மைந்தன் ஆகிய - குந்தி புத்திர னாகிய, பார்த்தனுக்கு - அர்ச்சுநனுக்கு, மால் - பெருமை பொருந் திய, தேர் மேல்-ரதத்தின் மீது (சாரதி யாக விருந்து), அருளினால் - கிருபையினாலே; வழங்கினன் - உபதேசித்தான். (எ—று) தான் - அசை, (80)

ஏம மாகவெ னக்கிது ருத்திர,
வாம தேவன்வ ழங்கின னாதலாற்,
காம னீறெழக் காய்ந்தவக் கண்ணுத,
றாம மேசர ணாகத்த ருவதே. (81)



(இ—ள்) எனக்கு - (வியாச முநி யாகிய) எனக்கு, இது - இந்த (பிரம ஞானத்தை), ஏமம் ஆக - உயர் வாக, ருத்திர வாமதேவன்-ருத்திர வாம தேவ ரானவர், வழங்கினன் - உபதேசித்தார், ஆதலால் - ஆகையினால், காமன் நீறு எழ - மன்மதனை பஸ்ப மாகும்படி யாக, காய்ந்த - (தமது நெற்றிக் கண்ணினாலே) கோபித்த, அக் கண்ணுதல் -அந்த நெற்றிக் கண்ண ராகிய பரமேசுரனது, தாமமே- (திரு வடி யாகிய) இடமே. சரண் ஆகத் தருவது- (எனக்கு) அடைக்கல மாகும். (எ—று) ஏ-அசை. (81)

வேறாக நானிந்த வெம்பிறவி வேரறுப்பா,
னேறாளு மிறைவனே யென்றவனை யடைகின்றேன்,
மாறாத வன்போடு மனைமக்கள் கிளையொடுநீ,
ராறாருஞ் சடைமுடியா னடியடைமி னிதுவேண்டில். (82)

(இ—ள்) நான்வே றாக - நான் (எனக்கு) அந்நிய மாக உள்ள, இந்த வெம் பிறவி - இந்த கொடி தாகிய ஜந நத்தினது, வேர் அறுப்பான் - மூலத்தை நாசஞ் செய்தற் பொருட்டு, ஏறு ஆளும்-ரிஷபத்தை வாகந மாக உள்ள, இறையவனே - பரம சிவனே, என்று - என (மந வாக்கு காயங்களால் பக்தி செய்து), அவனை அடைகின்றேன் - அந்த பரம சிவத்தையே - (யான் அடைக்கல மாகப்) புகுகின்றேன், நீர் இது வேண்டில் - (ஆதலால் சௌநகாதி ரிஷிக ளாகிய) நீங்களும் இதனை யடைய விருப்ப முள்ளவ ராயின், மாறாத அன்போடும் - நிலைபெற்ற பக்தியோடும், மனை மக்கள் - மனைவி பிள்ளைகள், கிளையோடும் - சுற்றத்

தார்களோடும், ஆறு ஆரும் - (கெங்கா) நதி பொருந்திய, சடை முடியான் - சடா பாரத்தை யுடைய பரம சிவனது. அடி - திரு வடியை, அடைமின் - அடையுங்கள். (எ-று)
(82)

ஒழியா து நற்கரும யோகத்தா லுருத்திரனை,
வழிபாடு செய்யுமென மாமுநிவன் மறைப்பொருளை,
மொழிவானை நேரேயம் முக்கணிறை யெனமுநிவர்,
கழிகாத லொடுபணிந்து கைதொழுது களிகூர்ந்து.(83)

(இ—ள்) ஒழியாது - இடைவிடாது, நல் கரும யோகத்தால் - நல்ல கரும யோகத்தினுல், உருத்திரனை - பரமசிவனை, வழிபாடு செய்யும் என - பக்தி செய்யுங்கள் என்று, மா முநிவன் - மேன்மை பொருந்திய வியாச பகவான் சொல்ல. முநிவர் - (சௌநகாதி) ரிஷிகள், மறைப் பொருளை - வேத அர்த்தத்தை, மொழிவானை - உபதேசித்த வியாச பகவானை, நேரே - சாக்ஷாத், அம் முக் கண் இறை என - அந்தப் பரம சிவனே என்று, கழி - மிகுந்த, காதலொடு - பக்தியோடு, பணிந்து - (கீழே விழுந்து) நமஸ்காரஞ் செய்து எழுந்து, களி கூர்ந்து - மிக மகிழ்ச்சி யடைந்து, கை தொழுது - கைகளை கூப்பி. (எ—று) (83)

ஓதம் பற்றியோ குணர்ந்துறங் கமலநீ
யுன்றிரு வருளாலே,
போதம் பெற்றவா னவர்களும் பெறலரும்
புராணபூர ணன்செம்பொற்,
பாதம் பற்றியப் பவக்கடல் கடக்கநற்
பத்திபெற் றனமாற்று,
லேதும் பெற்றனம் பெறுதடுதான் றில்லையென்
றிணையடி பணிவுற்றார், (84)



(இ--ள்) ஓதம் பற்றி நீ - சமுத்திரத்தினைப் பொருந்திய தேவரீர், யோகு - யோகத்தினை, உணர்ந்து - அறிந்து, உறங்கு - அந்த யோகத்திலேயே நித்திரை செய்கின்ற, அமல - அமலனே, உன் திரு அருளாலே - தேவரீருடைய கிருபையினுலே, போதம் பெற்ற - ஞானத்தை அடைந் துள்ள, வானவர்களும் - தேவர்களும், பெறல் அரும் - அடைதற்கு அருமை யான. புராண பூரணன் - பழையோ னுகிய பரம சிவனது, செம் பொன் - சிறந்த பொன் போன்ற, பாதம் பற்றி-திரு வடியை அடைந்து; அப் பவக் கடல் - அந்த ஜநந சமுத்திரத்தினை, கடக்க - தாண்டுதற்கு, நல் பத்தி பெற்றனம் – நல்ல பத்தியைப் பெற்றோம், ஆற்றுல் - அக் காரணத்தினுல், ஏதும் பெற்றனம் - எல்லாவற்றையும் அடைந்தோம், பெறுதது - இனி அடையவேண்டியது, ஒன்று இல்லை - யா தொன்று மில்லை, என்று - எனப் புகன்று, இணை அடி - இரண்டு திரு வடிகளிலும். பணி வுற்றார் - (விழுந்து) நமஸ்காரஞ் செய்தார்கள். (எ—று)
(84)

தீதின் முத்தியைச் சேரவேண் டினர்சிவ னடிக்கே.
யாதி லர்ச்சனை செய்தன ரந்தவெல் லையிலாப்,
போத முற்றநற் கருமயோ கினைப்புதல் வர்களா,
யாத ரிப்பவர்க் குரைமினென் றருண்முநி பணித்தான்.
(85)

(இ—ள்) தீது இல் - குற்ற மற்ற, முத்தியை - மோக்ஷத்தினை, சேர வேண்டினர்-அடைய விரும்பியவர்கள், சிவ னடிக்கு - பரம சிவ னுடைய திரு வடிக்கு, ஆதில்- முதலில், அருச்சனை செய்தனர் - அருச்சித்தார்கள், அந்த

எல்லை இலா - (ஆனதால்) அந்த அளவிட முடியாத, போதம் உற்ற - ஞானம் பொருந்திய. நல் கரும யோகினை - நல்ல கரும யோகத்தை, புதல்வர்க ளாய் - மாணாக்கர்க ளாக இருந்து கேட்க, ஆதரிப்பவர்க்கு - விரும்புகின்றவர் களுக்கு, உரைமின் - (நீங்கள்) உபதேசியுங்கள், என்று - என, அருள் முனி - கிருபையை யுடைய வியாசர், பணித் தான் - கட்டளை இட்டார். (எ-று) ஏ-அசை. ஆதியில் என்பது, ஆதில் என யிகரம் குறைந்து வந்தது. (85)

மாமறையின் மெய்ப்பொருளை மாலொடுசநற்கு
மாரன்முத லார்க்கிறைவ ழங்குதிரு வார்த்தை,
யாமைவடி வைக்கொடரி யமுமத நத்தன்
றருமுநிவர் கட்கருளு மறிவதனை யன்பாற்,
றாமதமில் சௌனகனை யாதிமுநி வர்க்குத்
தந்தருளு கென்றுதலை யாலுறவ ணங்கித்,
தோமின்முநி சூதனுரை செய்யவவர் கட்குச்
சுருதிகடெ ரிந்தமுநி சொன்னபரி சீதால. (86)

(இ—ள்) மா மறையின் - பெருமை பொருந்திய வேதங்களின், மெய்ப் பொருளை - சத்திய மான அர்த் தத்தை, மாலொடு - மகா விஷ்ணுவோடு, சநத் குமாரன் முதலார்க்கு, - சநத் குமாரன் முதலியவர்கட்கு, இறை - பரம சிவன், வழங்கு - உபதேசித்த, திரு வார்த்தை - அழ கிய வாக்கியங்களை, ஆமை வடிவைக் கொடு - கூர்ம அவ தாரம் எடுத்து, அமுத மதநத்து - அமிர்தத்தைக் கடைய மத் தாக இருந்த, அரி - மகா விஷ்ணு வானவர், அன்று அரும் - அக்கால் மேன்மை பொருந்திய, முனிவர்கட்கு — ரிஷிகளுக்கு, அருளும் - உபதேசித்த, அறிவதனை - ஞானத்



தினை, அன்பால் - பிரியத்தினால், தாமதம் இல் - அதி விரை வாக, சௌனகனை ஆதி - சௌனகன் முதலிய, முனிவர்க்கு - முனிவர்களுக்கு, தந்தருளுக - உபதேசிப்பீராக, என்று - என, தலையால் - சிரசினால், உற வணங்கி - பொருந்த வணங்கி, தோம் இல் - குற்ற மற்ற, சூத முனி - சூத மகா முனிவர், உரை செய்ய - கேட்டுக் கொள்ள, அவர்கட்கு - அந்த சௌனகாதி ரிஷிகளுக்கு, சுருதிகள் தெரிந்த - வேதங் களை அறிந் துள்ள, முனி - வியாச பகவான், சொன்ன - உபதேசஞ் செய்த, பரிசு - தன்மை, ஈது - இது வாம். (எ—று) ஆல் - அசை. 'அறிவதனை' என்பதில், அது, பகு திப் பொருள் விகுதி, (86)

மூவர் தேடிறைசநற்கு மாரன்முதன்
முநிவர் கட்குமொழி கீதையிங்,
கியாவ ரோதினரி தன்பொ ருட்டுணிவ
ரியாவர் கேட்பவரி யாவர்தம்,
பாவம் வேரொடுப றிந்து நல்லபர
மப்பதம் பெறுவ ராதலான்,
மேவு மன்பினொடு மோத மீளுதலில்
வீடு வேண்டினன்வி ரும்புவான். (87

(இ—ள்) மூவர் தேடு-(பிரம்மா விஷ்ணு ருத்திரன்) ஆகிய மும் மூர்த்திகளும் காண முடியாத, இறை—பரம சிவன், சநத் குமாரன் முதல்—சநத் குமாரன் முதலிய, முனி வர்கட்கு—ரிஷிகளுக்கு, மொழி—உபதேசிக்கப்பட்ட, கீதை*(ஈசுர)கீதையினை, இங்கு—இவ் விடத்து, யாவர் ஓதி னர் - எவர் படித்தவர்களோ, யாவர் இதன் பொருள் — எவர் இதன் அர்த்தத்தை, துணிவர்—நிச்சயம் செய்தவர்

களோ, யாவர் கேட்பவர் – எவர் இதை சிரவணஞ் செய்தார்களோ, தம் பாவம்-(அவர்கள்) தம் முடைய பாவங்கள் யாவும், வேரொடு–அடியோடு, பறிந்து – நாச மாகி, நல்ல – சிரேஷ்ட மான, பரம பதம் பெறுவர் – பிரம பதத்தை அடைவார்கள், ஆதலால் – ஆகையால், மேவும்– பொருந்திய, அன்பினொடு – பிரியத்தோடு, மோதம் – முயற்சி செய்து, மீளுதல் இல் – புநராவிர்த்தி இன்றிய, வீடு – மோக்ஷத்தை, வேண்டினன் – அடைய நினைபவன், விரும்புவான் – (இதனை சிரவணஞ் செய்ய) விரும்புவான். (எ—று)

(87)

11–யோக அத்தியாயம் முற்றுப் பெற்றது.

(ஆக விருத்தம் 338)

சிவப் பிரகாசம் என்னும் ஈசுவர கீதை முற்றுப் பெற்றது.

சர்வஞ் சின்மயம்.

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிக ஸ்வாமிகளவர்கள்
மாணுக்கர்,
சத சாஸ்திர கர்த்தா
ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிக ளவர்கள்
எழுதிய பத உரை.

வெகுதாந்ய ஞு (1938) மாசிமீ 25உ புதன் கிழமை
அன்று எழுதி முடிந்தது.

முற்றுப் பெற்றது.

---



ஈசுவர கீதை.

| | அத்தியாயப் பெயர். | சுலோகம் | கவி |
|---|---|---|---|
| 1. | இருடிகள் விநவல் | 51 | 30 |
| 2. | சாங்கிய யோகம் | 56 | 55 |
| 3. | சம்பிரதாயம் | 24 | 15 |
| 4 | பத்திமை | 34 | 21 |
| 5. | விசுவ ரூபம் | 46 | 40 |
| 6. | சிவ சத்தியின் செயல் உரைத்தல் | 51 | 25 |
| 7. | தத்துவம் நிசம் விபூதி | 32 | 20 |
| 8. | பிரபஞ்ச சர்வ காரண புராண புருஷப் பிரதிபாதநம் | 18 | 13 |
| 9. | மாயா விகாரம் | 20 | 18 |
| 10. | தத்துவ தரிசநம் | 17 | 14 |
| 11. | யோகம் | 146 | 87 |
| | ஆக சுலோகம் கவி | 495 | 338 |

| பக். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 15 | கோசரித்திற்கு | கோசரித்தற்கு |
| 16 | 18 | கூடிய | சூடிய |
| 20 | 18 | யரது | யாது |
| 24 | 21 | ஈசுசனே | ஈசுரனே |
| 28 | 15 | அன்புடைட்மை | அன்புடைமை |
| 35 | 12 | யாநத | யர்ந்த |
| ,, | 17 | டோடர்பிலர் | டொடர்பிலா |
| 37 | 3 | செறிமெப் | செறியுமெப் |
| 75 | 12 | வாகாயந்தைக் | வாகாயத்தைக் |
| 77 | 14 | கேவனுல | கேவனுல் |

| பக். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ,, | 16 | யொருககிப் | யொருக்கிப் |
| 79 | 24 | கத்தும | கத்தும் |
| 91 | 10 | னெப்போழுதும் | னெப்பொழுதும் |
| 93 | 25 | சூாதி | காதி |
| 94 | 21 | ருவதில | ருவதில் |
| 95 | 23 | கிரங்க | சிரங்க |
| 97 | 3 | பகினமன | யினமான |
| ,, | 15 |  | ஆகாசந்தனில், தன் அசை |
| 130 | 11 | கணத்திலுத | கணத்திலுத் |
| 131 | 20 | பனியாலே | பணியாலே |
| 132 | 14 | வீழ்பவா | வீழ்பவர் |
| ,, | 15 | ளின்று | னின்று |
| 136 | 1 | ழும்பிரம | மும்பிரம |
| 141 | 22 | வியக்கரிலவச் | வியக்கரில்வச் |
| ,, | 24 | னெந்திரத்தில | னெந்திரத்தில் |
| ,, | 25 | மாதவரில் | மாதவரிவ் |
| 156 | 15 | தொறுற | தொறுற் |
| 158 | 12 | எ-அசை | ஏ-அலச |
| 187 | 24 | சூரியமாய் | சூியமாய் |
| 196 | 24 | சுத்கம் | சுத்தம் |
| 204 | 2 | யாதினுல | யாதினும் |
| 206 | 12 | ணுர்வது | னுர்வது |
| 220 | 2 | பிரயத்தநம | பிரயத்தநம் |
| 222 | 12 | ரரயினும் | ராயினும் |
| 226 | 19 | செநந்தனில் | செநநந்தனில் |
| ,, | 22 | வின்பமெய் | லின்பமெய் |
| 227 | 19 | ஈதேலாம் | ஈதெலாம் |
| 232 | 16 | நெஞ்கில் | நெஞ்சில் |

## ஈசுவர கீதை 338க்கு முதற் குறிப்பு அகராதி.

ஈசுவர கீதை பாட்டு முதற் குறிப் பகராதி முற்றுப்பெற்றது.
அத்தியாயம் 11க்கு பாட்டு 338
59 முதல் எழுத்து

## சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு வசநம்

23. வியாச தாத்பரிய நிர்ணயம் 0—50
24. நைஷ்க் கர்மிய சித்தி 0—50
25. வேதாந்த சித்தாந்த முக்தாவலி 0—50
26. ஸ்வாராஜ்ய சித்தி 0—50
27. பகவற் கீதை, 15வது அத்தியாயம் பத உரை தமிழ்க் கவி உரை, மூர்க்க சதகம் பத உரை 0—50
28. வேதாந்த பரிபாஷை 0—44
29. மண்டல பிராஹ்மண உபநிஷத், ராஜ யோக [பாஷ்யம் 0—25
30. ஈசாவாஸ்ய உபநிஷத், சங்கர பாஷ்யம் 0—25
31. வேதாந்த சஞ்ஞா 0—13

## இயற்றிய தமிழ் நூல்.

32 சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி [பரிமள தீப உரை 1—50
33. சப்ததா சப்ததி: விம்சதி: ஸ்தோத்திர ரச மஞ்சரி [நுந்தா ஒளி உரை 0—75
34. திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, [மணி மாலை சிறு சுடர் உரை 0—75
35. திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி, நுந்தா ஒளி உரை. 0—25
36. மந்திர உபதேசம். 0—25
37. சூட்டுக் கோல், கட்டாரி புச்சம் கண்டநம் வசநம் 1—00
38. வடநாட்டில் ஹரித் துவாரக் கும்ப மேளாவும், [தென்னாட்டில் சாதுக்கள் மேளாவும் வசநம். 0—50
39. சாது சங்க நிறுவல் விழா வைபவம் வசநம். 0—13
40. மடங்களின் உத்பத்தியும், [தற்போதுள்ள நிலைமையும் 0—13
41. அதிஷ்டாநத்தி விருப்பவர்கட்கும், [அத்வைதிகட்கும் ஓர் அறிக்கை. 0—25
42. சர்துத் தச வித்யாப் பிரகாசிகை வசநம். 0—50
43. காசிகாநந்த விஜயம் வசநம் 0—25
44. மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி கவி (92) 0—50
45. ஒன்பது துறவியர் பாடிய அருட்பா மாலை [கவி (288) 1—00

## தனி புத்தகம்.

1. பகவற் கீதை கவி 545. 1—25
2. ஈசுவர கீதை கவி 338. 0—25
3. பிரஹ்ம கீதை கவி 547. 0—33

4. பஞ்சதசி கவி 796. 0—63
5. பக்தி சதக ஸ்தோத்திரம்
[ஸ்தோத்திரப் பிரகாச உரை. 0—19
6. திரு எம் பாவை திருப் பள்ளி எழுச்சி பத உரை. 0—25
7. கைவல்ய நவநீதக் கவி 288. 0—56
8. திருக் களர் வீர சேகர ஞான தேசிக சரிதம் வசநம் 1—00
9. கைவல்ய நவநீதம் ஸ்ரீ அருணாசல
[ஞான தேசிகர் பத சார உரை. 3—00

## அச் சாக வேண்டிய நூல்கள்.

1. யுக்தி பிரகாசம் ஹிந்தி மொழி பெயர்ப்பு.
2. பேததிக் காரம் கவி. 3. சத் கிரியை உரை வசநம்.
4. விவேக சூடாமணி சம்ஸ்கிருதம் பத உரை.
5. பிரபோத சுதாகரம் சம்ஸ்கிருதம் பத உரை.
6. கணேச கவசம் சம்ஸ்கிருதம் பத உரை.
7. மேற்படி தமிழ் கவி உரை.
8. சாஸ்திர சித்தாந்த வேச தாத் பரிய சங்கிரகம்சம்ஸ்கிருதம் (56 விஷய விசாரம், 4 பரிச்சேதம்) தமிழ் வசநம்.
9. தர்க்க சங்கிரகம்—தீபிகை யுடன் (தர்க்கம்) சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
10. காணாத சித்தாந்த சந்திரிகை
சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு வசநம் (தர்க்கம்).
11. சப்ததா சப்ததி: சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு வசநம்
தர்க்கம்.
12. லௌகிக நியாயம் சங்கிரகம், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு வசநம் 400 நியாயம்.
13. சிவசங்கராவதாரம், சுலோகம் உரை.
14. ஸ்திரி புருஷ ஜநந மரண ரஹஸ்யம் வசநம்.
15. மகாத்ம சரிதாமிருத வசநம்.
16. கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபாரம் வசநம்.
17. தாயும், தநயனும் வசநம், வேதாந்தம்.
18. கட்கம் கொண்ட காளியை ஜயிக்கும் காமாரி-வசநம்.
சோமசுந்தர மாலைக்கும் கண்டநம்.
19. நாநா ஜீவ வாதக் கட்டளையின் சாரமும்,
[சக்தி விவேசநமும்.
20. பட்டிநத்தார் பாடல் உரை.
21. பல கேள்வி சமாதாந லட்டர்கள்.
22. உண்மைக் கடவுள் வசநம்.
23. சந்யாச விதி. 24. சமாதி விதி.